# அமுல் டின்களில் நீங்கள் நினைப்பதைவிட குழந்தைகளுக்கான உணவு அதிகம் இருக்கிறது

அமுல் பாலுணவு 500 கிராம், 1000 கிராம் டின்களில் கிடைக்கிறது. 500 கிராம் டின்னில் 1 பவுண்டைவிட, 46 கிராம் அதிக பாலுணவு உள்ளது. அதேபோல் 1000 கிராம் டின்னில் 2 பவுண்டைவிட 92 கிராம் அதிக பாலுணவு உள்ளது. விலைகளோடு ஒப்பிடும்போது இதை எண்ணிப்பாருங்கள். அமுல் பாலுணவு மிக மிக உயர்ந்த முறையில் 'பேக்' செய்யப்பட்டுள்ளது. சுகாதாரக் கேடான பேப்பர் பாக்கெட்டுகள் கிடையா. குழந்தைகளுக்கான மிகச் சிறந்த உணவைப் பாதுகாக்க, டின்னின் உட்புறங்கள் மெழுகெண்ணெயால் பூசப்பட்டிருக்கின்றன. (அந்தப் பொன்னிறத்தைக் கவனிக்கவும்.) வாக்குவம் முறைப்படி டின்களிலுள்ள காற்று அனைத்தும் வெளியேற்றப்பட்டுள்ளது. இதனால் உங்கள் சின்னஞ்சிறு சிசுக்களுக்குத் தேவையான வைட்டமின்கள் அனைத்தும், காற்றுப் புகுவதால் ஏற்படும் அபாயத்திலிருந்து காக்கப்பட்டு, புத்தம் புதியதாக இருக்கும். அமுல் பாலுணவு உங்கள் குழந்தைக்கு மிகச் சிறந்தது.




சுத்த பாலிலிருந்து தயாரிக்கப்பட்ட அமுல் பாலுணவில், உங்கள் குழந்தைக்குத் தேவையான 7 வைட்டமின்கள் உள்ளன

TAM



# கல்கி பொருளடக்கம்

## நான் ஒரு பாவலன்

ீரம் கலைத்திறன் அறிந்திருப்பேன்—பல
அற்புதக் கவிமலர் சொரிந்திருப்பேன்
ரயும் உலகிடை நிலைத்திருப்பேன்—சில
மனிதர் நினைவினை அலைத்திருப்பேன்.

லையினும் சொல்லினும் தனித்திருப்பேன்-என்
நெஞ்சினும் கவியினும் இனித்திருப்பேன்
ணிலும் பொய்யிலும் தளர்வடையேன்-சிறு
துன்ப வெய்யிலில் களைப்படையேன்.

ன்றுவிரும்பி நானே வெறுத்திடுவார்—அன்றி
இகழ வெறுத்துப் புகழக் குழைந்திடுவார்
ன்றனாடி மறைவிற் பதுங்கிடுவார்—வெறும்
மனிதர் செல்வமென் கால்தூசாம்.

ன்றும் நானேயும் எந்நாளும்—பலர்
இதய நினைவுகள் கொண்டாட
ன்றும் அரங்கும் புகழ்பாட—நான்
மனிதர் நடுவோர் பாவலனும்.

— மணிவண்ணன்

குரோதி ஐப்பசி 30 — நவம்பர் 15



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

இவ்வாரம் நமது கேலிச் சித்திரக்காரர் அரசியல் தலைவர்களை விட்டுவிட்டு, அங்கிங்கு எனாதபடி எங்கும் தலையிட்டு அரசு புரியும் ஆளும் கட்சியினரில் இருவரை அறிமுகம் செய்து வைக்கிறார்:














மலர் 24 | தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 16

# விவேகம் ஒளி வீசுமாக!

உணவு தானிய வியாபாரிகளை ஒருமொத்தமாகச் சிறைப்பிடித்து, போதிய விசாரணையில்லாமலே, அப்பீலுமில்லாமலே தண்டிப்பதற்காக அவசரச் சட்டம் பிறப்பித்து விட்டார்கள். சர்க்காரின் குற்றங்களைப் பூசி மெழுகுவதற்காக, வர்த்தகர்கள் மீது குற்றத்தைச் சுமத்தும் ஏமாற்றுத் திட்டம் இது. ஆளும் கட்சியின் அதிகாரமும், சிப்பந்திகளின் அதிகாரமும் எல்லை மீறிப் போவதற்கும், லஞ்ச ஊழல் இப்போதிருப்பதை விடப் பெருகவும் வழி செய்யும் அவசர உத்தரவு இது. இந்த நடவடிக்கையினால் உணவுப் பிரச்னையைச் சமாளிக்கப் போவதாக அரசாங்கம் எண்ணுவது மமதையோடு சேர்ந்த மடமையாகும்.

வியாபாரிகள் தவறு செய்வதாகச் சொல்லி, அவர்களின் எதிர்வாதத்துக்குக் கூட இடம் தராமல் அரசாங்கம் அவர்களை வெகு விரைவில் அழிக்கக்கூடிய நிலை ஏற்பட்டுள்ளபின் இந்நாட்டைச் சுதந்திர நாடு என்றோ, இங்கு நடைபெறுவதை ஜனநாயக ஆட்சி என்றோ எப்படிச் சொல்வது? வியாபார சமூகத்தின் கழுத்தில் சுருக்கு மாட்டுவதற்காகச் சட்ட விசாரணைகள் எல்லாம் சுருக்கப்பட்டு விட்டன. கொடுங்கோன்மை என்ற ரதம் தங்குதடையின்றிச் செல்வதற்காக அதன் அச்சுகளுக்கெல்லாம் தாராளமாக எண்ணெய் வார்த்திருக்கிறார்கள். நீதிமுறைகளை மிதித்து நெரித்துக் கொண்டு தேர் பவனி வருகிறது!

விவேகத்தின் அறைகூவலைக் கேட்க அரசாங்கத்தில் ஆள் இல்லை. விவேகமற்ற விபரீதத் திட்டத்தின் விளைவை மக்கள் யாவரும் அநுபவிக்கப் போகிறோம். உணவு தானிய வியாபாரத்தில் தேர்ந்தவர்கள் இனி இத்துறைக்கு முழுக்குப் போட்டு விடுவார்கள். அரசாங்கத்தாலும் அப்பொறுப்பை ஏற்று நடத்தக் கையாலாகாது. பற்றாக்குறை இரண்டு மடங்காகும். சர்க்கார் சிப்பந்திகள் மேலும் மேலும் பெருகுவார்கள். அதே சமயத்தில் சட்டத்தின் ஆட்சியும், நீதியை மதிக்க வேண்டும் என்ற உணர்வும் மேலும் மேலும் சிதையும்.

இது நாடு முழுவதற்கும் பொதுவான அவல நிலை.

எதிர் வாதங்களுக்கு இடமளிக்காமல் ஒரே பாய்ச்சலில் வியாபாரிகள் மீது நடவடிக்கை எடுப்பது போலவே, ஹிந்தி பேசாதவர்கள் வாழும் பகுதிகளுக்கு மட்டும் இன்னொரு அந்த அவசர ஏற்பாடு உருவாகியுள்ளது. 'ஆட்சி மொழி விஷயமாக ஏன் பேசிப் பேசிப் பொழுதைப் போக்க வேண்டும்? காரியத்தில் ஜரூராக முன்னேறுவோம்' என்று ஹிந்தி வெறியர்களுக்குப் பிரதமர் லால்பஹாதூர்ஜி தார்க்குச்சி போட்டிருக்கிறார். தேசம் முழுவதையும் ஆங்கிலம் நடைமுறையில் இணைத்து வரும்போது, 'நாட்டை ஐக்கியப்படுத்த ஒரு பொது மொழி வேண்டாமா?' என்று சென்னையில் ஹிந்திப் பிரசார சபையில் அவர் கேட்டிருக்கிறார். ஹிந்தியை ஏற்காதவர்களுக்குத் தேசிய உணர்வு போதவில்லை என்று பொருள்படப் பேசியிருக்கிறார். ஹிந்தியிலும் சர்க்கார் பரீட்சைகள் நடத்துவதால் அதனைத் தாய்மொழியாகக் கொண்ட ஹிந்தி மக்கள் மற்றவர்களைவிட அநுகூல நிலையில் இருப்பதைப் புரிந்துகொள்ளாதவர் போல் 'ஹிந்தியில் மட்டும் சர்க்கார் பரீட்சை நடத்தவில்லை; ஆங்கிலத்திலும் நடத்துவோம்' என்று பேசியிருக்கிறார். ஹிந்தியில் மட்டுமே பரீட்சை நடத்தும் கொடுமைக்கு இன்னும் காலம் இருக்கிறது. இப்போதிருந்தே ஹிந்திக்கு அகில இந்தியப் பதவி தருவதால்

அம்மொழிக்காரர்கள் விசேஷச் சலுகை பெறுகிறார்கள் என்பதை அவர் அடியோடு மறந்து விட்டாரா?

1965 ஜனவரி 26லிருந்து ஹிந்தி ஆட்சிமொழி அந்தஸ்தை பெறுவதற்கான ஏற்பாடுகளை லால்பகதூர் விரைவுபடுத்தி வருகிறார். புதிய பிரதமராகப் பதவி ஏற்றபோது அவர் மிதமாகவும், நிதானமாகவும் நடப்பார் என்று நம்பியதற்கு நேர்மாறாகப் பல பிரச்னைகளில் நடந்துவர ஆரம்பித்து, நேரு அவர்களின் வேகத்தைத் தழுவிக் கொள்கிறார்.

இந்த இதழ் வெளி வரும்போது, நாடெங்கும் நேரு ஜயந்தி கொண்டாடப்படும். நேரு அவர்கள் எல்லாவற்றிலும் அவசரம் காட்டினாலும் ஆட்சிமொழி விஷயத்தில் நிதானம் வேண்டும் என்று சொல்லி வந்தார். மறைந்த தலைவரின் நினைவாக அகண்ட தீபம் ஏற்றி வைக்கும் ஆட்சியாளரின் உள்ளத்தில் இவ்விவேகம் ஒளி வீசுமாக!

# எதிர்பார்த்த முடிவு!

அமெரிக்க ஜனாதிபதித் தேர்தல் முடிவு அனைவரும் எதிர்பார்த்ததுதான். ஜனநாயகக் கட்சியைச் சேர்ந்த லிண்டன் ஜான்ஸன் அவர்கள் புதிய ஜனாதிபதியாகியுள்ளார். சமாதானத்துக்கும் சுபிட்சத்துக்கும் அயராமல் உழைத்து, நமது அன்பான நினைவுக்குரிய கென்னடியின் வழியில் செல்லப் போவதாகக் கூறியுள்ள ஜான்ஸனுக்கு நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம். அமெரிக்க சரித்திரத்திலேயே காணாத அளவுக்கு அவர் கணிசமான பெரும்பான்மை வாக்குகள் பெற்றிருப்பதாகக் கூறப்படுகிறது. 538 தேர்தல் மன்ற வாக்குகளில் 486 அவருக்குப் போடப்பட்டன. எனினும் பொதுமக்களின் வாக்குகளில் அவர் நான்கு கோடி பெற்றிருக்க, குடியரசுக் கட்சி அபேட்சகர் கோல்ட்வாட்டர் இரண்டு கோடிக்கு மேல் வாக்குப் பெற்றிருப்பது அமெரிக்க மக்கள் அவருடைய கட்சியை எவ்வளவு தூரம் மதித்திருக்கிறார்கள் என்பதைக் காட்டுகிறது.

ஜான்ஸனுக்கு நீக்ரோக்கள் பெருவாரியாக வோட்டளித்திருப்பதாகக் கருதப் படுகிறது. எவ்வளவோ காலமாகத் தீராதிருந்த நீக்ரோ உரிமைப் பிரச்னையைக் கணிசமான அளவுக்குத் தீர்த்து வைப்பதில் ஜான்ஸன் அவர்கள் சமீபத்தில் அடைந்த வெற்றி, அவரது ஆட்சிக் காலத்தில் மேலும் உறுதிப்பட வேண்டும் என வாழ்த்துகிறோம்.

புதிய ருஷியாவின் போக்கும், தென் கிழக்காசியாவில் பரவிவரும் கம்யூனிஸ விஸ்தரிப்பும் புதிய அமெரிக்க ஜனாதிபதியின் பொறுப்புச் சுமையை அதிகமாக்குகின்றன. உணர்ச்சி வேகங்களுக்கு அதிகம் இடம் தராமல் ஆர அமர யோசித்துச் செயல்படுபவர் என்று பெயர் பெற்றுள்ளவர் ஜான்ஸன் அவர்கள். சிக்கல் நிறைந்த உலக அரசியலில் தெளிவு பிறக்க அவர் உதவுமாறு ஆண்டவன் அருள் புரிவானாக!

# நெல் பாழாகிறது!

சென்னையிலும் மற்ற நகரங்களிலும் இரண்டு புதுப் படி அரிசிக்காக மக்கள் கால் கடுக்க மணிக் கணக்கில் தவம் கிடக்க வேண்டியிருக்கிறது. ஆனால் அரிசி விளையும் பகுதிகளில் நெல் மூட்டைகள் மழையில் நனைந்தும், அழுகியும், வெய்யிலில் காய்ந்தும் எதற்கும் உதவாத நிலையில் வீணாகி வருகின்றன.







இது பாரத சர்க்கார் மொத்த — சில்லறை வியாபாரிகளின் மீது போர் தொடுத்ததன் விளைவு.

தஞ்சாவூர் ஜில்லாவில் அம்மாப்பேட்டை, சாலியமங்கலம் ரயில்வே ஸ்டேஷன்களில் சுமார் இரண்டாயிரம் குறுவை நெல் மூட்டைகள் கிடக்கின்றனவாம். குறுவை நெல்லை மூட்டை கட்டி ஒரு சில நாட்கள் வைத்திருந்தாலே கெட்டு விடுமாம். இவையோ பல நாட்கள் மழையில் நனைந்து ஊறியிருக்கின்றன என்றால் எப்படி இருக்கும் என்று கூற வேண்டியதில்லை.

உணவு தானியம் பதுக்கி வைப்பவர்களைத் தண்டிக்க அரசாங்கம் அவசரச் சட்டம் கொண்டு வருகிறது. மக்கள் பட்டினியால் வாடும் போது ஆயிரக் கணக்கான நெல் மூட்டைகளைப் பாழடிக்கும் அரசாங்கத்தைத் தண்டிக்க யாருமில்லையே !

## நம்புவது சரியல்ல!

ருஷ்யத் தலைவர்கள் சீனாவுக்குப் பறந்ததை யடுத்து, சீனப் பிரதம மந்திரி சூ என் லாய் மாஸ்கோவுக்குப் பறந்திருக்கிறார். இதன் பொருள், சீனாவுக்கும் மாஸ்கோவுக்கும் இடையே இருந்து வந்த மன வேறுபாடுகள் நீங்கி, ஒற்றுமையும் இணக்கமும் ஏற்பட்டு வருகின்றன என்பதுதான்.

ருஷ்யத் தலைவர் குருஷேவ் பதவியிலிருந்து நீக்கப்பட்டதிலிருந்தே ருஷ்ய சீன உறவுமுறைகளில் வெகு வேகமாக மாறுதல்கள் ஏற்பட்டு வருகின்றன.

இந்நிலையில் ருஷ்யாவுக்குச் சென்று திரும்பி வந்த ஸ்ரீமதி இந்திராகாந்தி அம்மையார் இந்தியாவுக்கு ருஷ்யா அளிக்கவிருக்கும் ராணுவ உதவியில் எவ்வித மாறுதலும் இல்லை என்று தம்மிடம் ருஷிய சர்க்கார் அந்தரங்க சுத்தமாகக் கூறியுள்ளது என்கிறார். இதை நம்பிக் கொண்டு நமது பிரதம மந்திரியும் தேசப் பாதுகாப்புக்குத் தக்க நடவடிக்கை எடுக்காமல் வாளாவிருக்கிறார். இதைவிடத் துர்ப்பாக்கிய நிலை பாரத தேசத்துக்கு வேறு இல்லை. 'ராணுவ உதவி கிடையாது' என்று ருஷியா மறுப்பதைக் காட்டிலும், சந்தேகாஸ்பதமான சூழ்நிலையில் அதன் 'உதவி'யை நாம் பெறுவது அதிக ஆபத்தாகும். ருஷிய உதவி நிச்சயமாக

நமக்கு இல்லை என்று ஏற்பட்டால் நாம் மேல்நாடுகளுடனாவது ராணுவ இணக்கம் பெறுவோம். அதற்கும் வழியில்லாமல் ருஷியா செய்துள்ள இரண்டுங்கெட்டான் நிலைமையை இந்திய சர்க்கார் புரிந்து கொள்ளவில்லை. ஒரு முறை சீனாவின் நம்பிக்கைத் துரோகத்துக்குப் பாரதம் இலக்கு விட்டது. இன்னொரு முறை சீரு ருஷியா இரண்டு நாடுகளும் சேர் நமக்கு நம்பிக்கைத் துரோகம் செ நாம் பாதை அமைத்துக் கொடு வேண்டுமா? சற்று முன்னெச்சரிக்கை யாக இருக்கலாகாதா?

# உணவு மந்திரியின் உரை

மந்திரி சி. சுப்பிரமணியம் அவர்கள், 'உழுபவர்களுக்கு நிலத்தை உடைமை யாக்காததனால்தான் உணவு உற்பத்தி பெருகவில்லை. தற்போதைய உணவுப் பிரச்னைக்கு இதுவே காரணம்' என்று பேசியிருக்கிறார். இப்பேச்சு மக்களில் ஒரு சாரார் மற்றொரு சாரார் மீது துவேஷமும் கசப்பும் கொள்ளப் பயன் படுமே தவிர, விவசாயத்தில் ஈடுபட்ட வர்களுக்கு ஊக்கமோ உற்சாகமோ ஊட்டாது. உணவுப் பற்றுக்குறையி னால் எங்கெங்கு கலவரங்கள் மூண்டு விடுமோ என்ற பீதி நிலவியுள்ள இந்தச் சமயத்தில் மந்திரி சி. சுப்பிரமணியம் இப்படிப் பேசியிருக்கவே கூடாது. அந்தப் பேச்சில் உண்மையாகிலும்உண்டா?

உழுபவர்களுக்கு நிலத்தை உடைமை யாக்கி விட்டால் அவர்களால் சாகுபடிக்கு வேண்டிய உழவு மாடுகள் வாங்க முடியுமா? அவர்களிடம் எருக்கள் வாங்க மூலதனம் உண்டா? நாற்று நடவும் களை பிடுங்கவும் கூலி கொடுத்து ஆட்களை நியமிக்கும் பொருளாதார வசதி அவர்களுக்கு உண்டா?

இந்த வசதி அவர்களிடம் இல்லை யென்றாலும் சர்க்கார் செய்து தந்து விடும் என்று மந்திரி சுப்பிரமணியம் அவர்கள் கூறலாம்.

விவசாயிகள் கிணறு வெட்டச் சர்க்கார் கடன் கொடுத்தது. அத்தொகையில் பெரும் பங்கு, உழவரின் கைக் சேரு முன்பே கரைந்து போன விந்தை யாருக்குத் தெரியாது? எத்தனை கிணறுகள் எடுக்கப்பட்டன என்பதற் ஏட்டில் புள்ளிக் கணக்குப் பிரமா மாக இருக்கும்! ஆனால் உண்மையி கிணறு தோண்ட வாங்கிய கடனை ஏழை குடியானவன் தன் வீட்டுச் செலவு குத்தான் பயன் செய்து கொண்டான். விவசாய அதிகாரிகளின் கண்ணை துடைக்க ஏதோ ஒரு பள்ளம் தோண் வைத்திருப்பான். அவ்வளவுதான்.

சர்க்கார் அளிக்கும் விதையோ ஒ றுக்கும் உதவாதது என்று புகார்க வருகின்றன.

ரசாயன எருக்கள் விநியோகம்பற்ற ஒவ்வொரு ஆண்டும் குடியானவன் அழுது புலம்பத்தான் செய்கிறானே ஒழிய, காலத்தில் வந்தது என்பதில்லை

சர்க்காரின் பண உதவி பயனுகிறது என்றே வைத்துக் கொண்டாலும், தற் போது தனி மனிதர்கள் தங்கள் மூல தனத்தைக் கொண்டு செய்யும் விவசா யச் செலவுகளைச் சர்க்கார் மேற் கொண்டு, அதற்காக வரிகளை உயர்த்து வது எப்படி நியாயமாகும்?

இந்த உண்மைகளைப் புரிந்து கொள் ளாதவர் போல், மந்திரி அவர்கள் சோஷலிஸ நிலப் பங்கீடு பற்றிப் பேசி யிருப்பது அனர்த்தமாகும்.

# ஒரு நல்ல செய்தி

இவ்விதழ் அச்சுக்குப் போகும் தருணத்தில் ராஜாஜி நமக்காகச் செய்துள்ள ஒரு நற்பணி பற்றிச் செய்தி கிடைத்துள்ளது. சர்க்காரின் தானியக் கொள்முதலினால் ஏற்பட்டுள்ள சங்கடங்களைச் சென்னைக்கு வந்துள்ள பிரதமருக்கு ராஜாஜி எடுத்துக் காட்டியுள்ளார். இதற்குப் பிரதமர் எழுதியுள்ள பதிலில், வியாபாரிகளுடன் சர்க்காரும் நேரடியாக விவசாயிகளிடம் கொள்முதல் செய்ய வேண்டும் என முடிவு செய்துவிட்ட போதிலும் 'எவ்விதத்திலும் நிர்ப்பந்தமோ பலவந்தமோ செய்யப்பட மாட்டாது' என்று தெளிவாகக் கூறியுள்ளார். இவ்விஷயமாகத் தமிழக முதன் மந்திரியுடன் தாம் பேசுவதாகவும் பிரதமர் தெரிவித்திருக்கிறார். அவரது வாக்கு அமுலானால் கொள்முதலிலும், போக்குவரத்திலும் காணப்படும் பல ஊழல்கள் குறையும்.

# தமிழருக்குத் துரோகமா?

கொழும்பு, நவம்பர் 5உ.

சுமார் இருபத்தைந்து ஆண்டுக் காலமாக இலங்கைக்கும் இந்தியாவுக்கும் இடையில் மிகுந்த மனக் கசப்பை விளைவித்து வந்த பிரஜா உரிமைப் பிரச்னையில் இரு தேசப் பிரதம மந்திரிகளுக்கும் சம்மதமான ஓர் ஒப்பந்தம் சென்ற வாரம் ஏற்பட்டது.

வகுப்பு வாத மனோபாவம் 1939ம் ஆண்டிலேயே ஆரம்பித்து விட்டதென்றாலும் ஆட்சிப் பொறுப்பு சிங்களவர் கைக்கு மாறிய பிறகுதான் அவர்கள் விரும்பியபடி செய்வது சாத்தியமாயிற்று. 1948ம் ஆண்டுக்கு முன்னால் இலங்கை மக்கள் அனைவரும் பிரிட்டிஷ் பிரஜைகள் என்ற அந்தஸ்தில் இருந்தார்கள். எல்லோருக்கும் ஓட்டுரிமையும் அரசியல் உரிமைகளும் இருந்தன. இலங்கை சுதந்திரம் பெற்றதும் இலங்கை அரசாங்கம் ஒரு பிரஜா உரிமைச் சட்டத்தை இயற்றி, அதன் கொடுமையான நிபந்தனைகளின்படி யோக்கியதாம்சம் உடைய இந்திய வம்சாவளியினர் மட்டுமே இலங்கைப் பிரஜைகளாக முடியும் என்று அறிவித்தது. பத்து லட்சம் இந்திய வம்சாவளியினர் இலங்கைப் பிரஜா உரிமை கோரி மனுக்கொடுத்தார்கள். ஆனால் அவர்களுக்கு இலங்கைப் பிரஜா உரிமையை மறுக்க வேண்டுமென்ற அடிப்படையிலேயே விசாரணைகள் நடைபெற்றதாக ஐயப்பட வேண்டியுள்ளது. இதன் விளைவாகச் சுமார் ஒன்றரை லட்சம் பேர்கள் மட்டுமே இலங்கைப் பிரஜைகளாக ஏற்றுக் கொள்ளப்பட்டார்கள். பாக்கி எட்டரை லட்சம் பேர்களுக்கு இலங்கைப் பிரஜாவுரிமை மறுக்கப்பட்டது. இவர்களின் குடும்பங்கள் விருத்தியடைந்து இப்பொழுது இவர்களின் மொத்த எண்ணிக்கை 9,25,000 என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. இவர்களின் நிலை பற்றியே கடந்த பல ஆண்டுகளாக இலங்கை, இந்தியா ஆகிய இரு தேச அரசாங்கங்களுக்குமிடையில் கருத்து மாறுபாடு இருந்தது.

இவர்கள் இலங்கைப் பிரஜைகள் அல்லவென்றும் இந்தியப் பிரஜைகள் என்றும் அவர்களை இந்திய சர்க்கார் திருப்பி அழைத்துக்கொள்ள வேண்டும் என்றும் இலங்கை வற்புறுத்தி வந்தது. இலங்கையில் இவர்கள் பல்லாண்டுகளாக வாழ்ந்து இந்தியாவுடன் எவ்விதத் தொடர்பும் இல்லாதவர்களாகையால் இவர்கள் இந்தியப் பிரஜைகள் அல்லவென்றும் ஆகையால் அவர்களுக்கு இந்தியா பொறுப்பு ஏற்க முடியாதென்றும், இவர்களுக்கு இலங்கையே பொறுப்பு என்றும் இந்தியா வாதித்து வந்தது. இந்தக் கருத்து மாறுபாட்டின் விளைவாக இந்தியர்கள்சொல்ல முடியாத கஷ்ட நஷ்டங்களுக்கு ஆளாகி வந்தார்கள். இவர்கள் விஷயமாகத்தான் இப்பொழுது ஓர் உடன்படிக்கையில் ஸ்ரீமதி சிரிமாவோ பண்டார நாயகாவும் ஸ்ரீ லால் பகாதுர் சாஸ்திரியும் ஒப்பமிட்டிருக்கிறார்கள்.

இந்த ஒப்பந்தத்தின்படி மேற்படி நாடற்ற மக்களில் இந்தியா 525,000 பேர்களை இந்தியப் பிரஜைகளாக ஏற்று, அடுத்த பதினைந்து ஆண்டுகளுக்கிடையில் இந்தியாவுக்குத் திருப்பி அழைத்துக் கொள்ளச் சம்மதித்திருக்கிறது. 300,000 பேர்களுக்கு இலங்கை பிரஜா உரிமையை வழங்கி இலங்கையர்களாக ஏற்றுக்கொள்ளச் சம்மதித்திருக்கிறது.

இந்த எட்டேகால் லட்சம் பேர்கள் போக பாக்கியுள்ள இலங்கைத் தமிழ் மக்களை என்ன செய்வதென்பதைப் பற்றி அடுத்த வருட ஆரம்பத்தில் இரு தேசப் பிரதம மந்திரிகளும் மறுபடியும் கொழும்பில் சந்தித்துப் பேசி முடிவு செய்யத் தீர்மானித்திருக்கிறார்கள்.

ஆக மொத்தம் ஏற்கனவே பிரஜாவுரிமை பெற்ற ஒன்றரை லட்சம் பேர் உள்பட சுமார் நாலரை லட்சம் இந்திய வம்சாவளியினர்கள் இலங்கைப் பிரஜைகளாக ஏற்கப்பட்டுத் தங்குவார்கள். 1952ம் ஆண்டில் இந்தியப் பிரதம மந்திரி நேருஜியும் அப்பொழுது இலங்கைப் பிரதம மந்திரியாக இருந்த டட்லி சேனநாயகாவும் லண்டனில் இலங்கை இந்தியப் பிரச்னையைப் பற்றிப் பேசினார்கள். அப்பொழுது சுமார் நான்கு லட்சம் இந்தியர்கள் மட்டுமே இலங்கைப் பிரஜாவுரிமை பெறுவது சாத்தியமென்றும் இந்த எண்ணிக்கை ஒரு தோராயமான மதிப்பீடாகையால் குறையவும் கூடவும் செய்யலாம் என்றும் சேனநாயகா சொன்னார். இன்று இலங்கை அரசாங்கம் நாலரை லட்சம் பேர்களையே இலங்கைப் பிரஜைகளாக ஏற்கச் சம்மதித்திருக்கிறது.

ஐந்தேகால் லட்சம் இந்தியர்களை அடுத்த பதினைந்து வருடங்களுக்கிடையில் திருப்பியழைத்துக் கொள்ள இப்பொழுது இந்தியா சம்மதித்திருக்கிறது. 1952ம் வருடத்திய பேச்சின் பொழுது மூன்று லட்சம் பேர்களை இந்தியா உடனடியாக எடுத்துக் கொள்ள வேண்டும் என்றும், மற்றும் 225,000 பேர்களை 1959ம் ஆண்டுக்குள் திருப்பி எடுத்துக் கொள்ள வேண்டியிருக்கும் என்றும் டட்லி சேனநாயகா சொன்னார். சுமார் 50,000பேர்கள் விஷயமாக ஏற்பட்ட கருத்து வேறுபாட்டினால் அன்று ஒப்பந்தம் ஏற்பட முடியாமலிலேயே தவிர இல்லாவிட்டால் அன்றே பிரச்னை முடிக்கப்பட்டிருக்கும். அன்று ஒப்பந்தம் ஏற்பட்டிருந்தால் 1962ம் ஆண்டுக்குள் ஐந்தேகால் லட்சம் இந்தியர்கள் இந்தியாவுக்குத் திரும்பிப் போயிருப்பார்கள்.

இவ்வித ஒப்பந்தமானது தமிழர்களுக்கு இந்தியப் பிரதம மந்திரி செய்துள்ள மாபெரும் துரோகம் என்று இங்குள்ள தமிழ்த் தலைவர்கள் கருதுகிறார்கள். இந்திய அரசாங்கம் தனது கையாலாகாத்தனத்துக்கு இலங்கைத் தமிழர்களைப் பலிகொடுத்து விட்டதென்று தமிழரசுக் கட்சியைச் சேர்ந்த டாக்டர் ஈ. எம். வி. நாகநாதன் வர்ணித்திருக்கிறார். பாதிக்கப்பட்ட மக்களின் பிரதிநிதிகளான தங்களைக் கலந்து கொள்ளாமல் இரு தேச அரசாங்கங்களும் கடைச் சரக்குகளையும் கால்நடைகளையும் பங்குபோட்டுக் கொள்ளுவதைப் போல் தங்களுக்குள் ஒப்பந்தம் செய்து கொண்டிருப்பதை இலங்கைத் தமிழர் தலைவர்கள் பலமாக ஆட்சேபிக்கிறார்கள் என்று கருத இடமிருக்கிறது.

— ரஜனி

✳ ✳ ✳ **பின்னியின்** தூய பட்டு - பிரத்தியேக வகைகள் ✳ ரிவர்ஸிபிள், மற்றும் ஷாட் ஸில்க் புடவைகள் ✳ ஜார்ஜெட், ஷிப்பான், மேன்பட்டு தினுசுகள் ✳ கண்ணிய மான தோற்றமளிக்கும் தூய ஸில்க் ஷர்ட்டிங்

கண்கவரும் பல மோஸ்தர்களில் கிடைக்குமிடம் :



# வெங்கடேஷ் வஸ்திராலயா

ஷோ ரூம்கள், மதராஸ் ஹைகோர்ட்டுக்கு எதிரில்
பார்ட்னர்கள், S. வெங்கடேஸ்வர அய்யர், V. சிவராமன்




## 2. சங்கத்தில் உதித்த சங்கரி

தேவசேனாபதியான குமரனின் கதையைத் தொடங்குமுன் கணபதியை அற்புதமான பாடலால் துதிக்கிறார் கச்சியப்பர்.

" நிகட சக்கரச்
  செம்முகம் ஐந்துளான்
சகட சக்கரத்
  தாமரை நாயகன்
அகட சக்கர
  வின்மணி யாவுறை
விகட சக்கரன்
  மெய்ப்பதம் போற்றுவாம் "

விகட சக்கர விநாயகர் காஞ்சிபுரத் தில் ஏகாம்பரநாதர் கோயில் வெளிப் பிராகாரத்தில், கம்பாநதி என்ற தீர்த் தத்துக்கு அருகில் ஆயிரக்கால் மண்ட பத்தில் எழுந்தருளியிருக்கிறார்.

விகட சக்கரன் என இவர் ஏன் பெயர் பெற்றார்?

தட்ச யக்ஞத்தை அழிக்கச் சென்ற வீரபத்திரர் மீது திருமால் சக்ராயு தத்தை ஏவினார். அதனை வீரபத்திரர் அணிந்திருந்த வெண்டலை (கபாலம்)

று கவ்விக் கொண்டது. அதனைத் ம்பப்பெறும்பொருட்டுத் திருமாலின் னைத் தலைவர் விஷ்வக்ஸேனர் விரபத் ர் முன் விகடக்கூத்தாடினார். அது ஈடு அனைவரும் சிரித்தார்கள். மாலை இருந்த வெண்டலையும் சிரித்தது. போது அதன் வாயிலிருந்த சக்கரா ம் வெளியே வந்து விழுந்தது. அதை ஷ்வக்ஸேனர் எடுப்பதற்கு முன் விநாய பெருமான் எடுத்து மறைத்து வைத்துக் கொண்டார்.

விஷ்வக்ஸேனர் மீண்டும் ஒரு முறை நாயகப் பெருமானுடைய திருமுன் டக் கூத்தாடி அவரை மகிழ்வித்து. வரிடமிருந்து சக்கரத்தை வாங்கித் நமாலிடம் தந்தார்.

விகடக் கூத்தாடக் கண்டு மகிழ்ந்து க்கரம் அளித்த காரணத்தால் விகட க்கர விநாயகர் என்று கணநாதர் ர் பெற்றார்.

திகழ் தசகரச் செம்முகம் ஐந்துளான்: விளங்கா நின்ற செம்மையான ஐந்து திருமுகங்களும் பத்துத் திருக்கரங்களும் உடைய சிவபெருமான்.

சகட சக்கரத் தாமரை நாயகன்: சிவபெருமான் திரிபுரம் எரித்தபோது அவருடைய தேருக்குச் சக்கரமாக இருந்த தாமரை நாயகனாகிய சூரிய பகவான்.

அகடு அசக்கு அரவின் மணியாவுறை: விநாயகப் பெருமானின் வயிற்றில் சுற்றிய பாம்பின் முடியிலுள்ள இரத்தினமாகச் சூரியன் விளங்குகிறானாம்! 'திரிபுர தகனத்தில்; ஈசனின் தேர்ச் சக்கரமாக இருந்த சூரியன்' என்கிறார்.

தாரகாக்ஷன், கமலாக்ஷன், வித்யுன்மாலி என்னும் மூன்று அசுரர்கள் வான் வலியாலும் தோள் வலியாலும் தலை சிறந்து, ஒப்பாரும் மிக்காருமின்றி இருந்தனர். அவர்கள் பிரமனை நோக்கி அநேக காலம் தவம் புரிந்தனர். பிரமர் அவர்களுக்குக் காட்சி தந்து, ''என்ன வரம் வேண்டும்?'' என்று கேட்டார். ''நாங்கள். அழியாமல் இருக்கும் வரம் வேண்டும்'' என்று மூவரும் கேட்டனர்.

''குழந்தைகளே! அழியாதவைகளும் அழியாதவர்களும் உலகில் இல்லை. கற்பகோடி காலம் சென்றதும் நானும் இறந்து விடுவேன். பிறப்பு இறப்பு இல்லாதவர் பரமேசுவரன் ஒருவர் தான். ஆகவே, அந்த வரம் தவிர, வேறு வரம் ஏதும் கேளுங்கள். தருகிறேன்'' என்று பிரம்மா கூறினார்.

''சுவாமி! பூமி, அந்தரம், சுவர்க்கம் என்னும் மூவுலகங்களிலும் பொன், வெள்ளி, இரும்பினால் அமைந்த மதில்கள் பொருந்திய முப்புரம் வேண்டும். அந்த முப்புரம் ஆயிரம் வருடத்துக்கொரு முறை விரும்பிய இடத்துக்குப் பெயர வேண்டும். அப்புரங்கள் மூன்றும் ஒன்றுபட்ட பொழுது சிவபெருமானே ஒரு கணையால் அழித்தாலன்றி வேறு யாராலும் மாளாத வரம் வேண்டும்'' என்று மூன்று அசுரர்களும் கேட்டனர். அவர்கள் விரும்பிய படியே பிரம்மா வரம் தந்தார்.

அசுரர்கள் மூவரும் மயனை அழைத்துத் தங்கள் விருப்பப்படி மண்ணுலகில் இரும்பு மதிலும், அந்தர உலகில் வெள்ளி மதிலும், விண்ணுலகில் பொன் மதிலுமாகப் பல வளங்களும் பொருந்திய முப்



புரங்களை உண்டாக்கி, அளவிலா அவுணர் சேனைகளுடன் வாழ்ந்து வந்தார்கள்.

அவர்களின் கொடுமைக்கு ஆளான தேவர்களுடன் திருமால் மேருமலையின் வடபால் சென்று சிவபெருமானைக் குறித்துப் பல காலம் தவம் செய்தார். இதன் பயனாக, சிவபெருமான் திரிபுர அசுரர்களை அழிப்பதற்குத் திரு உள்ளம் கொண்டார். யுத்தத்துக்குச் செல்லும் வகையில் தாம் ஆரோகணிக்கத் திருத் தேரைச் சித்தம் செய்யப் பணித்தார்.

அப்படிச் சித்தம் செய்த தேரின் பெருமைதான் என்னே! அத்தேருக்கு அச்சு மந்தர - கேசரி மலைகள்; சந்திர சூரியர் சக்கரங்கள்; இருதுக்கள் சந்திகள்; பதினான்கு லோகங்களும் தேரின் பதினான்கு தட்டுக்கள். உதய அஸ்தகிரிகள் கொடிஞ்சிகள்; நதிகளும் நதங்களும் நாட்டுங்கொடிகள்; நட்சத்திரங்கள் நல்ல விதானம்; மோட்ச லோகம் மேல் விரிவாகவும், மேகங்கள் சட்டமாகவும், நாள் முதலியன எண்ணெய் ஊற்றும் இடுக்கு மரமாகவும், அட்ட பருவதங்கள் தூண்களாகவும் அமைக்கப்பட்டன. எட்டுத் திக்கு யானைகள் இடையில் தாங்கின. ஏழு சமுத்திரங்கள் திரைச் சீலையாயின. ஞானேந்திரிய கன்மேந்திரியங்கள் கலன்களாகவும், கலைகள் முனைகளாகவும், புராணம், வேதாங்கம், சாத்திரம், மனுக்கள் ஆகியன மணிகளாகவும், மருந்துக்கள் படிகளாகவும் அமைந்த தேர் ஸ்வாமி ஆரோகணிக்கத் தயாராகி விட்டது. நான்கு வேதங்களும் அத்தேரின் குதிரைகளாகப் பூட்டப்பட்டன. பிரணவ மந்திரத்தைச் சாட்டையாக்கிக் கொண்டு சதுர்முகன் சாரதியானான். கங்கை, அதிதி முதலிய தேவமாதர்கள் நாலா பக்கங்களிலும் சாமரம் இரட்டினார்கள். நாரதரின் இசைக்குத் தக்கபடி அரம்பையர் நடனமாடினர். தேவர்கள் மேரு மலையைப் பெருமான் தரிப்பதற்கு ஏற்ற தனுசாக்கித் தந்தார்கள். ஆதிசேடன் அந்த வில்லின் நாணானான். பையரவு துயில் பதும நாபப் பெருமானே பாணமாயினான். வாணி வில்லில் கட்டிய மணியாகவும், அக்கினி தேவன் அம்பின் கூர் வாயாகவும், வாயு தேவன் அம்பிற் கட்டிய இறகாகவும் ஆயினர்.

இவ்வளவு மகத்துவம் பொருந்திய மகாரதத்தில் மகாதேவன் மலரடி வைத்ததுமே என்ன ஆயிற்று? நொந்த உள்ளங்களில் நளினமாகப் பொருந்தும் சிவபெருமானின் பாதம் அப்பெரும் தேரினுள் பட்டதும் அதன் அச்சு முறிந்தது. ஈசனின் திருவிளையாடலை என்னென்பது? பெருமிதமான சாதனைகளால் தன்னைத் திருப்திப்படுத்த முடியாது; எளிமையாலேயே தன் அருளைப் பெற முடியும் என்று தேவர்களுக்குப் பெருமான் உணர்த்த எண்ணியிருப்பானோ?

அச்சு முறிந்ததைக் கண்ணுற்ற திருமால் உடனே இடபமானார். இடபத்தின்மீது எம்பெருமான் ஏறி ரிஷபாரூடராகத் திருக்கோலம் தந்தருளினார்.

**தடமதிலை அவைமூன்றுந்**
**தழலெரித்த அந்நாளில்**
**இடபமதாய்த் தாங்கினான்**
**திருமால்காண் சாழலோ**

(திருவாசகம்)

தேரினால் பயனில்லாதது போலவே தேவர்கள் தந்த திவ்வியாஸ்திரத்தாலும் பயனில்லை. சிவபெருமான் புரங்கள் மூன்றையும் புன்சிரிப்பாலேயே சாம்பலாக்கினார்.

இத்தகைய பெரிய தேருக்குச் சக்கரம் சூரியன். அந்தச் சூரியன் விநாயகர் இடையில் அணிந்துள்ள உதரபந்தனமாகிய பாம்புக்கு மணியாக விளங்குகின்றான். "அவ்வாறு விளங்கும் விநாயகனின் அடியிணையை வணங்கி இந் நன்னூலைத் தொடங்குகின்றேன்" என்று கச்சியப்பர் ஆரம்பம் செய்கிறார்.

நூல் பாடுகின்ற ஆசிரியர் முதன் முதலாக ஆற்றுப் படலம் பாடுவது மரபு. கதை நிகழ்கின்ற நாடு எந்த நதியினால் வளம் பெறுகின்றதோ அந்த நதியின் சிறப்பைப் பாடுவர். இராமாயணத்தில் சரயூ நதி குறித்து ஆற்றுப் படலம் உண்டு. மகா பாரதத்தில் கங்கை நதி சிறப்பிக்கப் பெறுகிறது. திருவிளையாடற் புராணத்தில் வைகை நதியும், பெரிய புராணத்தில் காவிரியும் பாடப் பெற்றுள்ளன. கந்த புராண ஆசிரியரான கச்சியப்பர் பாலாற்றைச் சிறப்பித்து ஆற்றுப் படலம் பாடுகிறார்.

கதாநாயகன் வாழ்ந்த ஸ்கந்தகிரியிலுள்ள தீர்த்தத்தைப் பாடாமல் கதையாசிரியர் வாழ்ந்த காஞ்சியின் தீர்த்தத்தை அவர் பாடியது ஏன்? எங்கும் வாழும் கதாநாயகன் தம்முடனேயே நிச்சயமாக வாழ்கிறான் என்ற அநுபவத்தினாலேயே அவ்வாறு பாடியிருப்பாரோ? பாலாறு நீர் வறண்ட ஆறு ஆயிற்றே. அதனை எப்படிச் சிறப்பித்துப் பாடுகிறார் எனப் பார்ப்போம்.

குழந்தைகளுக்குப் பசி வரும்போது அது வருடத் தாய்க்குப் பால் கரக்கும். குழந்தை பசி ஆறியவுடன் பால் மறைந்து விடும். வேண்டிய பொழுது

புதியது

# ப்ரோடெக்ஸ் ஒரு சர்வ-காரிய டால்க். அது குடும்பத்தினர் அனைவருக்கும் மிகச்சிறந்தது.

"ப்ரோடெக்ஸ் எனக்கு விருப்பமானது. ஏனெனில் அது எந்தக் குடும்பத்திற்கும் ஏற்றபடி சிக்கனமானது"

"நாள் முழுதும் புதுமையுடனிருக்க நான் ப்ரோடெக்ஸையே விரும்புகிறேன்"

"எனது மிருதுவான சருமத்தைப் பாதுகாப்பதால் அம்மா ப்ரோடெக்ஸையே விரும்புகிறாள்"




ப்ரோடெக்ஸ் ஒரு உயர்ந்த ரக, மனோரம்மிய நறுமணமுடைய, சர்வ-காரிய டால்க். எல்லாக் குடும்பத்தினருக்கும், குளித்தபிறகும், கோடைக்காலத்தில் குளிர்ச்சிக்கும் மிகச் சிறந்தது. ப்ரோடெக்ஸ் வாங்குங்கள்-மிக மிகப்பெரிய டப்பா-மிகமிகக் குறைந்த விலை.

## ப்ரோடெக்ஸ்

ஆல்-பர்ப்பஸ் டால்கம் பௌடர்

PTP-8-7-TAM.

ரக்க வேண்டும். வேண்டாதபோது
ரக்க வேண்டும். அவ்வாறில்லாமல்
ப்போதும் பால் சுரந்தால் அது
ணியாகும். குழந்தைக்குப் பசி வரும்
பாழுது தாய்க்குப் பால் சுரப்பதே
பால், வேண்டிய பொழுது விவ
ாயிகள் வருடினால் பாலாறு நீர்
ரக்கின்றது. மற்ற நேரங்களில் சுரந்து
டுகிறது. இது மற்ற நதிகளுக்கு இல்
ாமல் பாலாற்றுக்கே உரிய பெருமை.

பாலாற்றுக்கு உற்பத்தி ஸ்தானம் நந்திமலை. அங்கே மேகம் நீரை முகர்ந்து இருண்ட உருவத்துடன் சென்றது. அப்போது வானவில் தோன்றியது. கரிய மேகங்கள் வானவில்லுடன் நின்று நந்தி மலைமீது வாய் திறந்து குளிர்ந்த நீரைப் பொழிகின்றன.

கரிய முகிலும், பெரிய மலையும், வான வில்லும், பொழிகின்ற மழையும் பரம பக்தரான கச்சியப்பருக்கு எவற்றை நினைவூட்டுகின்றன?

கரு நிறமுடைய கண்ணப்ப நாயனர் வில்லுடன் சென்று காளத்தியப்பராம் சிவலிங்கத்தின் மீது, தாம் வாயில் தேக்கிக் கொணர்ந்த நீரைச் சொரிவது போல் இருக்கிறது என்கிறர். இதோ தேனினும் இனிய பாடல் :

**பூட்டு கார்முகந்தன்னொடுந் தோன்றிய**
**புயல்வாய்**
**ஊட்டுதன் புனல் நந்தியங்கிரிமிசை உகுத்தல்**
**வேட்டுவக் குலத் திண்ணனார் மஞ்சனம்**
**வியலற்கு**
**ஆட்டுகின்றதோர் தனிச் செயல்**
**போன்றுளதன்றே**

நந்தி மலையில் மழை பொழிந்தது. பால் நதியில் வெள்ளம் ஓடுகின்றது. வலிமையான சில மீன்கள் நீரில் எதிர்த்து நீந்திச் செல்கின்றன.

கச்சியப்பருக்கு அந்தச் சிறு காட்சி மாட்சி தருகின்றது.

மதுரைமா நகரில் வையையாற்றில் முத்தமிழ்வித்தகராம் திருஞான சம்பந்த சுவாமிகள், 'வாழ்க அந்தணர்' என்று பாடிவிட்ட செந்தமிழ் ஏடு எதிர் ஏறிச் சென்றதல்லவா? அது போல் இருக்கிறதாம் மீன் எதிர் ஏறுவது.

நீரில் குவளை மலர்கள் பூத்திருக்கின்றன. அவற்றைக் கண்ட கச்சியப்பருக்குக் குளம் முழுவதும் விளக்குகள் எரிந்து நிறைந்து ஒளி வீசுவது போல் தெரிந்தது. நமிநந்தி அடிகள் தண்ணீரையே நெய்யாக வார்த்து ஏற்றிய விளக்குகளைப்போல் குவளைகள் காட்சி தருகின்றன என்று அவர் அழகுபடக் கூறுகிறர்.

விளக்கின் தைலம் போல் தீர்த்தமும், அதில் எரிகின்ற சுடர் போல் மலரும் காட்சி தருகின்றன கச்சியப்பருக்கு.



"தீபாவளிக்கு மாமனார் என்ன பரிசு கொடுத்தார்?"
"நீண்ட 'க்யூ'வில் கால்கடுக்க நின்று ஆறு லிட்டர் அரிசி வாங்கிக் கொடுத்திட்டார்!"

---

ஆற்றுப் படலம், நாட்டுப் படலம், பாயிரப் படலம் எல்லாம் முடிந்தபின் வரலாற்றைத் தொடங்குகிறர்.

ஒருவருடைய கதையைச் சொல்லு முன் அவரது பரம்பரையைப் பாடுவது மரபு. கந்தனின் தந்தை வழியில் பரம்பரை பாடி முடியாது. சிவபெருமான் தான் 'தாயுமிலி தந்தையிலி' ஆயிற்றே. எனவே அன்னையாகிய உமாதேவியின் வரலாற்றைக் கவி கூறுகிறர்.

இந்திர லோகத்தை ஆள்பவன் இந்திரன். அவனுக்குச் சயந்தன் என் ருெரு புதல்வன். அவன் பிரகஸ்பதியிடம் சென்ருன். "குருநாதா! நூற்றெட்டு யுகங்கள் என் தந்தையும் நானும் சூரபத்ம அசுரனல் துன்பமடையக் காரணம் என்ன?" என்று கேட்டான் சயந்தன். பிருகஸ்பதி அக்காரணத்தை விளக்கப் புகுபவராகத் தட்சனுடைய வரலாற்றைத் தொடங்கினர். இது தான் கந்தபுராணத்தின் மூலம்.

பிரமனின் கட்டை விரலில் தோன்றியவன் தட்சன். அவன் கல்வி, அறிவு, ஆற்றல், ஒழுக்கம் எல்லாவற்றிலும் சிறந்தவன். பிரமனை நோக்கி, "தந்தையே! தாங்கள் சிருஷ்டி செய்கிறீர்கள்; திருமால் ரட்சிக்கிறர்; உருத்திரர் சம்ஹரிக்கிறர். இம்மூவரில் பெரியவர் யார்?" என்று கேட்டான்.

"இவர்களில் யாரும் பெரியவர் அல்லர். தங்கள் தங்கள் கடமைகளையே இவர்கள் செய்கிறர்கள். இவர்களுக்குப்

பெரியவர் ஒருவர் இருக்கிறார். அவரே சிவபெருமான்'' என்றார் பிரமன்.

சிவன்தான் பரம்பொருள். சிவத்தை அடைபவர் எல்லா நலன்களையும் பெறுவார்கள். காலையில் எழுந்தவுடனேயே சிவபெருமானுடைய ஐந்தெழுத்தைச் சொல்ல வேண்டும். நாமங்களை வாக்கினாலும் மந்திரங்களை மனத்தினாலும் சொல்லவேண்டும். கைகளால் அருச்சனை செய்ய வேண்டும்.

கலங்கியிருக்கின்ற நீரில் தேத்தாங் கொட்டையைப் போட்டால் தெளிவடையும். அதேபோல் மனத்திலுள்ள கலங்கலைத் தெளிய வைப்பது பஞ்சாட்சரம். ''பஞ்சாட்சர தியானத்தினால் அடையக் கூடிய பொருள் இறைவன்'' என்று பிரமதேவர் சொன்னார். இதைக் கேட்ட தட்சன் ''தவம் செய்து, சிவபெருமானை அடைகிறேன்'' என்று இமாசலத்துக்குச் சென்றான். அங்கே ஒற்றைக் காலில் நின்று தவம் செய்தான்.

பவள மலை போன்று பெருமானும் நீலக் கொடி போன்று பிராட்டியாரும் தோன்றினார்கள். தீ சுடர் விட்டு எரியும் போது நுனியில் நீல நிறம் படரும். சிவப்பாக எரிவது சிவம். நீலம் பரவியிருப்பது அம்பாள்.

தட்சன் சுவாமியை ஸ்தோத்திரம் செய்தான். ''உனக்கு என்ன வரம் வேண்டும்?'' என்று கேட்டார் சிவபெருமான். ''சுவாமி! தேவரும் மூவரும் அகில உலகமும் என்னை வணங்க வேண்டும். தாங்கள் எனக்கு மருமகனாக வேண்டும்'' என்று வரம் கேட்டான் தட்சன். கேட்ட வரங்களையெல்லாம் கொடுத்தார் தயாநிதி.

தட்சன் மேரு மலைக்குப் போனான்.

தட்சமாபுரம் என்ற அற்புத நகரத்தை ஏற்படுத்தி அங்கு வசித்தான்.

உரிய காலத்தில் வேதவல்லி என்ற பெண்ணைத் திருமணம் செய்து கொண்டான். பெருமித வாழ்வில் திளைத்துக் கொண்டிருந்தான்.

தட்சனுக்கு ஆயிரம் ஆண் குழந்தைகள் பிறந்தன. அவர்களை அழைத்தான் தட்சன். ''குழந்தைகளே! நீங்கள் எல்லோரும் சிவபெருமானை நோக்கித் தவம்செய்து என்னைப் போல் பல உலகங்களை ஆளும் வரம் பெறுங்கள்'' என்று அவர்களை அனுப்பி வைத்தான்.

ஆயிரம் குழந்தைகளும் போய் தவம் செய்து கொண்டிருந்தனர். அப்பொழுது மகரிஷி நாரதர் வீணையை மீட்டிக் கொண்டு அங்கே வந்தார்.

''குழந்தைகளே! உங்கள் தந்தை பிறவாத பேரின்பத்தை நாடித்தான் தவம் செய்யப் போனார். சிவபெருமான் அவர் எதிரே காட்சி தந்தபோ[து] தவத்தின் நோக்கத்தை மறந்[து] உலகங்கள் எல்லாம் வந்து வண[ங்க] வேண்டும் என்று வரம் கேட்டா[ர்]. ஆகவே, உங்கள் க்ஷேமத்திற்கா[கச்] சொல்லுகிறேன். பிறவா வரம் வே[ண்]டும் என்றே ஐயனை நோக்கித் தவ[ம்] செய்யுங்கள்'' என்று நாரதர் கூறின[ார்].

ஆயிரம் குழந்தைகளும் அவ்வா[றே] பிறவா வரம் கோரித் தவம் இருந்தன[ர்]. அந்த வரத்தைச் சிவபெருமானும் [த]ருளினார். ஆயிரம் குழந்தைகளும் [இறைவ]னுடன் ஒன்றி விட்டன. தேங்கா[ய்], பழம், கற்பூரம் ஆகியவற்றைக் கோ[யி]லுக்குக் கொண்டு சென்றால் அருச்சனை முடிந்த பிறகு தேங்காய் திரும்பி வரு[ம்]. பழம் திரும்பி வரும். கற்பூரம் மட்டு[ம்] திரும்பி வராது. அது போல, தவ[த்]துக்குச் சென்றவர்கள் தவப் பொரு[ளு]டன் ஒன்றிவிட்டார்கள்.

நாரதர் செய்த காரியம் தட்சனு[க்]குத் தெரிந்து விட்டது. மீண்டு[ம்] ஆயிரம் குழந்தைகளை உண்டாக்[கி]னான். அந்தக் குழந்தைகளை அழைத்து முன் போலவே தவத்துக்கு அனுப்பி[னா]ர். நாரதர் மீண்டும் வந்து முன் போலவே செய்தார்.

ஆயிரம் குழந்தைகளும் சிவபெரு[மா]னுடன் ஒன்று சேர்ந்து விட்டன. தட்சனுக்குக் கோபம் பொங்கியது. ''நாரதனே! நீ கலியாணம் ஆகாமல் அலைவாய்'' என்று சபித்தான்.

ஆண் பிள்ளைகள் தாய் தந்தையருக்கு அடங்க மாட்டார்கள்; பெண் குழந்தைகள் தாய் தந்தையரிடம் விசுவாசமாக இருப்பார்கள் என்று கருதிய தட்சன், ஐம்பது பெண் குழந்தைகளைப் பெற்றான். அவர்களில் பத்துப் பெண்களைத் தருமதேவனுக்கும், பதின்மூன்று பெண்களைக் காசிப முனிவருக்கும், இருபத்தேழு பெண்களைச் சந்திரனுக்கும் திருமணம் செய்து கொடுத்தான்.

இருபத்தேழு மனைவிகளை மணந்து கொண்ட சந்திரன் கடைசி மனைவியிடம் மட்டுமே பிரியமாக இருந்தான். மற்ற மனைவிகளைத் திரும்பியே பார்க்கவில்லை. அவர்கள் மனம் நொந்து தந்தையான தட்சன் காலில் போய் விழுந்தார்கள்.

தட்சனுக்கு மருமகனிடம் கோபம் வந்தது. அழகே வடிவான சந்திரனைத் தினம் ஒரு கலையாகத் தேயும்படி சாபம் கொடுத்தான்.

மாமனார் சாபம் கொடுத்ததைக் கேட்டுக் கலங்கிய சந்திரன் வைகுந்தத்துக்கும், பிரம்மலோகத்துக்கும், இந்திரலோகத்துக்கும் சென்று முறையிட்டுச்

ப நிவிர்த்தி பெற முடியாமல் லாயத்தைச் சென்றடைந்தான்.

''தேய்ந்த கலையாகத் தங்களை அடைந் ்ளேன். என்னை ரட்சிக்கவேணும். பயம், அபயம்!'' என்று ஈசனின் தத்தில் விழுந்தான்.

எவ்வளவு பாவியாக இருந்தாலும் டைக்கலமாக வந்தவனை எம்பெரு ான் விட்டு விடுவாரா?

''சந்திரா! நீ செய்தது மன்னிக்க டியாத குற்றம். ஆனாலும் நான் ன்னிக்கிறேன். ஒரு நிபந்தனையுடன் ன்னிக்கின்றேன்.

''ஏனெனில் எல்லாக் குற்றங்களையும் ான்தான் பூரணமாக மன்னிப்பே னனினும் மனைவிக்கு நம்பிக்கைத் ரோகம் செய்வதை மட்டும் முற்றி ும் மன்னிக்க என்னால் இயலாது. ருமணமான மறு நாளே தாய் ந்தையரைத் துறந்து, உடன் பிறந்த ர்களைத் துறந்து, சுற்றத்தைத் துறந்து டன் வருகிறவள் மனைவி. அவ்வளவு யர்ந்த தியாகம் செய்து வந்த இருபத் ாறு மனைவிகளுக்குத் துரோகம் செய்த ன்னைப் பூரணமாக மன்னிக்க மாட் டன். உன்னைத் தேய விடாமல் முழு லாவாக வைத்து விட்டால், மனைவிக் த் துரோகம் செய்தாலும் மன்னிப்புக் டைக்கும் என்ற எண்ணம் உலக மாந் ர்களுக்கு ஏற்பட்டு விடும். எனவே, தேய்ந்து தேய்ந்து வளருமாறு தட்ச ின் சாபத்தைத் தளர்த்துகிறேன்'' ான்று அருளினார் பத்தினிக்குப் பாதி தகம் தந்த அம்மை அப்பன்.

பின்னரும் பெருமானின் கருணை உள்ளம் சந்திரன்பால் உருகிற்று. தேய்ந்த பிறைச் சந்திரனை யெடுத்துத் தலையின் மீது தரித்துக் கொண்டார் சிவபெருமான்.

வேதம் தனது சிரத்தில் சூட்டிக் கொள்வதற்காகத் தேடியலையும் பாதம் படைத்த பரமன், தனது சிரத்தில் அகந்தையின் உருவாக வந்த கங்கை யையும், பாபத்தின் உருவாக வந்த பனி மதியையும் தரித்த அருட்பான் மையை என்னென்பது?

விண்ணில் உள்ள சந்திரன் தேய்வான். வளர்வான். சிவபெருமான் தலையில் உள்ள பிறைத் திங்களோ தேய்வதும் இல்லை; வளர்வதும் இல்லை; அபயம் என்று வந்தவனுக்கு ஆண்டவன் கொடுத்த அபயம் அது!

தேய்ந்து வளரும் நிலா முழுமை அடையும் பூர்ணிமை நன்னாள்.

அன்று மாசி மகம். தட்சன் தன் மனைவி வேதவல்லியுடன் யமுனைக்குச் சென்றான்.

''மருமகனாக வருகிறேன்'' என்று தட்சனுக்கு வரம் கொடுத்திருந்த சிவ பெருமான் அதனை அன்று நினைவுகூர்ந் தார். பூர்ணிமையைத் தமது பிரிய நிதியாகக் கொண்ட அம்பிகையை நிலவுப் பார்வையுடன் நோக்கினார். நிலவினும் இனிய குரலில், ''தேவி, நீ தட்சன் மகளாகப் பிறப்பாயாக!'' என்று ஆணையிட்டருளினார்.

தட்சன் யமுனையில் நீராடும்போது நதியில் ஆயிரத்தெட்டு இதழ்கொண்ட ஓர் அற்புதத் தாமரையைக் கண்டான். அதனில் வலம்புரிச் சங்கு ஒன்று மிதப்பதைக் கண்டான்.

ஓங்கார நாதத்தைத் தன்னுள் கொண்ட வலம்புரிச் சங்கம் வீட்டில் இருப்பதே க்ஷேமம். அதனால் நீர் முகர்ந்து சுவாமிக்கு அபிஷேகம் செய் தால் கும்பாபிஷேகம் செய்த புண்ணி யம் கிடைக்கும்.

தாமரையைப் பற்றி அதிலிருந்து வலம்புரியை எடுத்தான். வலம்புரிச் சங்கு குழந்தையாக மாறி விட்டது. எம்பிராட்டியார் குழந்தையாக வந் தார். உலக மாதா பச்சைப் பசும் பாலகியாக வந்தார்.

குழந்தையைத் தட்சன் தன் மனைவி யிடம் கொடுத்தான். அன்னையின் அன் பான அரவணைப்பை உலக அன்னையும் அநுபவித்தான்! (தொடரும்)





அந்தச் சிறிய பொம்மைக்கு விலை சற்று அதிகம் தான். ஆனாலும் கூட வந்த நண்பர் அதை எப்படியாவது வாங்கிவிடத் துடித்தார். ''முகத்தில் அப்படியே களை சொட்டுகிறது! இனிய புன்சிரிப்பை எப்படித் தான் இந்தச் சின்ன உதடுகளில் கொண்டு வந்து பூசியிருக்கிறான். அதைப் பார்த்தாலே நமக்கு அமைதி ஏற்படும் போலிருக்கிறது'' என்றார் அவர்.

''ஆமாம், ஐயா! அது ஜப்பானில் தயாரான பொம்மை. ஜப்பானியர்கள், ஆண்களும், பெண்களும் பொன்னகைக்குக் கொடுக்கும் மதிப்பைவிட, புன்னகைக்கு மதிப்புக் கொடுத்து அதையே ஆபரணமாகப் பூணும் பண்புடையவர்கள். அந்தப் பண்பை அவர்களுடைய சிருஷ்டிகளிலும் இயற்கையாகவே கொண்டு வந்து விடுகிறார்களோ என்னவோ?'' என்று பதிலளித்தேன் நான்.

பேரம் இல்லாமல் பொம்மையை வாங்கிக் கொண்டு நடந்தார் நண்பர். ஜப்பானைப் பற்றிய சிந்தனை என் நினைவில் எழுந்து ஓடத் தொடங்கியது.

உறவினர்களுடன் சம்பாஷிக்கும்போதும் ஜப்பானியர்களின் முகத்தில் புன்சிரிப்புத் தவழ்கிறது. பாஷை தெரியாத அன்னியர்கள் முன்பும் அதே புன்சிரிப்பைப் பூணுகிறார்கள். கருக்கமாகச் சொன்னால், அந்தப் புன்சிரிப்பு ஜப்பானியர்களிடையே பரம்பரை பரம்பரையாக வந்து கொண்டிருக்கிறது. நம்முடைய கேள்விகளுக்கு, ஆம், இல்லை, என்று வெட்டொன்று துண்டு இரண்டாகப் பதில் சொல்ல வேண்டிய சந்தர்ப்பங்கள் ஏற்பட்டால் அவர்கள் பதிலுக்கு ஒலியின் உதவியை நாடுவதில்லை; புன்சிரிப்பைத்தான் நாடுகிறார்கள். பதில் வேண்டாததாக இருந்து கேட்பவர்கள் ஏமாற்றத்துக்கு ஆளாகக் கூடாதே என்ற நல்லெண்ணத்தினால் எழும் அந்தப் புன்சிரிப்பைக் கேள்வி கேட்டவர்கள் எப்படி வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளலாமல்லவா? ஜனத்தொகையிலும், சந்தடியிலும், தொழிலிலும் அதி வேகமாக வளர்ந்து வரும் ஜப்பான் நாட்டு மக்களுக்கு யந்திரங்களுக்கு சிக்கல் இல்லாத ஓட்டம் கொடுக்க உதவும் எண்ணெயைப் போல் அந்த புன்சிரிப்பு போராட்டங்களையும் வியவகாரங்களையும் தவிர்க்க உதவுகிறதாம்!

சமீப காலத்தில் இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு முன் ஜப்பான் நாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்து திரும்பிய நண்பர் திரு எஸ். ஏ. ரஹீமைக் கண்டு பேசிக் கொண்டிருந்த போது ஜப்பானியர்களின் மற்ற பண்புகளைப் பற்றியும் பழக்க வழக்கங்களைப் பற்றியும் ஓரளவு விவரமாகவே தெரிந்து கொள்ள முடிந்தது.

ஏறத்தாழ இரண்டாயிரம் தீவுகள் சேர்ந்துதான் ஜப்பான் நாட்டை உருவாக்குகின்றன. ஆனால், ஹொக்கெய்டா, ஹான்ஷூ, ஷிக்கு க்யூஷூ என்ற தொடர்ந்து நிற்கும் நான்கே பெரிய தீவுகளில் ஜப்பானிய நாகரிகமும், தொழில் வளர்ச்சியும் வியாபித்திருக்கின்றன. வடக்கிலிருந்து தெற்காக அமைந்திருக்கும் இந்தத் தீவுகளில் வெவ்வேறு பாகங்கள் வெவ்வேறு சீதோஷ்ண நிலைகளை அனுபவிக்கின்றன.

# உலக சஞ்சாரம்

ரஹீமுக்கு அதிக வியப்பளித்த விஷயம் ஜப்பானிய விவசாயிகள் தங்கள் நிலங்களில் செய்து காண்பிக்கும் அற்புதங்கள்தான். இந்தப் பருவத்தில்தான் இந்தப் பயிரைச் சாகுபடி செய்யலாம் என்ற பழைய நியதியை அவர்கள் இப்போதெல்லாம் கடைப்பிடிப்பதில்லை. ஒரே நிலப் பரப்பில் பக்கத்தில் பக்கத்தில் வெவ்வேறு வகை தானியங்களைப் பயிர் செய்கிறார்கள். ஒவ்வொன்றுக்கும் தேவையான சீதோஷ்ண நிலையைச் செயற்கை முறை கொண்டு கட்டுப்படுத்துகிறார்கள். பழ வகைகளுக்கும் அப்படித்தான். "குறிப்பிட்ட பழ வகைக்கு அதிகப் பனி ஒத்துக் கொள்ளாதா? போடு, பிளாஸ்டிக் கூடாரத்தை" என்று விசேஷப் போர்வை போர்த்துகிறார்கள். காலம் வரவேண்டும் என்று அவர்கள் காத்திருப்பதில்லை!

'கஞ்சி' என்று குறிப்பிடப்படும் சீன லிபியைத்தான் ஜப்பானியர்கள் தங்கள் மொழிக்கும் உபயோகப்படுத்துகிறார்கள். அதை எழுதுவதோ படிப்பதோ சற்றுச் சிரமம்தான். அதற்காகக் கல்வி கற்காமல் யாரும் இருப்பதில்லை. ஒன்பது வருட காலம் அநேகமாக எல்லோருக்குமே கட்டாயக் கல்வி போதிக்கப்படுகிறது. இந்த ஒன்பது வருட காலப் படிப்பை முடித்தவர்களில் பாதிப் பேர் 'ஸீனியர் ஹைஸ்கூல்' படிப்பை மேற்கொள்கிறார்கள். அவர்களில் பத்து சதம் கல்லூரிக்கும் போகிறார்கள்.

ரயில்களிலும் பஸ்களிலும் பிரயாணம் செய்துகொண்டே புத்தகங்கள், சஞ்சிகைகள் படிக்கும் வழக்கம் இந்த நாட்டில் மிக மிக அதிகம். அங்கு ஆண்டு ஒன்றுக்கு விற்பனையாகும் புத்தகங்களின் எண்ணிக்கை பிரமிப்பை ஊட்டுவதாக இருக்கிறது. சுமார் இருநூறு கோடி புத்தகங்கள் என்றால் சாதாரணமா என்ன?

"தேச சரித்திரத்தையும் பூகோளத்தையும் பள்ளி மாணவ மாணவிகளுக்கு இங்கே வகுப்பு அறைகளிலிருந்தே போதித்து முடித்து விடுவதில்லை" என ரஹீம் குறிப்பிட்டார். ஒவ்வோர் ஆண்டிலும் பள்ளிக்கூட நிர்வாகிகள் எல்லா மாணவ மாணவிகளையும் தேசத்தின் பல இடங்களுக்கும் சுற்றுலா அழைத்துக் கொண்டு போய் அந்தந்த இடங்களின் சரித்திர முக்கியத்துவத்தை விளக்கி மனதில் பதிய வைக்கிறார்கள். தேசம் முழுதும் சுற்றிப் பார்க்கும் வாய்ப்பு அவர்களுக்குச் சிறு வயதில் கிட்டி விடுகிறது. அந்த வாய்ப்பு அவர்கள் உள்ளங்களிலேயே தேச பக்தியையும் தேசிய உணர்ச்சியையும் தோற்றுவித்து வளர்க்க உதவுகின்றன.

தொழில் வளர்ச்சியில் ஜப்பான் எப்படி முன் நிற்கின்றது என்பது பற்றியும் அவர் விவரித்தார். பெரிய தொழிற்சாலை என்றால் அங்கு பெரிய யந்திரங்களைப் பொருத்தி உருவாக்குவதை மாத்திரம் வைத்துக் கொள்கிறார்கள். அதற்குத் தேவையான பகுதிகளையெல்லாம் வெவ்வேறு இடங்களில் தயாரிக்கச் செய்து, அவை அங்கு கொண்டு வந்து குவிக்கப்படுகின்றன. இந்த வெவ்வேறு இடங்கள் என்பது ஜப்பானியர்களின் வீடுகள்தான். உதாரணமாக நவீன நாகரிகத்தின் சின்னமான டிரான்ஸிஸ்டரின் பல பாகங்களைச் சிறு கைத்தொழில்களாகத் தங்கள் தங்கள் வீடுகளில் அவர்கள் தயாரித்துவிடுகிறார்கள். அதை ஒரு தொழிற்சாலையில் இணைக்கிறார்கள். இதனால் அடக்க விலை குறைகிறது. ஆனால் சரக்கின் தரத்தை எப்போதும் குறையாமல் அவர்கள் பார்த்துக்கொள்கிறார்கள். உலகச் சந்தையில் தங்கள் சரக்குக்கு எப்போதும் மதிப்பு இருக்கும்படி பார்த்துக் கொள்கிறார்கள். புகைப் படச் சாதனங்களையும், காமிராக்களையும், தயாரிப்பதில் கூட அவர்கள் இந்த மாதிரி குடிசைத் தொழில் முறையைத்தான் பின்பற்றுகிறார்கள்.

உபசரிப்பு, விருந்தோம்பல், மரியாதை, பண்பாடு எல்லாவற்றுக்குமே, ஜப்பானியர் பெயர் போனவர்கள். தங்கள் நாட்டுக்கு வந்து செல்பவர்கள் தங்களைப் பற்றியும், தங்கள் நாட்டைப் பற்றியும் உயர்ந்த என்ன



# ஜப்பான்

ணத்துடன் திரும்ப வேண்டும் என்ற நோக்கில் பழகுகிறார்கள்.

ஜப்பானியர்கள் ஹோட்டல் தொழிலில் தலைசிறந்தவர்கள். மேலை நாடுகள் கண்டு பிரமிக்கும் வண்ணம் பெரிய ஹோட்டல்கள் டோக்கியோவிலும் மற்ற நகரங்களிலும் இருக்கின்றன. ஆயிரத்துக்கும் மேலான அறைகள் கொண்ட அந்த ஹோட்டலில் ஜன சந்தடி என்பதை உணரவே முடியாதாம்.

உலகத்தின் எந்தப் பாகத்தினருக்கும் திருப்தி அளிக்கக் கூடிய உணவு வகைகள் இந்த ஹோட்டல்களில் கிடைக்கின்றன.

ஏ. எம். நாயர் என்பவர் டோக்கியோவில் 'நாயர் ரெஸ்டாரண்ட்' என்னும் ஹோட்டலை வெகு நாட்களாக நடத்தி வருகிறார். பாரதத்திலிருந்து போகிறவர்கள் எல்லோருக்குமே அந்த நாயர் ஹோட்டலின் மீது அலாதி மோகம். பப்படமும் நேந்திரங்காய் வறுவலும் கிடைக்கின்றனவே!

சாதாரணச் சாப்பாடு ஒன்றுக்குச் சுமார் நாலரை ரூபாய் வரை ஆகிறதாம். பால் போட்ட சர்வ சாதாரண டீ ஒரு கப்புக்கு ஒரு ரூபாய் வரை கொடுக்க வேண்டியிருக்கிறதாம். தனி மனிதனின் வருமான அளவு அதிகமாக இருப்பதால் பண்டங்களின் விலைகளும் உயர்ந்துதான் இருக்கின்றன.

அங்கே டாக்ஸி ஓட்டிகள் மரியாதையுடன் நடந்து கொள்வதோடு நிறுத்திக் கொள்வதில்லை. நாணயத்துடனும் நடந்து கொள்கிறார்கள். அதிக சம்பாத்தியத்துக்கு ஆசைப்பட்டு ஊரைச் சுற்றி வளைத்து வருவதில்லை. மீட்டர் காண்பிக்கும் பணத்தை விட ஒரு 'யென்' கூட அதிகம் கேட்பதில்லை. ஜப்பானிய நாணயத்துக்குப் பெயர் 'யென்'. ஒரு யென் கிட்டத்தட்ட நம்முடைய ஒன்றரைப் பைசாவுக்குச் சமம்.

ஹோட்டல்காரர்களோ, மற்ற வியாபார ஸ்தாபனங்களோ விளம்பரத்துக்கான துண்டுப் பிரசுரங்களை அச்சடித்து விநியோகிக்கும் போது அவர்களுடைய இடத்துக்கு நகரத்தின் முக்கிய பாகங்களிலிருந்து டாக்ஸியில் எப்படி வரலாம் என்று படமும் போட்டுக் காண்பிக்கிறார்கள். டாக்ஸிப்பிரயாணிகளுக்கு இது சௌகரியமாகவே இருக்கின்றது.

''பிச்சை எடுப்பவர்களை நான் ஜப்பானில் பார்க்கவே யில்லை. என்னுடைய இரண்டாயிரம் மைல் மூலை முடுக்குப் பிரயாணத்தில் ஒரே ஒரு கிராமப் பகுதியில் மாதிரிக்கு ஒரு பிச்சை எடுப்பவனைப் பார்த்தேன். அந்த ஆசாமி கூட வாய் திறந்து ஒரு வார்த்தை பேசவில்லை. காரணம் அவன் வாயை மூடி ஒரு துணியைக் கழுத்தோடு சேர்த்துக் கட்டிக் கொண்டு ஒரு கோவில் வாசலில் உட்கார்ந்திருந்தான். அவன் முன்னாலிருந்த அட்டைப் பெட்டியில் இரக்கமுள்ளவர்கள் சில 'யென்'களைப் போட்டு விட்டுப் போனார்கள்'' என்றார் ரஹீம்.

ஒழுக்கத்தைக் கடைப்பிடிப்பதில் அவர்கள் கண்ணும் கருத்துமாக இருக்கிறார்கள். பத்திரிகைகளைக் கட்டுக் கட்டாகத் தெரு முனையில் வைத்துக் கொண்டே போவார்களாம். தேவையானவர்கள் அதற்கான நாணயங்களைப் பக்கத்தில் போட்டு விட்டுப் பத்திரிகையை எடுத்துக் கொண்டு போகிறார்கள்.

டோக்கியோ நகரத்தைப் பற்றி விளக்க 'கைடு'களை அவர்கள் தயாரித்திருக்கும் வித மிகவும் பிரமிக்கத் தக்கது. தமிழ் நாட்டு சஞ்சிகைகள் தீபாவளி மலர் தயாரிப்ப போல் வழுவழுப்பான காகிதத்தில் வண்ண படங்களுடன் லட்சம் லட்சமாகத் தயாரித் டெலிபோன் மண்டபங்கள், ஹோட்டல் வ வேற்பு அறைகள், கடை வாசல்கள் முதலி இடங்களில் வைத்திருக்கிறார்கள். வெ நாட்டுப் பிரயாணிகளுக்கு அந்தக் கை வெகுவாக உதவுகிறது.

அன்று மே தின விடுமுறை. டோக்கியே நகரமே திருவிழாக் களை பூண்டிருந்தது ரஹீம் தாம் தங்கியிருந்த ஹோட்டல் வாச லிருந்து வேடிக்கை பார்த்துக் கொண்டிரு தார். ஜப்பானிய யுவதி ஒருத்தி காமிராவு கையுமாகப் புகைப்படங்களை எடுத்த வண்ண மாக இருந்தாள்.

நண்பர் ரஹீமுக்குப் புகைப்படங்கள் எ றால் தனி ஆசை. ஆனால் தாமாகக் காமிர வைக் கையாண்டு பழக்கமில்லை. ஆங்கில தெரிந்த ஒரு டாக்ஸி ஓட்டி உதவியுடன் அந்த யுவதி எடுக்கும் புகைப்படங்களி பிரதிகள் விலைக்குக் கிடைக்குமா என் விசாரித்தார்.

அந்த யுவதி புகைப்படப் பிரதிகளை விலைக்குத் தர இயலாது என்று சொல் விட்டாள். ஆனால் அன்பளிப்பாகவே தங்க நாட்டுக்கு வந்திருக்கும் அதிதிக்கு மறுநா மாலையில் கொடுப்பதாக வாக்களித்தாள் ரஹீமின் ஹோட்டல் அறை நம்பரையு விசாரித்து வைத்துக் கொண்டாள்.

தெருவில் போய்க் கொண்டிருந்த அந் யுவதிக்கு மறுநாள் ஹோட்டலைத் தேடி வந்து புகைப்படங்களைக் கொடுக்க என்ன அக்கறை இருக்கப் போகிறது என்று ரஹீம் நினைத்தார் மறுநாள் மாலையில் அறையைப் பூட்டி கொண்டு வெளியேயும் போய் விட்டார்.

ஆனால் அவர் திரும்பி வரும்போது ஓட்டல் வரவேற்பு அறைச் சிப்பந்தி புகைப்படங்கள் அடங்கிய கவரையும் அந்த யுவதி எழுதி வைத்து விட்டுப் போன கடிதத்தையு கொடுத்தார். ரஹீம் பிரமித்துப் போன தில் வியப்பொன்றும் இல்லை.

டோக்கியோ நகரின் மூலை ஒன்றில் இருக் கும் ரங்கோஜி கோவிலில் நேதாஜி போஸின் அஸ்தியை ஒரு கலசத்தில் இட்டு வைத்திருக் கிறார்கள். அந்த இடத்தை ஜப்பானிய மாது ஒருத்தி கவனித்துக் கொள்கிறாள்.

தேசிய உணர்ச்சி, தேசிய அபிமானம், தேசிய பெருமிதம் ஆகிய மூன்றும் ஒருங்கே நின்று ஜப்பானிய மக்களை உறுதி கொண்டவர்களாகவும் உற்சாகம் மிகுந்தவர்களாகவும் ஆக்குவதில் ஆச்சரியமில்லை.

நாற்பது வருட காலத்திற்குள் ஒரு முறை பூகம்பத்தாலும் மற்றொரு முறை செயற்கையான குண்டுவீச்சாலும் வெகுவாகப் பாதிக்கப்பட்ட டோக்கியோ நகரம் மீண்டும் பலம் பெற்று இன்று உலகத்திலேயே கோடிக்கு மேற்பட்ட ஜனத்தொகை கொண்ட பெரிய நகரமாகத் திகழ்கிறது என்றால் அதற்குக் காரணம் ஜப்பானியர்களின் அளவற்ற சுறுசுறுப்புதான்.

– திருமலர்

## மாலை ஸ்கூலில் மாலதி பாடவேண்டும்—ஆனால் அவளுக்கு ஜலதோஷம்!










ஸாரிடான் துரிதமாக, கெடுதல் ஏதுவுமின்றி, நிச்சயமாக நிவாரணம் அளிக்கிறது. தலைவலி, பல்வலி, உடல்வலி, ஜுரம் வரும்போலிருப்பது, ஜலதோஷம் இவற்றிலிருந்து நிவாரணம் பெற ஸாரிடான் சாப்பிடுங்கள். ஸாரிடான் உலகப் புகழ்பெற்ற வலி நிவாரணி.

எப்பொழுதும் வீட்டில் ஸாரிடான் வைத்திருங்கள்.

பெரியவர்களுக்கு ஒரு வில்லை முழு டோஸ். குழந்தைகளுக்கு ¼ லிருந்து ½ வில்லை வரை கொடுக்கலாம்.



ஒரே வில்லை ஸாரிடான் போதும்

ஒரு வில்லை 13 பைசா

# ஸாரிடான் 'ரோஷ்'

வலியைப் போக்குகிறது, ஆசுவாசப் படுத்துகிறது, புத்துணர்ச்சி ஊட்டுகிறது

'ரோஷ்' தயாரிப்பு   ரோஷ் டிஸ்ட்ரிப்யூட்டர்கள்: வால்டாஸ் லிமிடெட்

இருபத்துமூன்றும் அந்தியாயம்

## மக்கள் எழுச்சி

சோழ நாட்டு ஒற்றன் கொண்டு வந்து கொடுத்த ஓலையைப் படித்த வுடன் அமைச்சர் சயங்கொண்ட சோழ வல்லபர் திடுக்கிட்டார். அந்த ஓலையை அதே ஒற்றன் கையூட்டுப் (இலஞ்சம்) பெற்றுக் கொண்டு விழுப்பரையரிடம் காட்டிய செய்தியை அவர் அறியவில்லை. அவருடைய அதிர்ச்சிக்குக் காரணம் கயல்விழி என்ற பாணர் குல மங்கையைச் சிறை செய்து கங்காபுரிக்கு அனுப்பும்படி கட்டளை வந்திருந்ததுதான்.

குள் சொல்லிக் கொண்டார் சோழ வல்லபர். அவரிடம் இப்போது ஏற்படத் தொடங்கியிருப்பது மூன்றாவது மாற்றம். முதன் முதலில் குலோத்துங்க சோழர் குலசேகர பாண்டியரிடம் அன்பு கொண்டிருந்த காலத்தில், பாண்டிய நாட்டின் ஆட்சியில் பாண்டியருடன் கூடிய வரையில் அவர் ஒத்துழைத்தார். போருக்குப்

# கயல்விழி

ஒற்றனை அனுப்பி விட்டு, தம்முடைய ஒற்றர் தலைவன் மாவலிராயனுடன் ஆலோசனை நடத்தினார் சோழ வல்லபர்.

"சோழ சாம்ராஜ்யத்தின் ஆட்சிப் பொறுப்பு முழுவதுமே இப்போது இளவரசர் கைக்கு வந்து விட்டதென்பதற்கு இந்த ஓலையே சான்று. சக்கரவர்த்திகளுடைய ஆலோசனையைக்கூட இளவரசர் மதிப்பதில்லை என்று தெரிகிறது. சக்கரவர்த்திகள் பெண்களையும் புலவர்களையும் கண்டு அஞ்சினார். இளவரசரோ இப்படி ஒரு கட்டளையை நமக்கு அனுப்பியிருக்கிறார்."

"சோழ நாட்டு மாற்றத்துக்குத் தக்கபடி நாமும் மாற வேண்டியது தான்" என்றான் மாவலிராயன். அவனிடமே அந்த மாற்றம் நன்கு தெரிந்தது. முன்போல் அவன் அதிகாரமில்லாத வெறும் ஒற்றனாக இப்போது உலவவில்லை. சோழ நாட்டிலிருந்து புலவனைத் தேடிப் பிடிப்பதற்காக அனுப்பப் பெற்றிருந்த படைக்கு அவனைத் தலைவனாக்கியிருந்தார் அமைச்சர்.

'ஆம்! தலைவருக்குத் தக்கபடி மாற வேண்டியதுதான்' என்று தமக்

பிறகு அவருடைய குணம் மாறியது; செருக்கோடும் பொறாமையோடும் நடந்து கொண்டார். இப்போதோ, சோழ நாட்டில் இராஜ ராஜனின் கை ஓங்குவதைக் கண்டவுடன், தாமே பாண்டியருக்கும் மேலான சக்கரவர்த்தி என்ற மமதை அவருக்கு வந்து விட்டது. மனிதர்கள் மாறக் கூடியவர்கள்; அதிலும் அரசியல் ராஜதந்திர மனமாற்றங்கள் மின்னல் வேகத்தில் ஏற்படக் கூடியவை. அதிகாரம் மிகப் பொல்லாதது.

"மாவலிராயா! இந்தப் பெண்ணை நாம் எப்படியாவது கங்காபுரிக்குக் கொண்டு போய்ச் சேர்க்க வேண்டும். சிறை செய்து கொண்டு போவது அவ்வளவு எளிதல்ல. நாடு நகரங்களில் பரபரப்பு ஏற்பட்டு விடக் கூடாது. பாண்டியருடைய ஆட்சியிலிருக்கும் நாட்டிலிருந்து, நாம் அவருடைய குடிமக்களில் ஒருத்தியைச் சிறை செய்து கொண்டு போனால், பல துன்பங்கள் வரக் கூடும்."

"நம்மிடம் இளைய சக்கரவர்த்திகளின் கட்டளை இருக்கிறது. புலவன்

# அகிலன்

செய்த குற்றத்தைச் சார்ந்த' நடவடிக்கை இது. நம்மிடம் அதி காரமு மிருக்கிறது.''

அமைச்சர் சிரித்தார். இராஜ ராஜனுக்கு மெல்லியலாரிடம் உள்ள மன நெகிழ்ச்சியை அவர் அறிந்தவர்.

மாவலிராயனுக்கும் இது தெரியும். என்றாலும் அவர்கள் அதை வெளியிட்டுக் கொள்ளாமல் இராஜ தந்திரமாகப் பேசிக் கொண்டனர். கயல்விழியைக் கங்காபுரிக்கு அனுப்பி வைப்பதால் அவர்களுடைய அதிகாரம் உயரக் கூடும்.

பத்துப் பன்னிரண்டு குதிரை வீரர்களுடனும் ஒரு ரதத்துடனும் மாவலிராயன் மதுரைக்கு மேற்கே வைகை நதிக் கரையோரமாகப் புறப்பட்டான். அமைச்சர் சயங்கொண்ட வல்லபரின் கட்டளை அவன் கையில் இருந்தது. வைகையும், கருளி ஆறும், தேனி ஆறும் சங்கமமாகும் பகுதியிலுள்ள ஒரு நகரத்தில் அப்போது கயல்விழி தங்கியிருந்தாள். சுற்றுப்புறத்துக் கிராமங்களில் அவ்வப்போது கூத்துக்கள் நடைபெற்றுக் கொண்டிருந்தன.

அதிகாலையில் அவள் தங்கியிருந்த மாளிகைக்கு முன்னால் ரதம் வந்து நின்றது. குதிரை வீரர்கள் வந்து இறங்கினார்கள். மாவலிராயன் மாளிகைக்குள் நுழைந்து ஆதிச்ச தேவரிடமும் கயல்விழியிடமும் தான் வந்த நோக்கத்தைக் கூறலானான்.

''உங்களிடமிருந்து புலவரைப் பற்றிய விவரங்களை நேரில் கேட்டு அறிந்து கொள்ள விரும்புகிறார்கள் எங்கள் சக்கரவர்த்தி. என்னிடம் அமைச்சரின் கட்டளை இருக்கிறது. என்னோடு இப்போதே கங்காபுரிக்குப் புறப்படுங்கள். விரைவில் திரும்பி வந்து விடலாம்'' என்று கயல்விழியிடம் கூறினான் படைத்தலைவன்.

''தனியாகவா?'' என்று கேட்டார் ஆதிச்சதேவர்.

''விரும்பினால் நீங்களும் துணைக்கு வரலாம்.''

''புலவரைப் பற்றி எனக்குத் தெரிந்தது இவ்வளவுதான். அவரை மிகவும் பெருமையோடு இங்கிருந்து அழைத்துக் கொண்டு போனார்கள். இன்னும் திருப்பி அனுப்பவில்லை. ஆகவே அவரைப் பற்றிய விவரங்களை நீங்கள்தான் கூற வேண்டும். நீங்களே அவரை அனுப்பி வைக்க வேண்டும்.''

மாவலிராயனுக்குக் கயல்விழி அவ்வளவு எளிதாகக் கைப்பற்றக் கூடியவள் என்று தோன்றவில்லை. ''ஏதானாலும் சக்கரவர்த்திகளிடம் நீங்கள் நேரில் கேட்டுக் கொள்ளலாம். அவர்கள் சார்பில் அமைச்சர் என்னை அனுப்பியிருக்கிறார்கள். இன்னும் இரண்டு நாழிகைப் பொழுதுக்குள் நீங்கள் இங்கிருந்து புறப்பட வேண்டும். காவலுக்கு வீரர்கள் வந்திருக்கிறார்கள்.''— வீரர்களைப் பற்றி அவன் குறிப்பிட்டது, 'நீ தப்ப முடியாது' என்பது போலிருந்தது.

''நான் பாண்டிய நாட்டுக் குமகள். உங்கள் கட்டளை எதற்கும் என்னால் கட்டுப்பட முடியாது. இங்கே பாண்டியரின் அரசாட்சி நடக்கிறது. அவருடைய ஆணைப்படி நடக்கும் ஆளுங்கணத்தாரும் அதிகாரிகளும் இங்கு இருக்கிறார்கள். அவர்களிடம் போய் முதலில் உங்கள் அமைச்சரின் கட்டளையைக் காட்டுங்கள்.''

மாவலிராயனுக்கு மீசை துடித்தது. சோழ சாம்ராஜ்யத்தின் அதிகாரியான அவன் அந்த நகரத்திலுள்ள ஆளுங்கணத்தாரின் அநுமதி பெற வேண்டுமாம்! ஒரு பாணர் குலப் பெண் அவனிடமே அரசியல் நீதி பேசத் துணிந்து விட்டாள்!

''சக்கரவர்த்திகளிடம் சிற்றரசராக இருப்பவர் பாண்டியர். பாண்டியரிலும் உயர்ந்தவரிடமிருந்து உங்களுக்கு ஓலை வந்திருக்கிறது'' என்று ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு கூறினான் மாவலிராயன்.

''பாண்டியருக்கு வேண்டுமானால் உங்கள் சக்கரவர்த்தி உயர்ந்தவராக இருக்கலாம். எனக்குப் பாண்டியரை விட உயர்ந்தவர் வேறு யாருமில்லை. அவருடைய கட்டளைக்குத்தான் என்னால் பணிய முடியும். நீங்கள் இங்கிருந்து போய் வரலாம்.''

உள்ளே அவர்கள் பேசிக் கொண்டிருப்பதற்குள் ஊர் முழுதும் கயல்விழியின் மாளிகைக்கு முன்னால் வந்து கூடி விட்டது. சரேலென்று கயல்விழி மாளிகையின் முகப்புக்கு ஓடி வந்தாள்; கூட்டத்தினரைக் கூர்ந்து கவனித்தாள். அவர்களில் பொது மக்களுக்கிடையில் ஆளுங்கணத்தாரும் ஊர்க் காவல் படையினரும் இருந்தார்கள். சோழ நாட்டுக் குதிரை வீரர்களையும் கவனித்தாள். வேலும் வாளுமாக ரதத்தைச் சூழ்ந்து கொண்டு பத்துப் பேர்கள் நின்று கொண்டிருந்தனர்.

அவளுக்குப் பின்னால் வந்து நின்ற மாவலிராயனுக்குக் கூட்டத்தைக் கண்டவுடன் திகைப்பு ஏற்பட்டது. ஆனால் பத்து குதிரை வீரர்களைக் கொண்டு அதைப் போல் பன்மடங்கு கூட்டத்தை அடக்கத் தெரிந்தவன் அவன். மேலும் அவன் சோழ நாட்டு அதிகாரி.

''கேளுங்கள் பெருமக்களே!'' என்று கூவினாள் கயல்விழி.

''இப்படித்தான் ஒரு ரதத்தைக் கொண்டு வந்து நிறுத்தி முன்னால் புலவரைக் கங்காபுரிக்கு அழைத்துச்

சென்றார்கள். அங்கே அவரைச் சிறையிட்டு வைத்தார்கள். அவரை உயிருடன் வைத்திருக்கிறார்களோ, கொன்று விட்டார்களோ தெரியவில்லை. இப்போது என்னைச் சிறைப் பிடித்துக் கொண்டு போக வந்திருக்கிறார்கள். இவர்களிடம் பாண்டியரின் கட்டளையும் இல்லை.''

''கயல்விழி! ரதத்தில் ஏறுகிறாயா, இல்லை, உன்னை விலங்கிட்டு அழைத்துச் செல்ல வேண்டுமா?'' என்று அதட்டினான் மாவலிராயன்.

பயங்கரமாகச் சிரித்தாள் கயல்விழி. ''உனக்கு அவ்வளவு ஆண்மையிருக்கிறதா? இந்தா, கரங்களை நீட்டுகிறேன்; முடிந்தால் விலங்கிட்டு அழைத்துச் செல்!'' கரங்களை நீட்டிக் கொண்டு அவனை நெருங்கினாள் கயல்விழி. அவனுடைய வீரர்கள் அவன் முகத்தை நோக்கினர். கூட்டத்தினர் 'உள்ளக் கொதிப்பு நெருப்பாக அங்கே பரவத் தொடங்கியது. மாவலிராயன் அலட்சியமாக நகைத்தான், அவர்களைப் பார்த்து. சோழ நாட்டிடம் அடிமைப் பட்டிருக்கும் கூட்டத்துக்கு ஆத்திரம் கூட வருகிறதே! மதுரை நகரம் அழிக்கப்பட்டதை அதற்குள் இவர்கள் மறந்து விட்டார்களா?

கேவலம், கூத்தாடிப் பிழைக்கும் ஒரு பெண் பிள்ளையிடம் அவன் தோற்றுப் போக விரும்பவில்லை. நீட்டிய அவள் கரத்தைப் பற்றி ரதத்துக்கு அவளை இழுத்தான்.

அவ்வளவுதான் !...

ஊர்க் காவல் வீரர்கள் அவ்வளவு பேரும் ஏதோ திட்டமிட்டிருந்தவர்கள் போல் குதிரை வீரர்களைச் சூழ்ந்து கொண்டார்கள். ஒரு சிலர் ஓடி வந்து மாவலிராயனைப் பிடித்து அவன் கரங்களைக் கட்டினார்கள். அவனை ரதத்துக்கு இழுத்துக் கொண்டு வந்து அதனுள் தள்ளினார்கள். வீரர்களின் ஆயுதங்கள் கைப்பற்றப்பட்டன. அவர்களைக் குதிரைகள் மீது ஏற்றி விட்டு, ''திரும்பிப் பாராமல் செல்லுங்கள்!'' என்றார் நகரத்தின் தலைவர்.

''உங்கள் சக்கரவர்த்தியிடம் போய் இதைச் சொல்லுங்கள்: பாண்டிய நாட்டின் கொற்றவைத் தேவியாக மக்கள் கயல்விழியை மதிக்கிறார்கள். அவர் சென்ற இடமெல்லாம் சோழ சாம்ராஜ்யத்தின் மேலாட்சி அழிந்து விட்டது. அவருக்குத் தீங்கு செய்யத் துணிந்தவர்களைப் பாண்டிய மக்கள் கொற்றவைக்குப் பலி கொடுக்கத் தயங்க மாட்டார்கள் !''

வயது முதிர்ந்த பெரியவர் ஒருவர் ஆவேசம் வந்தவர்போல் கூறினர்.

''அடுத்த படையெடுப்பு நடந்தால் அதற்கு இவளே காரணமாக இருப்பாள்!'' என்றான் மாவலிராயன்.

''அப்போது உங்கள் சாம்ராஜ்யம் சரிந்து விழும்!'' என்றாள் கயல்விழி.

அவர்களைத் திருப்பி அனுப்பிய பிறகு, நகரத்துப் பெருமக்களின் தலைவர் கயல்விழியிடம் கூறினர்: ''மதுரையிலிருந்து முன்பே செய்தி கிடைத்ததால் எச்சரிக்கையாக இருந்தோம். இல்லாவிடில் இதற்குள் நாங்கள் தங்களை இழந்திருப்போம்.''

''பெரும் படையுடன் அவர்கள் மீண்டும் வரக் கூடும். அல்லது வேறு எந்த வழிகளிலாவது என்னைச் சிறைப்படுத்த முயல்வார்கள். அதற்குக் காரணமும் இருக்கிறது.''

தலைவருக்கும் அந்த நினைவு இல்லாமல் இல்லை. அடுத்த நடவடிக்கையைப் பற்றிய முடிவுக்காக அவர் விழுப்பரையரின் ஆணையை எதிர்பார்த்திருந்தார்.

## இருபத்திநான்காம் அத்தியாயம்

# ஏலமலைக் காட்டில்

பாண்டிய நாட்டின் மேற்கு எல்லைக்கும் சேர நாட்டின் வடகிழக்கு எல்லைக்கும் இடையிலிருந்த காட்டு மலைப் பகுதி மனித சஞ்சாரமில்லாத பயங்கரமான பிரதேசம். எந்த அரசும் அங்கு ஆட்சி செலுத்த வில்லை. யானைகளும், கரடி, புலி, சிங்கம் முதலிய வனவிலங்குகளுமே அங்கு தலை நிமிர்ந்து உலவி வந்தன. மனிதர்கள் யாரும் துணிந்து அதற்குள் நுழைந்ததுமில்லை; அப்படித் துணிந்தவர்கள் உயிருடன் திரும்பியதும் இல்லை.

காடுகள் மண்டிக் கிடந்தன; செங்குத்தான குன்றுகளும் மலைகளும் மனிதர்களை வெருட்டி நின்றன; காட்டருவிகளும் ஆறுகளும் துள்ளிக் குதித்து விளையாடின. இயற்கைத் தேவி அங்கு அற்புதமான எழிலோடு களிநடம் புரிந்து கொண்டிருந்தாள்.

வானுற ஓங்கிய மூங்கில்கள், தேக்குகள், இன்னும் எத்தனை எத்தனையோ வகைக் காட்டு மரங்கள். மரங்களினூடே ஏலக்காய்ச் செடிகள், ஆள் உயரத்துக்கு அடர்ந்து நின்ற

மலைப் புன் கூட்டம், பல்வண்ணப் பூக்கொண்டைகள் தாங்கிய தாவரக் கன்னிகள், எங்கும் பசுமை, எங்கும் செழுமை, எங்கும் குளுமை!

அந்தக் காட்டை நோக்கி இரண்டு குதிரைகள் வந்து கொண்டிருந்தன. ஒரு குதிரையில் ஆதிச்சதேவர் இருந்தார்; மற்றொரு குதிரையில் ஓர் இளைஞன் இருந்தான். இளைஞனின் தோற்றத்தில் மிடுக்கிருந்தது. போர்வீரனுக்குரிய தலைப்பாகை, கவசம், உடைவாள் இவ்வளவும் அவனிடம் இருந்தன.

காடு நெருங்க நெருங்க ஆதிச்ச தேவரின் படபடப்பு அதிகமாகியது. அவருடைய குதிரையின் வேகம் தளர்ந்தது. முன்னால் சென்ற இளைஞனின் விழிகள் அடிக்கடி அவரைத் திரும்பிப் பார்த்துச் சினந்தன. அந்த விழிகளுக்கு அஞ்சிச் சிறிது நேரம் விரைந்து செல்வதும் பிறகு தளர்ந்து விடுவதுமாகப் பின்பற்றிக் கொண்டிருந்தார் ஆதிச்சதேவர்.

அவருக்குப் பொறுக்க முடியவில்லை.

''நாம் எங்கே அந்தப் புலவனைப் பற்றி நமக்குத் தெரிந்த செய்திகளைச் சோழ நாட்டில் சொல்லி விடுவோமோ என்று அஞ்சுகிறார்கள். அதற்காகவே நம்மை இப்படிக் காட்டுக்கு அனுப்பி வன விலங்குகளுக்கு இரை கொடுக்கப் பார்க்கிறார்கள். எனக்கென்னவோ நாம் உயிருடன் திரும்புவோம் என்ற நம்பிக்கையில்லை'' என்றார் அவர்.

''நீங்கள் சற்று விரைந்து வந்தால் நலமாக இருக்கும்'' என்றான் இளைஞன்.

''இதோ, மலையடிவாரம் வந்து விட்டது. இனிமேல் குதிரையின் மேல் எப்படிப் போவதாம்?''

மலையடிவாரத்துக்குப் போவதற்கு முன்பாகவே எதிரில் நின்ற மரங்கள் அசைந்தன. சரசரவென்ற சத்தம் கேட்டது. வேல் முனைகள் ஒன்றோடொன்று மோதிக் கொள்ள ஐந்தாறு வீரர்கள் மரங்களிலிருந்து இறங்கி ஓடி வந்தார்கள். வந்தவர்கள் யாரென்று கூடக் கேட்காமலே அவர்கள் மேல் எறிந்துவிடுவார்கள் போல்தோன்றியது.

இளைஞன் குதிரையிலிருந்து இறங்கினான். ஆதிச்சதேவரும் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு குதித்தார்.

வந்தவர்கள் பேசுவதற்கு முன்பே, ''எங்கே உங்கள் வலது கைகளைக் காண்பியுங்கள்!'' என்று கட்டளையிடும் குரலில் கூறினான் இளைஞன். அவர்களுடைய கரங்களில் மகர மீனின் சின்னம் பச்சை குத்தப் பெற்றிருந்தது. இளைஞன் தன் கரத்தையும் நீட்டினான். ஆதிச்சதேவரின் கரத்தையும் பற்றி இழுத்துக் காட்டினான். அதே சின்னம் அவர்களிடமும் இருந்தது.

ஓலையை அந்த வீரர்களின் தலைவனிடம் கொடுத்தான் இளைஞன். ''இவர்கள் இருவரும் நம் தலைவரின் பாதுகாப்பில் இருக்க வேண்டியவர்கள். உடனே அழைத்துச் சென்று சேர்ப்பியுங்கள். — புலவர்'' என்று எழுதப்பட்டிருந்தது ஓலையில்.

பணிவோடு அவர்களுடைய துணைக்கு இரு வீரர்களை அனுப்பி வைத்தான் காவல் தலைவன். முன்னும் பின்னுமாக அவர்கள் செல்ல, இடையில் ஆதிச்ச தேவரும், அந்த இளைஞனும் ஒன்றி நடந்தார்கள். குதிரைகள் மலையடிவாரத்தில் நிறுத்தப்பட்டு விட்டன.

கதிரவன் உச்சியில் இருந்தாலும் அங்கே சிறிதும் வெப்பமில்லை. அவர்கள் களைப்பின்றி நடந்தார்கள். நாலாபுறமும் திரும்பி அங்கு மண்டிக் கிடந்த பேரழகை விழிகளால் பருகிக்கொண்டே சென்றான் இளைஞன். வளைந்து வளைந்து மேலே சென்ற பாதையில் அவர்கள் மலையுச்சிக்குச் சென்றார்கள். பிறகு அதன் மறுபுறத்துக்கு இறங்கினார்கள். இளைஞனால் தன் விழிகளை நம்பவே முடியவில்லை.

மரங்கள் அடர்ந்த பகுதிகளினூடே வரிசை வரிசையாகக் கூரை வேய்ந்த பல குடிசைகள் தென்பட்டன. குடிசைகளுக்குள்ளிருந்து புகை மூட்டம் எழுந்து கொண்டிருந்தது. மூங்கில் பட்டைகளாலான சுவர்கள்; மலைப் புல் வேய்ந்த கூரைகள். பர்ணசாலைகள் அமைத்துக் கொண்டு கானகங்களில் முனிவர்கள் வாழ்ந்து வந்ததாக அந்த இளைஞன் கேள்வியுற்றிருந்தான். இப்போது அவனுக்கு அந்த நினைவு வந்தது.

இலைக் குடில்களில் பெண்கள் யாரையுமே காண முடியவில்லை. எல்லோரும் ஆண்கள். கண்களில் ஐயம் மிதக்க அங்கே நுழைந்த புதியவர்கள் இருவரையும் பார்த்து விட்டு, அவர்கள் தங்கள் தங்கள் வேலைகளில் மூழ்ந்திருந்தார்கள்.

சில இடங்களில் தரை மட்டத்துக்கு மேல் பரண்களை அமைத்துக் குடில்களைக் கட்டியிருந்தார்கள். வனவிலங்குகளிடமிருந்து பாதுகாத்துக் கொள்ளக் கூடிய தனிக் குடில்கள் அவை.

திடீரென்று யானைகள் பிளிறும் குரல் பயங்கரமாக எழுந்தது. இளைஞனின் கரத்தை இறுக்கமாகப் பற்றிக் கொண்டார் ஆதிச்சதேவர். இளைஞனும் தன்னையறியாது நடுங்கினான்.

யானைக் கூட்டத்துக்கு இடையில் அகப்பட்டுக் கொண்டோமா?'

வீரர்கள் அமைதியாகவே நடந்தார்கள். சத்தம் வந்த திசையில் திரும்பிப் பார்த்த போது, அங்கே தொலைவில் பெரியதொரு யானைக் கூட்டம் தெரிந்தது. மந்தை மந்தையாக அவை மலைப் புல்லுக்கிடையில் ஓட்டமும் நடையுமாக வந்து கொண்டிருந்தன. ஒவ்வொரு யானையின் மீதும் அங்குசம் தாங்கிய ஒரு வீரன் அமர்ந்திருந்தான்!

இளைஞன் மெய்ம்மறந்து நின்றுவிட்டான். குலோத்துங்க சோழச் சக்கரவர்த்தியின் யானைப் படைதான் இங்கு திரண்டு வந்து விட்டதா! இருக்க முடியாது. நெடு நாட்களாக நாட்டில் இருந்து பழக்கப் பெற்ற யானைகளல்ல இவை; அடர்ந்த உரோமங்களும், இயற்கையான உடல் வளமும், கதிரொளியில் மின்னும் கூர்மையான தந்தங்களும் கொண்ட காட்டு யானைக் கூட்டமிது.

மேலே நடந்தார்கள். பசியாறிக் கொள்வதற்கு வழியில் குலையில் பழுத்த வாழைகள் நிறைந்திருந்தன. அருவித் தண்ணீர் தேனாகச் சுவைத்தது. நாட்டு வாழைக் கனிகளுக்கு இல்லாத நிறம், மணம், சுவை அந்தக் கனிகளுக்கு.

தொலைவில் கம்பீரமான ஒற்றை மணியோசை கேட்டது. முன்னால் சென்ற காவலன் சட்டென்று பின்னால் வந்தவனைத் திரும்பிப் பார்த்தான். அவர்களுடைய முகத்தில் புத்தொளி பொங்கியது. நடையில் முன்னைக் காட்டிலும் மிடுக்குத் தென்பட்டது.

மணியோசை நெருங்கிக் கொண்டே வந்தது. யானையின் கழுத்து மணி ஓசை அது.

"என்ன?" என்று கேட்டான் இளைஞன்.

"தலைவர் வருகிறார்" என்று பயபக்தியோடு கூறினான் காவலன்.

யானை வருவதற்கு முன்பே அதன் மணி ஓசை வந்ததைப் போன்று, தலைவன் வருவதற்கு முன்பே அவன் வலிமையையும் புகழையும் அந்த வீரர்களின் முகங்களிலிருந்து கண்டுகொண்டான் இளைஞன். 'மனிதர் நெருங்கவும் அஞ்சும் இந்தக் கானகத்துக்குள் ஒரு புதிய நாட்டையே அல்லவோ உருவாக்கியிருக்கிறான்! யானைக் கூட்டத்தை மடக்கிப் பசுக் கூட்டமெனப் பழக்கியிருக்கும் அந்த வித்தகன் எப்படியிருப்பான்!'

தொலைவில் எதிரில் யானை தெரிந்தது. வீரர்கள் இருவரும் முன்னால் ஓடிச் சென்று சிரம் தாழ்த்தி வணங்கி நின்றார்கள். யானையில் இருந்தவனை இளைஞன் நோக்கினான்; இளைஞனைத் தலைவனும் நோக்கினான். இருவரும் ஒருவரையொருவர் நோக்கியவாறே அவரவர் இடத்தில் இருந்தனர். தன்னை மறந்திருந்த இளைஞன் சுய உணர்வு பெற்றவன் போல் ஆனந்தக் கண்ணீர் பொங்கக் கரம் கூப்பினான். ஆதிச்ச தேவர் மகிழ்ச்சிப் பெருக்கு தாங்காமல் வாய்விட்டுக் கூவி விடுவார்போல் தோன்றியது.

யானை சற்று முன்னே வந்தது. துதிக்கையால் இளைஞனின் இடையை வளைத்து அவனைத் தூக்கித் தலைவனிடம் கொடுத்தது. அப்படியே தலைவனின் பரந்த மார்பகத்தில் சாய்ந்து விடத் துடித்தான் இளைஞன். அடுத்தாற்போல் ஆதிச்சதேவருக்கும் யானை தன் காலை மடக்கிக் கொடுத்தது. அவரும் ஏறிக் கொண்டு தலைவனின் பின்புறம் அமர்ந்தார். யானை திரும்பி நடந்தது.

தலைவன் மெல்ல இளைஞனின் காதருகில் வந்து, "இளைஞனே! உன் பெயரை நான் அறிந்து கொள்ளலாமோ?" என்று கேட்டான்.

"தந்தையார் எனக்குப் பெயர் வைக்க மறந்து விட்டார்!"

"'கயல்விழி' என்ற பெயர் யார் வைத்த பெயரோ?"

"அதை யாருமே இவ்வளவு அன்போடு அழைத்ததில்லை!" என்று அவனுக்கு மட்டிலும் கேட்கும்படியாகக் கூறினான் அவன்.

**(தொடரும்)**

## குட்டிக் கதை

இரண்டாம் உலகப்போர் நடந்து கொண்டிருந்தபோது யால்டாவில் நேச நாட்டுத் தலைவர்களான ரூஸ்வெல்ட், சர்ச்சில், ஸ்டாலின் இம்மூவரும் பேசிக்கொண்டிருந்தனர். அப்போது சர்ச்சில் "தெரியுமா உங்களுக்கு? இன்றிரவு நான் ஒரு கனவு கண்டேன். அதில் கடவுள் தோன்றி 'உன்னை உலகின் பிரதமராக்குகிறேன்' என்று வாக்களித்தார்" என்றார். சர்ச்சில் பேச்சைக் கேட்ட ரூஸ்வெல்ட், "பார்த்தீர்களா மறந்தே போய் விட்டேன். இன்றிரவு நானும் அதேபோல் ஒரு கனவு கண்டேன். அதில் கடவுளே தோன்றி 'உன்னை உலகின் ஜனாதிபதியாக் ஆக்குகிறேன்' என்று உறுதி கூறினார்" என்றார். இருவரும் அமைதியாக உட்கார்ந்திருந்த ஸ்டாலினைப் பார்த்தார்கள். அவர் தம் வாயிலிருந்த பைப்பை எடுத்து விட்டுச் சொன்னார்: "இன்றிரவு உங்கள் இருவருக்கும் அப்படியொரு வாக்கு அளித்ததாகவே எனக்கு நினைவில்லை!"

# ராஜ யோகம்

கதை: தம்பு

சித்திரம்: செல்லம்

௯

யோகம் தன் சிநேகிதை பிரபாயினிடம் தானும் ராஜாவும் முட்டிக்கொண்டதுமுதல், அவன் ஒரு மோட்டார் வானில் ஏற்றிச் செல்லப்பட்டதுவரை நடந்த விஷயங்களை எல்லாம் விவரமாகக் கூறுகிறாள்.





















தங்கப்பா! இவரை அழைத்துக் கொண்டு போ!

நான் கேவலம் ராணி இல்லை. நான் மௌத்கல்யரின் பத்தினி நளாயினியாக்கும்! சூரியனை அஸ்தமிக்காதிருக்கச் செய்த வளாக்கும்!

டாக்டர், ஸார்! நான் என்ன செய்வே இவள் இப்படித்தான் அடிக்கடி பேசுகிறா

(தொடரும்)

# கணவராக இருந்தால்



ராஜம் கிருஷ்ணன்

பாத்திரங்கள் :

| | | |
|---|---|---|
| வாசு | — | ஒரு நடுத்தரக் குடும்பத் தலைவர். |
| விசாலம் | — | வாசுவின் மனைவி |
| ராதா | — | தம்பதியின் பதினேழு வய தான மகள். |
| விச்சு | — | வாசுவின் சகோதரி மகன் |

[காலை வேளை. நகரின் நெரிசலான பகுதியில் ஒரு வீட்டு போர்ஷன்.]

விசாலம் (உள்ளிருந்தபடியே): அடீ, ராதா! அந்தக் கீரைக்காரனைக் கூப்பிட்டு இரண்டு கட்டுக் கீரை வாங்கு !

ராதா (புத்தகத்தை அலுப்புடன் விட்டெறிந்து விட்டு): அப்பப்பா! படிக்க விடமாட்டாள்! (வெளியே போகிறாள்.)

விசாலம்: ஏழு பைசாக் கட்டுப் போதும்.

ராதா (சற்றைக்கெல்லாம் திரும்பி வந்து): இந்தா, சில்லறை கொண்டா.

விசாலம்: அப்பாவின் சட்டைப் பையில் பர்ஸ் இருக்கும், பார்த்து எடுத்து வா. அப்படியே அவரையும் எழுப்பு. மணி ஏழடிக்கப் போகிறது.

ராதா: பர்ஸில் பத்துப் பைசாதானம்மா இருக்கிறது.

விசாலம்: உன்னைப் பார்க்கச் சொல்லவில்லையடி, அதிகப் பிரசங்கி! பர்ஸைக் கொடுத்துவிட்டு அப்பாவைப் போய் எழுப்பு.

ராதா: நீயே பார். வெறும் பத்துப் பைசாதான்.

விசா: அட....? நேற்று காப்பிப் பொடியும், காய்கறியும் வாங்கி வரச் சொல்லி நாலு ரூபாய் கொடுத்தேனே? காப்பிப் பொடி எண்பது பைசா, கத்திரிக்காய் முப்பது பைசா, பஸ் செலவு முப்பத்தெட்டுப் பைசா போக.....

ராதா (அறைக்குள் சென்று): அப்பா! அப்பா ! மணி ஏழடிக்கப் போகிறது! அம்மா எழுப்பச் சொல்கிறாள்!

விசா: ஏ, கழுதை! வாயைப் பார்! கீரைக்காரன் வாசலில் கத்துகிறான்! இந்தா, ஒரு கட்டைத் திருப்பிக் கொடுத்து விட்டு, பத்துப் பைசாவில் மீதி வாங்கி வா !

[படுக்கையில் வாசு உட்கார்ந்து கண்களைக் கசக்குகிறான்.]

விசா: ஆமாம்! நேற்று நான் உங்களிடம் நாலு ரூபாய் கொடுக்கவில்லை.

வாசு (சுவாரசியமாக): கொடுத்தாய்.

விசா: காப்பிப் பொடி பில் இருக்கிறது. எண்பது பைசா. கத்திரிக்காய் முப்பது பைசா. பஸ் சார்ஜ் முப்பத்தெட்டு பைசா. போக என்ன இருக்கும்?

வாசு (எரிச்சலைக் காட்டிக் கொள்ளாமல்): பொழுது விடிஞ்சு கணக்குப் போடச் சொல்லாதேயேன், விசாலம் !

விசாலம் (அங்கே வரும் ராதாவிடம்) : மீதி என்னடி, ராதா?

ராதா: மீதி ஒன்றுமில்லை அம்மா' கீரைக் கட்டு பத்து பைசாவுக்குக் குறையாதாம்!

விசா: உலக்கைக் கொழுந்தே! நாலு ரூபாயில் காப்பிப் பொடியும் கத்திரிக்காய் வாங்கினதும் பஸ் சார்ஜும் போக என்ன ஆச்சு என்று கேட்கிறேன். இதோ பார் பில்...

ராதா: என்னம்மா நீ. இல்லாத கணக்கெல்லாம் கேட்கிறாய். (சலிப்புடன் கூட்டுகிறாள்) நூற்றுப் பத்தும், முப்பத்தெட்டும், இந்தப் பத்தும் போக,—

விசா: மீதி இரண்டு ரூபாயும் நாற்பத்திரண்டு பைசாவும் இருக்க வேண்டுமே? கடன் கொடுத்தீர்களா, யாருக்கேனும்?

வாசு: பூ வாங்கி வந்தேன்போலிருக்கிறதே?

விசா: பூவா? என்ன உளறுகிறீர்கள் ? ஞாபக மறதி என்றால் வரம்பில்லையா? அப்பா நேற்றுப் பூ வாங்கி வந்தாராடி, ராதா ?

ராதா: அப்பா யாருக்கு வாங்குவாரோ?

விசா: உன்னை அநாவசியம் பேசச் சொல்லவில்லை !

ராதா: நான் என்னம்மா சொன்னேன் ? ஒரு வேளை, பூ வாங்கிக் கொண்டு அத்தையைப் பார்த்து விட்டு வரப் போனாரோ என்று கேட்டேன் !

விசாலம்: அப்படியா? புரசைவாக்கம் போனீர்களா என்ன? ஜாதகம் கொடுத்தாளா, உங்கள் அக்கா ?

வாசு: பூ, நமக்குத்தான் வாங்கினேன்; பஸ் கூட்டத்தில் கையில் கசங்குமே என்று... ராகவனுடைய பையில் வைத்தேன் போல் இருக்கிறது. அவன் லஸ்ஸில் இறங்கிப் போயிருக்கிறான், நினைவில்லாமல்.

விசா: உங்கள் மறதியைச் சொல்லுங்கள்! மல்லிகைப் பூவா, கனகாம்பரமா ?

வாசு: கனகாம்பரம்தான் போலிருக்கிறது.

ராதா: அதுகூட நினைவில்லை, இந்த அப்பாவுக்கு. நம் அதிர்ஷ்டம், அப்பாவாக வாங்கினால்கூட யாருக்கேனும் போய் விடுகிறது!

விசா: பூ, நாற்பது பைசா இருக்கும். மீதி இரண்டு ரூபாய் இருக்க வேண்டுமே ?

வாசு: அப்பப்பா.... அந்த லிங் வந்து, நச்சரித்தான், குழந்தைக்கு உடம்பு சரியில்லை என்று....

விசா: தூக்கிக் கொடுத்தீர்களாக்கும்! எவனுக்குக் கடன் கொடுத்தால் திரும்பி வருமா? ஏற்கனவே நீங்கள் இப்படிக் கொடுத்த கடன் பதின்மூன்று ரூபாய் வராத பாக்கியில் நிற்கிறது. உங்களுக்குக் குடும்பக் கவலைதான் இல்லையென்றாலும் பணத்தில் கவனம் இருப்பதே இல்லை! சொன்னால் கோபம் வரும்!

வாசு (அமைதியான புன்னகையுடன்): எனக்குக் கோபமா? எனக்கா?

விசா: போதும். என்ன சிரிப்பு வேண்டிக் கிடக்கிறது? அடி ராதா, போய் அடுப்புப் பாலைக் கிளறி விடு!

வாசு: உன்னைப் போல் கண்டிப்பாக இருக்கத் தெரியவில்லை விசாலம், எனக்கு.

விசா: நான் நாலு மாசமாக உங்களக்கா விடம் போய் ஜாதகத்தை வாங்கி வாருங்கள் என்று கரடியாய்க் கத்துகிறேன். இந்தப் பெண்ணானால் குருட்டுக் கனவு கண்டு கொண்டிருக்கிறாள்.

வாசு: எனக்குத் தெரிகிறது விசாலம்.

விசா: தெரிந்து ஒரு பைசாப் பிரயோசனம் இல்லையே? நான் வாய் விட்டு மூன்று தரம் உங்களக்காவிடம் கேட்டாச்சு. பையன் கெட்டிக்காரன். இவனுக்கும்தான் பதினேழு முடிஞ்சு போயாச்சு.

வாசு: இந்த ஞாயிற்றுக்கிழமை இதுதான் எனக்கு வேலை.

விசாலம்: என்னமோ? உங்கள் மசமசப் புக்கும், பெண்ணுக்குக் கல்யாணம் என்ற நினைப்புக்குமே விட்ட இருப்பதாகத் தெரிய வில்லை. எப்படி நடக்குமோ?

வாசு: நீ இருக்கும்போது எனக்கு ஒரு கவலையும் இல்லை, விசாலம்!

விசா: மிக அழகாக இருக்கிறது. படுக்கையை விட்டிறங்கி மேல் வேலையைப் பாருங்களேன்? ஸலூனுக்குப் போக வேண்டாமா?

வாசு: போக வேண்டுமா? ஓஹோ?

(தலையைத் தடவிக் கொள்கிறான் வாசு.)

விசா: இதற்கொன்றும் அழகு காட்ட வேண்டாம்!

வாசு: அழகா காட்டுகிறேன்?

விசா: பின்னென்ன? மணி ஏழடித்தபின் நீங்கள் கிளம்பிப் போவதற்குள் சலூனில் ஏகக் கூட்டம் கூடி விடும். இன்று இனிமேல் சலூன் வேண்டாம். லாண்டிரித் துணியை வாங்கி வந்து விட்டு எண்ணெய் தேய்த்துக் குளியுங்கள், இன்றைக்கு!

வாசு: எண்ணெய்க் குளி ஞாயிற்றுக் கிழமை ஆகட்டுமே, விசாலம்?

விசாலம்: வேண்டாம், வேண்டாம். ஆபீஸில்லாத நாளில் எண்ணெய் தேய்த்துக் குளித்து விட்டுத் தூங்குவீர்கள்.

வா (சிரித்து): ஆபீஸிருந்தால் தூங்க முடியாது என்று உன் எண்ணம் போலும்!

விசா: இந்தக் கிண்டலெல்லாம் இப்போது வேண்டாம். ஏ, ராதா! அப்பாவுக்கு எண்ணெய் சீயக்காய் எடுத்து வை. எனக்குத் தலைக்கு மேல் வேலை கிடக்கிறது.

ராதா: டப்பாவில் எண்ணெய் இல்லையம்மா!

வாசு (படுக்கையை விட்டு இறங்கி வந்து கொண்டு): நல்லதாய்ப் போச்சு!

விசா: ஒன்றும் போக வேண்டாம். நேற்று துணிக் கடைக்குப் போய் விட்டு எண்ணெய்க் கடைக்குப் போகாமல் வந்து விட்டேன். போய். மாடி வீட்டு மங்களத்திடம் ஒரு கிண்ணம் எண்ணெய் வாங்கி வா!

வாசு: புடவை வாங்கினாயா, விசாலம்?

விசா (வாங்கி வந்த துணியைக் காட்டி): இந்தத் துணியைப் பார்த்தீர்களா?

வாசு: ஜன்னல் திரைக்கு வாங்கி விட்டாயா? நல்ல வேலை. ரொம்ப நாட்களாக நான் இந்த வீட்டு ஜன்னல்களுக்குத் திரை போடச் சொல்ல வேண்டும் என்று...

விசாலம்: இடக்குப் பேச வேண்டாம். நன்றாக இல்லையா? உங்கள் சட்டைக்குத் தான் வாங்கினேன்.

வாசு (திடுக்கிட்டாற்போல்): என்னது? நிஜமாக விளையாடுகிறாயா, விசாலம்?

விசாலம் (நொடித்து): எனக்கு வேறு வேலையில்லை. ஏன், இந்தத் துணிக்கு என்ன? உங்களுக்கு இந்த மாதிரி எடுப்பாக இருக்கும். தையற்காரனிடம் நேராகவே கொடுத்திருப்பேன். உங்களிடம் துணியைக் காட்ட வேண்டும் என்று கொண்டு வந்தேன்.

வாசு (எரிச்சலுடன்): காட்டாமலே கொடுத்திருக்கலாமே?

விசா: ஏன் எரிந்து விழுகிறீர்கள்? மீட்டர் மூன்று ரூபாய் பத்து பைசா கொடுத்து வாங்கினேன். இதற்கு மேல் விலை கொடுப்பார்களா, சட்டைத் துணிக்கு?

வாசு: உன்னிடம் நான் மட்டத் துணி வாங்கினாயென்று சொன்னேனா விசாலம்?

விசா: பின்னே, சலித்துக் கொள்கிறீர்களே? இதுதான் இப்போதைய மாதிரியாம். கடைக்காரனே சொன்னான், இது மிகவும் நன்றாக இருக்கும் என்று.

வாசு: விசாலம், கடைக்காரன் சொல்லி நான் போட்டுக் கொள்ள வேண்டாம். நீ சொன்னதே, போதும்!

விசாலம்: உங்களுக்கு நான் எது செய்தாலும் பிடிக்காது!

வாசு: நான் இப்போது ஏதேனும் சொன்னேனா, விசாலம்?

விசாலம்: வாயைத் திறந்து சொல்ல வேணுமா? ஒவ்வொரு வீட்டில் இப்போது ஒவ்வொன்றுக்கும் புருஷனை நச்சரிக்கிறார்கள். நான் உங்களுக்கு ஒரு உப்புக் கல்லை வைப்பதில்லை. பலன்?





''அந்த வித்வானின் பரம ரசிகர்கள் அவர்கள். அவர் மனசுக்குள்ளே பாடிக்கொண்டிருப்பதைக் கூட விடாமல் கேட்பதற்கு இந்த ஏற்பாடு செய்து கேட்டுக்கொண்டிருக்கிறார்கள்!''

வாசு: விசாலம், இப்போது என்னை என்ன செய்யச் சொல்கிறாய்?

விசாலம்: உங்களை ஒன்றும் செய்யச் சொல்லவில்லை. காப்பியைக் குடித்துவிட்டு லாண்டிரிக்குப் போய்த் துணியை வாங்கி வந்த பின் எண்ணெய் தேய்த்துக் குளியுங்கள். இன்ஷூரன்ஸ் கட்ட வேண்டும். நேற்றுப் போல் இன்று யாருக்கும் ரூபாயைத் தூக்கித் தானம் வழங்காமல் வந்து சேருங்கள்.

வாசு: ......ஹூம்! (பெருமூச்செறிந்து விட்டுப் போகிறான்).

## 2

[அன்று பிற்பகல்—வாசு காண்டீனுக்குப் போகும் வழியில்]

விச்சு: ஹலோ.....! என்ன மாமா? கவனிக்காமலே போகிறீர்களே!

வாசு (திரும்பி): அடே! விச்சுவா? என்ன ஆச்சரியம்! உன்னைத்தானப்பா இப்போது நினைத்துக் கொண்டே போனேன்!

விச்சு: நானும் உங்களைத் தேடித்தான் மாமா இங்கே இப்போது வந்தேன்.

வாசு: என்ன விசேஷம்? வீட்டில் எல்லோரும் சௌக்கியம்தானே?

விச்சு: நல்ல சௌக்கியம். மாமா, உங்களால் எனக்கு ஒரு காரியம் ஆகவேணுமே?

வாசு (நகைத்து): என்னாலா?

விச்சு: என்ன மாமா, உங்கள் ஆபீஸிலேயே நண்பர்களிடம் கலகலப்பாகப் பழகுபவர் என்ற பேராம் உங்களுக்கு.

வாசு: விச்சு! என்னிடம் எக்ஸ்ட்ராவாக ஒரு பைசாக் கூடக் கிடையாது. பஸ் சார்ஜ் பத்தொன்பது பைசாவும், இன்ஷூரன்ஸ் நாற்பத்தெட்டு ரூபாயும் கணக்காக மாமி கொடுத்தபடி இருக்கிறது. தேறாட்டம் கணக்கில் வேண்டுமானால்... ஒரு காப்பி சமாளிக்கலாம்.

விச்சு: என்ன மாமா நீங்கள், எப்போதும் விளையாடுகிறீர்கள். காப்பி கிடக்கட்டும். எங்கள் பக்கத்தில் ஒரு புதிய சங்கம் தொடங்கி இருக்கிறோம்.

வாசு: தாராளமாகத் தொடங்குங்கள். நான்தான் முன்பே உனக்கு எச்சரிக்கை விடுத்து விட்டேனே.

விச்சு: அடாடா.... நீங்கள் ஓர் அங்கத்தினராக வேண்டும் என்பது என் கோரிக்கை.

வாசு: நானா?

விச்சு: ஆமாம், மாமா! உலகம் முழுது கிளைகள் உள்ள சங்கம் இது. மணமா ஆண்கள் யாரும் சேரலாம்.

வாசு: ஓகோ!

விச்சு: கணவர்களுக்கே உரிய பிரச்சி களைக் கூடி விவாதிப்பது. குடும்பத்தில் அவ களுடைய சுதந்திரங்களைக் காத்துக் கொ ளும் வழிமுறைகளைப் பற்றி யோசனை செ வது ஆகிய நடவடிக்கைகள் சங்கத்துக்குரியது

வாசு (மலர்ந்து): பரவாயில்லையே!

விச்சு: மாமியை நன்றாகப் புரிந்துகொள் டிருப்பதால்.... நீங்கள் கட்டாயம் இதி சேருவீர்கள் என்று நம்பி வந்தேன். நீங்க பங்கு பெற வேண்டும்.

வாசு: விச்சு, நான் ஜாம் ஜாம் என்று இந்தக் கணவர்கள் சுதந்திர சங்கத்தில் சேர தயார். ஆனால் சந்தாத் தொகையை நீ மாமி யிடம்தான் வசூல் செய்ய வேண்டும்.

விச்சு (நகைத்து): நீங்கள் எப்போதும் தமாஷ்தான் செய்வீர்கள் மாமா. சந்தாவைப் பற்றி நீங்கள் கவலைப்படாதீர்கள்.

வாசு: உனக்குக் கல்யாணமாகு முன்பே இதன் மீது எப்படி இவ்வளவு சிரத்தை விழுந்தது?

விச்சு: ஏன் விழாது, மாமா? எதிர் காலத்தில் உங்களைப் போல் ஆகப் போகிறவன் தானே? மேலும் இந்தக் கிளைக்கு அப்பா தான் தலைவர்.

வாசு: அப்படியா? பலே!

விச்சு: குடும்பத்தில் ஏதோ பூசல், கண்ணீரில்லாமல் அமைதி விரும்புபவனாக இருந்தால் அப்பாவியாக்கி விடுகிறார்கள், மெல்லியர் என்ற பெயரைக் கொண்டு.

வாசு: உண்மை, உண்மை. சபாஷ் விச்சு! ராதாவும் கூட அவனுடைய அம்மாவின் வழியில்தான் தயாராகிறான்.

விச்சு: இது போல் நம்மிடையே ஒரு புதிய விழிப்பு ஏற்பட்டே தீர வேண்டும் என்று தான் மாமா நான் தீவிரமாக இதில் இறங்கி இருக்கிறேன்.

வாசு: சரி,—மேலே பேச வேண்டாம். நீ உறுப்பினர்—பாரம் ஏதாவது இருந்தால் எடு. இப்போதே கண்ணை மூடிக்கொண்டு கையெழுத்துப் போடுகிறேன்.

விச்சு: (கையிலுள்ள தோல் பையைப் பரிசீலனை செய்துவிட்டு) ஓ... அடடா... ஃபாரம் கொண்டு வர மறந்து விட்டேனா? பரவாயில்லை. நீங்கள் இப்போது...

வாசு: அதென்ன, டிக்கெட்டுப் புத்தகம் போலிருக்கிறது?

விச்சு: அதேதான். முதலில் சங்கத்துக்கு நிதி வேண்டாமா? அதற்காக நாங்களே ஒரு நாடகம் போடுகிறோம். பாருங்கள் டிக்கெட்டை.

வாசு: பெரிய வேடிக்கையாக இருக்கிறதே? 'நீங்கள் கணவராக இருந்தால்...'

விச்சு: ஆமாம். நாடக வசனம், டைரக்ஷன் எல்லாமாக ஏகப்பட்ட வேலை. இதெல்லாம் ஐந்து ரூபாய் டிக்கட்டுகள்.

வாசு: உன் மாமியிடம் சாமர்த்தியமாக மூன்று டிக்கட்டைத் தலையில் கட்டேன்.

விச்சு: விடுவேனா? மாமா, இப்போது நான் உங்கள் டிக்கெட்டுக்காக வரவில்லை.

"ப்ரின்ஸ் பிளேடு
சிறகைப்
போன்ற
மென்மை தரும்
பிளேடு"

கரடுமுரடான தாடியுடைய ஒருவர் சொல்வதைக் கேளுங்கள்-ப்ரின்ஸ்' பிளேடினால் க்ஷவரம் செய்து கொள்வது ஒரு சிறகை உபயோகிப்பது போன்றதாகும்! அவ்வளவு மழமழப்பானது...அவ்வளவு சுத்தமானது... அவ்வளவு இதமானது...உங்கள் ரேஸர் மயிர்க்கால்களினூடே சென்று, அந்தப் பரவசமான தூய்மையின் உணர்வை உங்களுக்குத் தருகிறது... ப்ரின்ஸ் பிளேடின் விசேஷ ப்ளூரோ கார்பன் ஓரம் தான் இதற்குக் காரணம்.

மேலும், ப்ரின்ஸ் பிளேடினால் அதிகமான க்ஷவரங்கள் செய்து கொள்ளலாம். இன்று, மேலும் மேலும் அதிகமான மக்கள் ப்ரின்ஸ் பிளேடை உபயோகிக்கின்றனர்...நீங்கள் இதுவரை மாற்றிக்கொள்ளவில்லையானால், உடனே ப்ரின்ஸ் பிளேடு உபயோகிக்க ஆரம்பியுங்கள்.




# ப்ரின்ஸ் பிளேடு



ப்ளூரோ கார்பன் ஓரம் கொண்டது

ஏகபோக விற்பனை ஏஜெண்டுகள்: மூல்லர் & பிப்ஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்

P.C.144

# சிற்றுண்டி வேளை!




ருசிமிக்க மில்க் சாக்கலேட்டில் புதைந்த
பிஸ்கட்டுகள் — சுவையான ஃப்ரைஸ் மில்க்
சாக்கலேட் டிஃபின்ஸ்–உங்கள் சிற்றுண்டிவேளைக்கு
இதைவிட மிகச் சிறந்தது வேறு எதுவுமே இல்லை.

தயாரிப்பாளர்கள்: Cadbury-Fry

ாக: விஷயத்துக்கு வா, சட்டென்று.

ிச்க: உங்கள் ஆபீஸ் நண்பர்களிடம் ன் மனக வைத்தால் இருபது டிக்கட்டு அநாயாசமாக விற்றுவிடலாம். எனக்கு ம் இல்லாததால் உங்கள் உதவியைக் ருகிறேன்.

ாக: ....நானு?

ிச்சி: நானு. நானு என்று மலேக்கா கள். பத்தே டிக்கட்டுகள்தான் இருக் றன. நாற்பத்தெட்டோ, ஐம்பதோ க்கிறதென்றீர்களே? டிரஸ் வகையறாக் க்கு அச்சாரம் கொடுக்கப் பணம் எடுத்து ாமல் வந்து விட்டேன். அதை இப்படிக் ாடுங்கள்.

வாக: அது... உன் மாமி இன்ஷ்யூரன் ்க்குக் கொடுத்ததடா.

விச்க: என்ன மாமா? முதலுக்கே தைரிய லோமல் அஞ்சுவார்களா? இப்போதே ்து டிக்கட் பணம் உங்கள் பாக்கெட்டுக்கு ாப் போகிறது. தாராளமாக இன்ஷ்யூ ்ஸைக் கட்டுங்களேன்?

வாக: சரி... நீ எனக்கு இப்போதே ஒரு தவி செய்ய வேண்டுமே!

விச்க: சொல்லுங்கள் மாமா.

வாக: உன் மாமி, புது மாதிரி என்று னக்கு ஒரு துணி வாங்கிப் பிரபாத் டய்லரிங் ஹவுஸில் ஸ்லாக் தைக்கக் கொடுத் ருக்கிறள்.

விச்க: துணி உங்களுக்குப் பிடிக்கவில் லயா, மாமா?

வாக: பிடிக்கவில்லையாவா? காப்பி டிகாக் ன் வடிகட்டும் ரெட்டிக் பெயின்டிங் ரைத் துடைத்த மாதிரி இருக்கிறது.

விச்க: ஓ, நீங்கள் சொல்வதைப் பார்த் ால் இப்போது வந்திருக்கும் 'ஆல் ஃபூல்ஸ்' வீமா டிஸைன் போலிருக்கிறது. மாமி ருமையாக உங்களுக்குப் புதிய டிஸைன் ாங்கியிருக்கிறளே, மாமா?

வாக: நீ என் வயிற்றெரிச்சலைக் கிளப் ாதே. வர வர இவன் என் சட்டைத் துணி வர பினேடு வரை ஆட்சிக்குள் சேர்த்துக் கொண்டு விட்டான்!

விச்க: தைத்தாயிற்ற?

வாக: பிரபாத் டெய்லரிங் ஹவுஸில் கொடுத்திருக்கிறள். அவனிடம் போய்த் துணியை எலி கடித்துவிட்டது என்று சொல் லித் தொலையடா என்றால், அரிச்சந்திர பரம்பரை என்கிறன்!

விச்க: அது போல் நம் நாடகக் கதாநாய கனுக்கு ஒரு ஸ்லாக் இருந்தால் தேவலே என்று நினைத்தேன் சற்று முன்தான்.

வாக (முகம் ஒளிர): விச்க! உனக்குக் கோடானு கோடி நலன்கள் பெருகட்டும். இந்தச் சட்டையை உன் அளவுக்குத் தைக்கச் சொல்லி என்னை ஆபத்திலிருந்து விடுவி.

விச்க: நிசந்தானு மாமா? மாமா! துணிக் குப் பதில் கொடுத்த டோகன் இருக்கிறதா, உங்களிடம்?

வாக: அதைச் சந்தேகாஸ்பதமான நிலையில் மாமி என்னிடம் கொடுப்பாளா?

விச்க: சரி, பிரமாதமில்லை. நான் விஷ யத்தைப் பைசலாக்கி விடுகிறேன். கவலை வேண்டாம் மாமா!... வருகிறேன்.

(அங்கிருந்து போகிறன்.)



காங்கிரஸ்காரர்கள்: அப்பப்பா! இந்த ராஜாஜி ரொம்பச் சுலபமா ரேஷனே எடுத்துவிட்டுப் போயிட் டார்...அதைத் திருப்பிக் கொண்டு வர என்ன பாடுபட வேண்டி யிருந்ததய்யா.

வாக (சட்டென்று நினைவு வந்தவராக): அட..... போய்விட்டானே! ஜாதகம்...இவ னிடம் சொல்லி யிருக்கலாமே?...

## 3

[நாலைந்து நாட்கள் சென்ற பின் — ஒரு மாலை]

விச்க: நமஸ்காரம் மாமி, எங்கோ கிளம்புகிறாற் போலிருக்கிறது.

விசாலம்: தையற்கடைக்குத் தான். உன் லேக் கண்ணிலேயே காணுமே?

விச்க: வருங்கால மாமனர் வீட்டுக்கு அடிக்கடி விஜயம் செய்தால் எப்படி மாமி? பின்னுல் மாப்பிள்ளைக் கௌரவத்தைக் காப் பாற்றிக் கொள்ள முடியுமா?

விசாலம்: ம்... நீ ஏதோ சாதுரிய மாகப் பேசுகிறாய். உங்க அம்மா ஜாதகத் தைக் கண்ணில் காட்ட மாட்டேன்கிறள்.

விச்க: ஜாதகத்துக்கு என்ன மாமி பிர மாதம்?

விசாலம்: உன் மாமாதான் இருக்கிறரே, ஒரு துணி வீட்டுக் கவலை, பொறுப்பு வேணுமே? அவர் போய்க் கேட்டால் கொடுப் பாளாக இருக்கும். நான் மூன்று நாள் கேட்டும் உன் அம்மா பிடி கொடுக்கவில்லை.

விச்க: நீங்கள் கவலைப்படாதீர்கள் மாமி, ராதா எங்கே காணும்?

விசாலம்: காலேஜிலிருந்து வரவில்லை. ஏன் விச்க? ராதாவுக்கு மூல நட்சத்திரம் என்று அம்மா சொன்னுளா?

விச்க: இதெல்லாம் வெறும் குருட்டு நம்பிக்கை மாமி, விட்டுத் தள்ளுங்கள்.

விசாலம்: ...என்னமோ, நீ நல்ல பிள்ளை யாக இருக்கிறாய். அவளுக்கும் அத்தான் என்றால்தான் கனா வருகிறது. அன்று பார், சட்டைத் துணி வாங்கினேன். 'அத்தான் கூட இதுபோல் போட்டிருந்தாரே' என்று குறிப்பாகச் சொல்கிறள்!

விச்க: நீங்கள் மாமாவுக்கு வாங்கினீர் களாக்கும்?

விசாலம்: ஆமாம், கடைக்காரன் புது மாதிரி என்று சொல்லி ஒன்று வாங்கினேன். அவருக்குத்தான் நான் வாங்கினால் பிடிக் காதே? ...உன் ஜாதகத்தைக் கொஞ்சம் வாங்கி வாயேன், விச்க?

விச்சு: என்ன பிரமாதம் மாமி? நாளையே கிளம்பி வருகிறேன். எங்கள் அமெச்சூர் நாடக சங்கம் முதல் நாடகம் அரங்கேற்றுகிறது. நீங்கள் மூன்று டிக்கெட்டுகள் வாங்கிப் பிள்ளையார் சுழி போட வேண்டுமே?

விசாலம்: அட, நிசம்தானா? ராதா பேப்பரில் பார்த்துச் சொன்னாள். என்ன நாடகம்?

விச்சு: ஒரே நகைச்சுவை. நானும் வேஷம் போடுகிறேன், மாமி! ராதாவுடன் கண்டிப்பாக வர வேண்டும்.. டிக்கெட்டைக் கிழித்து விட்டேன். உங்கள் கையால் முதலில் பணம் தந்து விடுகிறீர்களா மாமி?

விசாலம்: பணத்துக்கென்ன, தருகிறேன். நான் கேட்டது....

விச்சு: என்னை நம்புங்கள் மாமி!

விசாலம்: உன் அம்மா வேண்டாமென்று சொல்லி விடுவாளோ என்று எனக்குப் பயமாக இருக்கிறது.

விச்சு: நீங்களே பயந்தால் எப்படி? நிச்சயம் நானே ஜாதகம் கொண்டு தருகிறேன். இப்போது மௌண்ட்ரோடு போகிறேன். நாளை மறுநாள் திரும்பி வருகிறேன்.

விசாலம்: நீ மறக்காமலிருக்க...ஒரு வேலை தரட்டுமா? பிரபாத் டெய்லரிங் ஹவுஸ் தெரியுமா, மௌண்ட் ரோடில்?

விச்சு: அட? அங்கேதான் நான் இப்போது போகிறேன். துணி தைக்கக் கொடுத்திருக்கிறேன்.

விசாலம்: மாமாவின் ஸ்லாக் அங்கேதான் தைக்கக் கொடுத்திருக்கிறேன். டோகனும், கூலியும் தருகிறேன். நீ நாளை அதை வாங்கிக்கொண்டு கையோடு...

விச்சு: ஜாதகமும் கொண்டு வருகிறேன்!

4

[ஒரு வாரம் சென்ற பின் ஒரு நாள்.]

ராதா: அம்மா! அப்பாவின் சட்டைப் பையில் பத்து டிக்கட் புத்தகம் இருக்கிறது!

விசாலம் (திடுக்கிட்டு): டிக்கெட்டா?

ராதா: ஆமாம்மா! அமெச்சூர் நாடக சங்கத்தின் 'நீங்கள் கணவராக இருந்தால்' டிக்கெட்தான்!

விசாலம்: அப்பா சட்டைப்பையை நீ ஏன் குடைந்தாய்?

வாசு: 'டிரெயினிங்' போதும்!

விசாலம்: என்னிடம் மூன்று டிக்கெட்டை விற்றுவிட்டுப் போயிருக்கிறான், நீங்கள் இப்படிப் பத்து டிக்கெட்டை வாங்குவீர்களா?

வாசு: நான் ஒன்றும் வாங்கவில்லை!

விசாலம்: ஆமாம், இன்ஷ்யூரன்ஸ் கட்டிய ரசீதே வரவில்லையே?

வாசு: விசாலம்! கொஞ்சம் பேசாமலிரு!

விசாலம்: ஆமாம். என்னிடம் எரிந்து விழுவதுதான் மிச்சம்! அப்பப்பா! அப்பா, அம்மா, பிள்ளை எல்லோருமே ஜகஜ்ஜாலப் புரட்டு. என்னிடம் சர்க்கரையாகப் பேசி விட்டுச் சட்டை தைத்து வாங்கி வர டோகனையும் பணத்தையும் வாங்கிப் போனான். ஒரு வாரமாகிறது. ஆளைக் காணோம்!

கவா (உள்ளூறக் கெக்கலித்தபடி): சரி! சரி! நீயும் ஏமாந்தாய்.

விசாலம் (ரோசமாக): நான் ஒன்றும் உங்களைப் போல் ஏமாற மாட்டேன். மூன்று பேரும் நாடகம் பார்ப்போம். இன்ஷூரன்ஸ் பணத்தைச் கனிபோல் தூக்கி கொடுத்துப் பத்து டிக்கட்டை வாங்கியிருக்கிறீர்களே, அநியாயமில்லையா?

வாசு: ஒருவரும் ஓடிவிட வில்லை.

விசாலம்: ஆமாம்! மாச நடுவில் எவன் பணம் கொடுத்து டிக்கட் வாங்குவானென்று கொஞ்சம் யோசிக்க வேண்டும்!

வாசு: நான் இன்று சாயங்காலமே போய் ஜாதகத்தை வாங்கி வராதபோனால் பார்

விசாலம்: இதில் குறைச்சல் இல்லை. சரி சண்டை வேண்டாம். இந்த ஷர்ட்டைப் போட்டுப் பாருங்கள்!

வாசு (அதே பழைய துணி சட்டையா யிருப்பது கண்டு திகைத்து): இது... தைத்து வந்து விட்டதா? விச்சுவிடம் டோக்கன் கொடுத்தேன் என்றாயே, விசாலம்?

விசாலம்: நீங்கள்தான் அன்று மூக்கைத் தொங்கப் போட்டீர்களே என்று வேறு துணி பிளெயினாக, இதை விட உயர்வாக வாங்கித் தைக்கக் கொடுத்தேன். இதை அங்கு கொடுக்கவேயில்லை!

வாசு: பின்னே... நீ கையில் தைத்து வைத்திருக்கிறாயே, விசாலம்?

விசாலம்: விச்சு அன்று, இதுதான் லேட்டஸ்ட் பாஷன், மாமாவுக்கு ஜோராக இருக்கும்; அப்பாவே இந்தத் துணியில் அரை டஜன் ஷர்ட் தைக்கக் கேட்கிறார் என்றான்!

வாசு: கொடுத்துத் தொலைப்பதுதானே?

விசாலம்: ஆகா! இங்கே கொட்டிக் கிடக்கிறது! நல்ல வேளையாக, எங்கள் தையல் கிளாஸில் / மறு நாளே ஸ்லாக் கிளாஸ் ஆரம்பித்து விட்டார்கள். முதல் கட்டிங்கே மிக நன்றாக விழுந்திருக்கிறது. போட்டுப் பாருங்கள்!

வாசு: ஐயோ விசாலம்? நீயே தைத்தாயா?

விசாலம்: ஏன்? நான் தைத்தால் ஆகாதா?

ராதா (வந்து): அம்மா, இதோ தபால்காரன் ஒரு கார்டு போட்டு விட்டுப் போயிருக்கிறான்!.... அத்தான் போலிருக்கிறது.

விசாலம்: எங்கே? (படிக்கிறாள்) அன்புள்ள மாமா மாமிக்கு,

அநேக கோடி நமஸ்காரங்கள். மன்னிக்கவும். பிரபாத் டெய்லரிங் ஹவுஸில் மாற்றி. மாமாவின் சட்டையை என் சட்டைகளின் அளவில் தைத்து விட்டான். என்னிடம் மிகவும் மன்னிப்புக் கேட்டுக் கொண்டான். என் அளவு கச்சிதம். மிக்க நன்றி.

சொன்னபடி வர முடியவில்லை. நாடக ஒத்திகைகளிலும் நேரமில்லை. என் சரியான ஜாதகம் இன்னமும் கணிக்கவில்லையாம். நாடகத்தன்று ராதாவுடன் உங்களைக் கட்டாயம் எதிர்பார்க்கிறேன். விச்சு

ராதா: அம்மா....! அப்பா மயக்கமாய் விழப் போகிறார் போல இருக்கம்மா!

விசா: ஆமாமாம். மாப்பிள்ளையாக வருவதற்கு முன்பே இப்படிக் கறக்க ஆரம்பித்து விட்டான்! நல்ல உயர்ந்த துணி!

ராதா: நீதானேம்மா கொடுத்தாய்?

விசா: சரி, சரி, உன் அத்தானைச் சொன்னால் அதற்குள் ரோசம் பொத்துக் கொள்ள வேண்டாம். போய்த் தட்டைப் போடு! (வாசுவிடம்) எழுந்திருங்கள், சொல்கிறேன்! இப்போது ஒன்றும் மயக்கம் 'மாயம் என்று என்னைப் பயமுறுத்த வேண்டாம்!







பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்

[WTP 177]

---

# ஸில்வர் எக்ஸைட்

ஒவ்வொரு முறையும் உடனடியாக

என்ஜினைத் துவக்க




உங்கள் உள்ளூர் ஏஜண்டு:

தி
ஜெனரல்
எலக்டிரிக் கோ. ஆப்
இந்தியா பிரைவேட் லிமிடெட், சென்னை

கிளைகள்: பெங்களூர், கோயமுத்தூர், சிகந்தராபாத்

E 85C-65 TM

## 3. மண்டியிட்ட மாடப் புறு

இரு கரையும் தொட்டுக் கொண்டு
ம் காட்டாற்று வெள்ளத்தின்
ரோஷிமையப் போலக் கலகலவென்று
ந்தார் ராமராயர். அறுபதைத்
ண்டிவிட்ட கிழவரின் சிரிப்பாக
லை அது. வாழ்க்கையை அனுபவிப்
லும் வல்லமையிலும் வாலிபராக
ங்கும் மகா மண்டலேசுவரரின்
ப்பில் மட்டும் கிழத்தன்மை புகுந்து
மா என்ன? அர வீட்டு ஆண்மக
ன் அட்டகாசமான சிரிப்
ாலியோடு வெள்ளி
லியோசையைப் போன்ற
தஹாஸமான சிரிப்
ாலியும் கலந்து வந்தது.
பகைவர்களின் மனம்
கயுமளவுக்கு விஜய
ரத்தின் பெருமையை
ன்னத நிலைக்கு உயர்த்தி
ப்பற்ற முறையில் ஆட்சி
செலுத்தி வரும் அர வீட்டு
மராயரின் அன்புக்குப்
ாத்திரமான ஆசை மனைவி
த்தியபாமாதான் தனது
வரான மகாமண்ட
லசுவரருக்குத் தாம்பூ
த்தை மடித்துக் கொடுத்
க் கொண்டே அப்படிக்
ண்கிணி நாதம் எழுப்பிக்
லுகிறுத்தாள்.
கோவா, ஹொனவார்,
த்கல் ஆகிய துறைகளிலிருந்து
ாம்ராஜ்யத்தின் குதிரைப்
டைக்காகக் கொண்டுவரப்பட்டுள்ள அக
வங்களைப் பார்வையிடவே தர்மபத்தினியுடன்
ருகை தந்திருந்தார் ராமராயர். இன்றைய
ஜயநகரத்தின் வீரார்ந்த வாழ்வு குதிரைப்
டைகளின் மேன்மையில்தான் இருந்தது.
மனி மினுமினுப்பிலும், கட்டமைந்த வாலிப்
ான உடலின் தளதளப்பிலும் தன்னிகரற்ற
ராபிய, பாரசீகக் குதிரைகள் பரந்து
டந்த மைதானத்தில் பல்லாயிரக் கணக்
ாகத் தரம் பிரித்து நிறுத்தப்பட்டிருந்தன.
ால் வெள்ளை நிறத்திலே, செஞ்சாந்து
வண்ணத்திலே, கருண்ட மேகத்தின் கருமை
நிறத்திலே, சாம்பல் வண்ணத்திலே, என்று
இப்படிக் குதிரைகளை அவற்றின் நிறத்துக்கு
ஏற்றபடியும் பாகுபாடு செய்திருந்தார்கள்.
வெண்மையுடனியே வண்ணப் பொட்டுக்
களையுடைய இரு வர்ணக் குதிரைகளும் அந்
தக் கூட்டத்திலே இடம் பெற்றிருந்தன.
வேகத்திலே வேங்கையை யொத்த அவை
உருவத்திலும் அவைகளை நினைவுறுத்துவது
போலிருந்தன. அசுவ சாஸ்திரத்திலே வல்லவ
ரான அர வீட்டு ராயர் குதிரைகளின் லட்
சணங்களுக்கு ஏற்ப அவைகளின் சேவையை
நிர்ணயிக்கவே அன்று அங்கு வந்திருந்தார்.



# பாமினிப் பாவை

கௌசிகன்

அதற்காக நிர்மாணிக்கப்பட்ட அலங்கார
மான கூடாரத்தில் அசைந்தாடும் ஊஞ்சலிலே
அமைக்கப்பட்ட ஆசனத்திலே தம் இளமனைவி
சத்தியபாமாவையும் அருகே இருத்திக்
கொண்டு அமர்ந்திருந்தார் ராமராயர். சிற்பி
களின் சித்தனையிலே உருவாகும் சிங்காரிகளைப்
போன்ற ஆரணங்குகள் அருகிருந்து சாமரம்
வீசிக் கொண்டிருந்தார்கள். இளமை சிந்தும்
இருமகளிர் ஒரே சீராக அந்த ஊஞ்சல்
ஆசனத்தை ஆட்டிக்கொண்டிருந்தார்கள்.
கண்டகார நாயகர்கள் கைகட்டி ஊசலாடும்
ஆசனத்தின் ஒரு புறத்தில் சற்று ஒதுங்கி
நின்று கொண்டிருந்தார்கள். மற்றும் சில
அதிகாரிகள் ஆணையை எதிர்பார்த்து ஆங்
காங்கு நின்று கொண்டிருந்தார்கள்.

அளியா ராமராயர் தாம் வந்த காரி
யத்தை முடித்த பின் தம் இளம் மனைவியின்
கையிலுள்ள தாம்பூலம் வாங்கித் தரித்து
இளைப்பாறிக் கொண்டிருந்தார். பாரதத்
துக்கு வெளியிலுள்ள முஸ்லிம் அரசுகளான
பாரசீகம், அரேபியா ஆகிய ராஜ்யங்களி
லிருந்து வரும் குதிரைகளைப் பாரதத்திலுள்ள
முஸ்லிம் அரசுகளான பாமினி ராஜ்யங்
களுக்குப் போகாமல் அத்தனையையும்
விலை பேசி வாங்கிவிடும் விஜய நகரத்தின்
திறமையையும், பெருமையையும் பற்றிக்

தம் அருமை மனைவிக்கு விளக்கிக் கொண்டிருந்தபோது. ஆதிநாளில் நடந்த சம்பவங்கள் சிலவற்றைச் சொல்ல நேர்ந்தது. அதைக் கேட்டு அடக்க முடியாத சிரிப்பை அவிழ்த்து விட்டாள் அழகி சத்திய பாமா. அவள் ஆனந்தத்திலே அரவீட்டாரும் கலந்து கொண்டார்.

உயர்ந்த ஜாதிப் போர்க் குதிரைகள் இந்திய மண்ணில் பல்கிப் பெருகுவதில்லை. முஸ்லிம்களின் ஆதிக்கம் பாரதத்தில் பரவி வரும்போது அவர்களின் வெற்றிக்குக் குதிரைப் படைகளின் திறமைதான் காரணம் என்பதைப் புரிந்து கொண்டார்கள் இந்திய மன்னர்கள். ஆனால் பாரசீகம், அரேபியா ஆகிய நாடுகளிலிருந்து குதிரைகளைக் கப்பல்களில் கொண்டு வந்த வியாபாரிகள் தங்கள் இனத்தவர்களான முஸ்லிம் மன்னர்களுக்கே அவைகளை விற்று வந்தனர். விஜயநகர வேந்தர்களான ராயர்களால் நல்ல குதிரைகளை அடைய முடியாத வேதனையைத் தாள முடியவில்லை. இரண்டாம் விருபாட்சர் இன வேற்றுமை பாராட்டும் இந்த அராபிய வியாபாரிகளிடம் ஆத்திரம் கொண்டு. கோவா துறைமுகத்தில் உள்ள அவர்கள் அத்தனை பேரையும் கொன்று குவிக்கும்படி செய்தார். இந்தக் கொடுமையினால் நிலைமை சீர்திருந்திவிடவில்லை. அதற்குப் பதில் விஜய நகரத்துக் துறைமுகங்கள் ஒன்றிரண்டில் குதிரைகளோடு வந்திறங்கிய ஒருசில கப்பல்களும் ஓடி ஒளிந்தன. இப்படியாக அயல் நாட்டு அற்புதக் குதிரைகள் இன்றியே விஜயநகரம் வளர வேண்டியதாயிற்று. விருபாட்சருக்குப் பிறகு பட்டத்துக்கு வந்த சாளுவ நரசிம்மர் அந்நிய வியாபாரிகளை மிரட்டித் தன்னிறைவு பெற முடியாது என்பதை உணர்ந்து பீதியடைந்திருந்த அராபிய வியாபாரிகளுக்கு அபயமளித்து ஆசை வார்த்தைகள் கூறி அளவுக்கு மீறிய சலுகைகளும் வழங்கி, அசுவங்களை விஜய நகரத்துக்கே விற்கும்படியான ஏற்பாட்டைச் செய்து முடித்தார். அராபிய வியாபாரிகள் தங்கள் கப்பல்களில் ஏற்றும் குதிரைகள் அத்தனையையும் கொழுத்த லாபத்துடன் கொள்முதல் செய்ய முடியும் என்று அறிந்தபோது ஏன் ஓடிவர மாட்டார்கள்? கேட்ட விலையை மறுக்காமல் கொடுப்பதாக மட்டும் ஒப்புக் கொள்ளவில்லை ராயர். கப்பல் பிரயாணத்தில் இறந்துபோகும் குதிரைகளுக்கும் கூடப் பொருள் கொடுத்தார் நரசிம்மர். இறந்த குதிரையின் அடையாளமாக அதன் வாலை வெட்டி எடுத்துவ காட்ட வேண்டும்! அது உயிரோடு இரு மானும் என்ன விலை பெறுமோ அ கொடுத்தார் விஜயநகரத்து வேந்தர். ரைப் படையைப் பெருக்க இப்படி லாம் பாடுபட்ட கதையை விளக்கியபோ தான் சத்தியபாமாவுக்குத் தாங்க முடிய சிரிப்பு வந்தது.

''அராபிய வியாபாரிகள் விஜயநகரத் டம் வாலைக் காட்டியே நல்ல விலை பெ முடியும் என்று தெரிந்ததும் குதிரைக விடக் குதிரை வால்களையே அதிகமா கப்பலில் ஏற்றிக் கொண்டு வந்திருப்பார்க அப்படித்தானே?'' என்றாள் குறும்பா பேசும் குணமுடைய குட்டி ராணி சத்தி பாமா. அதைக் கேட்டு அரவீட்ட அப்படிச் சிரித்தார். அவரது கம்பீரமா சிரிப்புடன் அவளது சிங்காரச் சிரிப் கலந்து ஒலித்தது.

''எவ்விதப் போட்டியுமின்றி அரா யர்கள் ஏகபோகமாக நடத்தி வந்த இ வியாபாரம் அதிக நாள் நீடிக்கவில்லை. போ சுகீசியர்கள் வந்து புகுந்ததும் பேராசை பிடித்த அராபிய வியாபாரிகளை அடித் விரட்டினார்கள். இப்போது இந்தியத் துறை களில் வந்து இறங்கும் அந்நியக் குதிரைக அத்தனையையும் நமது சாம்ராஜ்யத்து அனுப்பிக் கொண்டிருக்கிறார்கள் போர்த்து கீசியர். அப்படி ஓர் ஏற்பாட்டைச் செய்த மாமன்னர் கிருஷ்ண தேவராயர்'' என்றார் ராமராயர். தமது மாமனாரின் மகோன்னதமான அந்த நாட்களின் நினைவிலோ என்னவோ அவரது நெஞ்சு நிமிர்ந்தது. இமையாத பார்வை நெடுந் தூரத்துக்கு நெடுந்தூரம் நிறைந்து கிடந்த குதிரைகளின் கூட்டத்திலே நிலைத்து நின்றது.

''இப்போது நாங்கள் குதிரைகளின் வால்களுக்கு விலை கொடுத்து வாங்குவ





இல்லை; குதிரையையே வாங்குகிறோம் என்றிருக்கலாக்கும்!'' என்றாள் சத்தியபாமா மோகனமாகச் சிரித்துக் கொண்டே.

மனைவி மடித்துக் கொடுத்த மணம் மிகுந்த தாம்பூலத்தோடு அவளது குறும்பையும் மென்று கொண்டே மந்தஹாசமாக மனம் விட்டுச் சிரித்தார் ராமராயர். அப்போது தூதுவன் ஒருவன் வந்து வாய் புதைத்து நின்றான். மகிழ்ச்சியால் மனம் நிறைந்திருந்த ராயர் வாய் நிறைந்துவிட்ட தாம்பூலச் சாற்றை உமிழ நினைத்துத் திரும்பினார். ஒரு மங்கை தங்கப் பாத்திரத்துடன் ஓடி வந்து நின்றாள். சிவந்த வாய் திறந்து வந்தவனை விசாரிக்க அவன், ''அகமது நகரிலிருந்து இம்மாஜி பீமாஜி தங்களைக் காண வந்திருக்கிறார்கள்'' என்றான்.

''வரச் சொல்லேன்...!'' என்று கூறி வசதியாகத் திண்டிலே சாய்ந்து உட்கார்ந்து கொண்டார் ராமராயர். விஜயநகரின் ராஜப் பிரதிநிதியாகவும் அதே சமயத்தில் பிரதம வேவுகாரராகவும் அகமது நகரில் வேலை பார்த்து வந்தவர் இம்மாஜி பீமாஜி. நடுத்தர வயதுடைய அவர் வந்து வணங்கி நின்றார்.

''என்ன இம்மாஜி, திருமணக் கோலாகலங்களெல்லாம் முடிந்தனவா? திருமலா இப்போது எங்கிருக்கிறார்?''

''மணவினை முடிந்து மாப்பிள்ளையுடன் தம்நகருக்கு வந்திருக்கிறார்.''

இம்மாஜியின் பேச்சில் தயக்கத்தை உணர்ந்த ராயர் அதன் காரணத்தைப் புரிந்து கொண்டவராக, "இம்மாஜி, சத்தியபாமா இருப்பதற்காகத் தயங்க வேண்டாம். அவளுக்குத் தெரியாத அரசியல் ரகசியங்கள் ஏதுமில்லை. நீ வந்த காரியத்தை மனம் விட்டுச் சொல்லலாம்" என்று தம் மனைவியைப் பார்த்துப் புன்னகை செய்தார். அவள் முகம் சிவந்தது. இம்மாஜியின் முகம் மலர்ந்தது.

"இந்தத் திருமணங்களின் உள் நோக்கமே...."

"எல்லாம் கேள்விப்பட்டேன். விஜயநகரத்தை அழிப்பதற்காக முஸ்லிம் அரசுகளிடையே எப்பாடு பட்டாவது ஒற்றுமையை வளர்ப்பதற்கான முயற்சியிலே முழு மூச்சுடன் முனைந்திருக்கிறாராமே குதப்ஷா?"

"ஆமாம்... அவருடைய திட்டங்களின் படியேதான் எல்லாமே செயலாக்கப்படுகின்றன...."

"வைத்தியக்காரன்...." ராமராயர் சிரித்தார். "தோல்வியின் அடியிலே தோன்றிய ஞானோதயம்! விபரீதமான முடிவுக்கு வந்து விட்டான் இப்ராஹிம். போகட்டும். எப்படியோ என் மகன் ஆதில்ஷாவுக்கு அழகும் அறிவும் நிரம்பிய சாந்த் பீபி மனைவியாக வாய்த்தாள். அதிர்ஷ்டக்காரன்தான் ஆதில்ஷா. சாந்த் பீபியை நான் சிறு குழந்தையிலேயே பார்த்திருக்கிறேன்."

"நிஜாம்ஷாவும் குதப்ஷாவும் ஆதில்ஷாவைத் தங்கள் அரசியல் சூதாட்டத்தில் பகடைக் காயாகப் பயன்படுத்திக்கொள்கிறார்கள். சூழ்ச்சிக்காரர்களின் கைப்பொம்மையாகி வருகிறார் ஆதில்ஷா என்பதுதான் கவலைக்கிடமாக இருக்கிறது."

"இதில் நாம் கவலைப்படுவதற்கு ஒன்றுமில்லை. ஆதில்ஷாவும் அப்படியெல்லாம் மாறக் கூடியவன் இல்லை என்றே எண்ணுகிறேன். ஏதோ கட்டாயத்தின் நெருக்கடியில், கல்யாணத்தின் போதையிலே கட்டுண்டிருக்கிறார் அவ்வளவுதான்."

"பாண்டி நாட்டு நல் முத்துப் பேழைகளையும் நவரத்தினங்களாலான ஆபரணங்களையும் ஆதில்ஷாவின் திருமணப் பரிசாகத் தாங்கள் அனுப்பினீர்களே. அதை எத்தனை அலட்சியப் படுத்திவிட்டார்கள் தெரியுமா? அரசாங்கத்தின் கீழ்த்தர ஊழியர்களுக்கு அவற்றை வெகுமதியாக வாரி வழங்கிவிட்டார்கள்."

ராமராயர் சிந்தனையிலாழ்ந்தார். வீணாக வன்மத்தை வளர்ப்பானேன் என்று எண்ணினாரோ என்னவோ? "அவர்களின் உடைமையாகிவிட்ட பின் அந்தப் பொருள்களின் போக்கிடம் எதுவானாலும் நமக்கென்ன?" என்று சமாளித்தார்.

"ஆதில்ஷாவே தம் கைகளால் அப்படி வாரி வழங்கியிருந்தாரானாலும் நாம் வருத்தப்படுவதற்கில்லை. விஜயநகரத்திலிருந்து வந்த வரிசைகள் என்று அறிந்தே அவைகளை அப்படிக் குதப்ஷாவும், நிஜாம்ஷாவும் மதிக்காமல் நடந்து கொண்டார்கள். ஆதில்ஷாவோ அவர்களின் செய்கைகளைத் தடுக்காதது மட்டுமல்ல. செயலற்றவராகவும் வீற்றிருந்தார்." பீமாஜியின் மனம் எப்படிப் புண்பட்டிருக்கிறது என்பதை அவரது குரலே எடுத்துக் கூறியது.

ஆழ்ந்த சிந்தனையிலிருந்த அரவீட்டு மூத்தவர் "யோசிக்க வேண்டிய விஷயம்தான்" என்றார் எங்கோ பார்த்துக்கொண்டு.

"விஜயநகரத்து இந்துப் படைகள் இஸ்லாத்தை இழிவுபடுத்திவிட்டதாகவும் முஸ்லிம் மக்களின் மத உணர்ச்சிகளுக்கு மதிப்பு அளிக்காமல் மனம் போனபடி இந்து மன்னர்கள் நடந்து கொண்டதாகவும் தீவிரமான பிரசாரம் நடைபெறுகிறது. மக்கள் மனம் பே, விக்குமளவுக்கு அது சக்தி வாய்ந்ததாகவும் இருக்கிறது."

"ஆதில்ஷாவின் அவையிலே குதப்ஷா ஆடிய நாடகத்தைப் பற்றி எனக்கு உடனே தகவல்கள் வந்து விட்டன. விஜயநகரத்தில் என் இனத்தவர்களின் அதிருப்தியையும் மதிக்காமல் நான் முஸ்லிம்களுக்கு இந்த விஜயநகரத்தில் அளித்துள்ள சலுகைகளையும், சந்தோஷ வாழ்வையும் அறிந்த யாரும் குதப்ஷாவின் கூற்றை ஒப்புக்கொள்ள மாட்டார்கள். ஆறுதும் இல்லாமல் வராது, அள்ளாமல் குறையாது என்பார்களே... அது போல..."

"அப்படியானாலும்...?" என்று ஆதுரத்துடன் அகல விழித்தாள் சத்தியபாமா.

"அகமது நகர் சுல்தான் என்னை அவமானப்படுத்தியதை நான் மன்னித்தாலும் வெங்கடாத்திரியால் மறந்திருக்க முடியாது. உணர்ச்சிகளுக்கு இருப்பிடமான அவன் முற்றுகையின்போது பழிவாங்கும் எண்ணத்துடன் ஏதாவது முறை தவறி நடந்திருக்கலாமோ என்று சந்தேகிக்கிறேன்" என்றவர் உடனே அந்த நினைப்பை உதறிவிட்டு "அப்படியே இருந்தாலும் கூட ஒன்றை ஒன்பதாக்கிக் கூறும் இந்த இன வெறியர்களுக்காக என் தம்பியை விட்டுக் கொடுத்து விடமாட்டேன் சத்தியபாமா. அவன் தவறு என் தவறு. அதற்காக எது வந்தாலும் அதைச் சமாளிக்கும் திறமை இந்த ராமராயருக்கு உண்டு. இந்தப் பாமினி சுல்தான்களைப் போல் பத்துப்பேர் கூடிவந்து எதிர்த்தாலும் விரட்டியடிக்கும் வீரம் இந்த விஜயநகரத்துக்கும் உண்டு. 'ஜிஹாத்' (இஸ்லாமியத் தெய்வீகத் திருப்போர்) என்று கூறிக்கொண்டு ஒரு காலத்தில் கொள்ளையும் கொலையும் நடத்திக் குதூகலித்தார்களே, அந்தப் பழைய நாளின் கோழைத்தனமான திட்டத்தை நினைத்து இப்போது ஆசையாக அசை போட்டுக் கொண்டிருக்கிறார்கள் போலிருக்கிறது. திவானிப் போரிலே இந்த ஐந்து அரசர்களையும் அழவைத்து அடித்துத் துரத்தினாரே, கிருஷ்ணதேவராயர், அதை மறந்து விட்டார்கள் போலும்!"

ரதம் தயாராக நின்று கொண்டிருந்தது. தம் இருக்கையிலிருந்து எழுந்து நடந்தவர் இம்மாஜியின் அருகில் வந்ததும் நிதானித்து. "பாமினி சுல்தான்கள் ஒன்று சேர்ந்து திட்டங்கள் தீட்டட்டும் இம்மாஜி! விஜயநகர சாம்ராஜ்யத்தைத் தரை மட்டமாக்கிவிடலாம் என்று பகல் கனவு கண்டு கொண்டிருக்கட்டும். திவானிப் போரைத் திரும்பவும்

## கழுத்து சுளுக்கு உங்கள் மாலை அலுவல்களை பாதிக்க விடாதீர்கள்.

சங்கடமான நிலைதான். ஆனால் நீங்கள் கவலைப்படாமல், திட்டப்படி வெளியே செல்லலாம் — கைவசம் மட்டும் ஒரு டியூப் அனேலியம் வலி நிவாரணி இருந்தால் போதும்.

அனேலியம் விரைவாகப் பலனளிக்கும் வலி நிவாரணி. உங்களைப் போன்ற மென்மையான, அழகாய் பாதுகாக்கப்படும் சருமங்களுக்கு ஏற்றபடி தயாரானது. அதிலுள்ள சக்திவாய்ந்த மருந்துகள், தசைவலி, தலைவலி, மார்புச்சளி மற்றும் ஜலதோஷத்திலிருந்து விரைவில் நிவாரணமளிக்கின்றன. குழந்தைக்குக் கூட ஒரு கவலையுமின்றி அதை உபயோகிக்கலாம்.







சிக்கனமான, கச்சிதமான 'டின்'னிலும் கிடைக்கிறது

# அனேலியம்

**விரைவாகப் பயனளிக்கும் இதமான வலி நிவாரணி**

---

அமிர்தாஞ்சன் லிமிடெட், மதராஸ்—பம்பாய்—கல்கத்தா—டெல்லி

JWT-AM-AN-2058 A

நாளொரு மேனியாக...,

# எழிலோங்கச் செய்வது

# ரெக்ஸோனு








கொஞ்சி உறவாடி நாளொரு மேனியாக உமது
எழிலுக்குப் பொலிவை ஊட்டி வளர்ப்பது ரெக்ஸோனு.
இதில் வியப்பென்ன? சரும எழிலுக்கான தைலங்களின்
கலவையான 'கேடில்' இருக்கிறது ரெக்ஸோனுவிலே.
தவிரவும், கமகமவென்று மணம் கமழ்வதால்,
மனமோங்கி மலரும் உங்கள் பொலிவு.

**கேடில் அடங்கிய ரெக்ஸோனு உங்கள் சருமத்திற்கு உகந்தது.**

இந்துஸ்தான் லீவர் தயாரிப்

RX. 24-140 TM

யர்களுக்கு நினைவுபடுத் தோம். வெல்ல முடி யாதபடி வளர்ந்து விட்ட ம் வலிமை கண்டு ஏற் பட்ட வயிற்றெரிச்சலின் விளைவுதான் இந்த மூன் ம் அரசுகளின் கூட் டணிக் கொண்டாட்டம். து ஒரு நாளும் உருப் டப் போவதில்லை'' ன்று சொல்லிக் காண்டே ரதத்தில் ஏறி வர் குதிரையின் லகா னக் கையில் எடுத்துக் கொண்டார். சத்திய ாமாவும் ரதத்தில் ஏறி வர் அருகில் ஒட்டுறைப் போல் ஒய்யாரமாக நின்று கொண்டாள். ''இம்மாதி. ங்கள் எச்சரிக்கையாக ல்லாத் தகவல்களையும் டனுக்குடன் அனுப்பிக் கொண்டிருங்கள். உங்கள் த்துழைப்பில்தான் சாம் ராஜ்யத்தின் உயர்வு இருக்கிறது'' என்றார். ராமராயரின் குரல் தேர்ச் சக்கரங்களும் குதிரைக் குளம்புகளும் எழுப்பிய ஓசையில் ஒன்றிக் கலந்தது.



''எங்கப்பாதான் ஸ்கூட்டர் வாங்கிக் கொடுத்திட்டாராமே! இன்னும் எதற்கு அவரைப் பணம் கேட்கச் சொல்கிறீர்கள்?''

''பெட்ரோல் செலவுக்கு?''

வேங்கடாத்திரி குதிரையில் விரைந்து கொண்டிருந்தான். அந்தக் குதிரையின் வேகத்தையும் முந்திக் கொண்டு முன்னால் சென்றது அவன் மனம். கோல்கொண்டா, அகமதுநகர் இவைகளின் முற்றுகையிலிருந்து தலைநகர் திரும்பியவனைத் தங்க விடவில்லை ராமராயர். கோவாத் துறைமுகத்தில் வந்து இறங்கியுள்ள குதிரைகளைக் கொண்டு வந்து சேர்க்கும் பொறுப்பை அவனிடம் ஒப்படைத்து, உடனே கிளம்பும்படி ஆணையிட்டு விட்டார் அண்ணா. ஆயிஷாவின் நினைவாகவே போர்க் களத்திலிருந்து திரும்பியவன் அவளைச் சந்திக்க முடியாமலே குதிரை வியாபாரிகளைத் தேடிப் போகும்படியாயிற்று.

குதிரைகளோடு வந்தவன், குதிபோடும் தன் உள்ளத் தவிப்பை ஆயிஷாவைச் சந்திப்பதனால்தான் தணிக்க முடியும் என்ற முடிவோடு அவளைத் தேடிப் போய்க் கொண்டிருந்தான். தேவி திருமலாம்பாளின் அரண்மனை அந்தப்புரத்தினுள் நுழைந்து அவன் ஆயிஷாவின் இருப்பிடத்தை விசாரித்து அறிந்து கொண்டான். அன்னியார் அரண்மனையில் இல்லை என்பதையும் அறிவித்தார்கள் பணிப்பெண்கள். உத்தியான வனத்தில் உள்ள வசந்த மண்டபத்து நிலா முற்றத்தை நோக்கி அவன் நினைவு தாவியது.

புனையாத ஓவியமாய், பொங்கிப் புரளும் புது வெள்ளத்தின் பூரிப்போடு இளமை எதிர் நீச்சலிடும் மேனி எழிலுடன் ஏந்திழையாள் ஆயிஷா நிலாமுற்றத்திலே அமர்ந்திருந்தாள். அந்தப் பெண் மயிலைச் சுற்றிச் சூழ்ந்தபடி வண்ணப் புறாக்கள் கொட்டம் அடித்துக் கொண்டிருந்தன. காற்றை உள்ளடக்கி மார்பை உப்ப வைத்து நெஞ்சை நிமிர்த்தியபடி தங்கள் குஞ்சுச் சிறகை விரிவாக விரித்து, கழுத்தை ஒடித்து 'க்கும்... க்கும்' என்று ஓசையிட்டபடி ஒய்யாரமாக நடை பயின்று கொண்டிருந்தன பால் வெள்ளை நிறத்தையொத்த புறாக்களில் சில. தங்கள் நாட்டியத்தை நங்கையொருத்தி ரசிக்கிறாள் என்ற கர்வம் அவைகளின் ஆட்டத்திலே நன்கு தெரிந்தது. முழங்கையை ஊன்றியபடி ஒருபுறமாக ஒருக்களித்த நிலையில் ஒயிலாக இடைக்கு மேல் உடலை உயர்த்தி அந்தப் புறாக்களுக்கு நேராக முகத்தை வைத்துக் கொண்டு, அவைகளைப் போலவே 'க்கும்', 'க்கும்' என்று ஒலியெழுப்பிக் கேலி செய்த பிறகு கலகலவென்று சிரித்துத் தானே மகிழ்ந்து கொண்டிருந்தாள் ஆயிஷா. அந்தக் கலீர் சிரிப்பொலியிலும் கலக்கமடைந்த சில புறாக்கள் அவள் தோள் மீதும் இடை மீதும் பறந்து வந்து உட்கார்ந்து பயம் தெளிந்த நிலையில் அவற்றின் பளிங்குக் கழுத்தை நெரித்துப் பவழ மூக்கினால் அந்தப் பாவையின் உடலைக் கொத்தி முத்தமிட்டு அவளுக்குக் குறுகுறுப்பை உண்டாக்கின. இப்படிக் குறும்பு செய்யும் புறாக்களைத் தன் தளிர்க் கரங்களால் அமுக்கிப் பிடித்து எடுத்து அவற்றின் பஞ்சு உடலைத் தன் பட்டுக் கன்னத்தோடு ஆசை தீர அணைத்துக் கொண்டாள்.

இப்படித் தனிமையிலே தன்னை மறந்த நிலையில் புறாக்களுடன் விளையாடிக்கொண்டிருக்கும் ஆயிஷாவை — அவள் அழகை— ஒயிலாக ஒருக்களித்த நிலையில் அவள் நிலா முற்றத்திலே படுத்திருக்கும் அந்தப் பாங்கை ரசித்தபடி தன் விழிகளுக்கு விருந்து படைத்துக் கொண்டான் வேங்கடாத்திரி.

''தன் ஆட்டத்தை நாட்டியத்திலே தேர்ந்த அழகியொருத்தி ரசிக்கிறாள் என்று அந்தப் புறாக்களுக்குத்தான் எத்தனை கர்வம்? எப்படி நெஞ்சை நிமிர்த்திக் கொண்டு அவை நடக்கின்றன!''

அந்தப்புரத்தில் ஆண் குரலைக் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பின ஆயிஷா தனக்கு மிக அருகே தன் அழகை விழுங்கிக் கொண்டு வேங்கடாத்திரி நிற்பதைக் கண்டு வெட்கித் தன் விழிகளைத் தாழ்த்திக்கொண்டாள்.

''ஆயிஷா, அந்த மாடப் புறாக்களுடன் அவைகளைப் போலவே ஒலியெழுப்பிப் பேசிக் கொண்டிருந்தாயே, உனக்கு அவைகளின் பாஷை தெரியுமா?'' என்று கேட்டு அருகில் வந்தான் வேங்கடாத்திரி.

தனிமை என்று எண்ணித் தான் செய்த சேஷ்டைகளை ஆடவன் ஒருவன் கண்டுவிட்டான் என்பதை அறிந்தபோது ஆயிஷாவின்

முகம் குங்குமமாகியது. அந்த நினைவிலிருந்து அவனைத் திருப்புவதற்காக, "தளபதியாரை நீண்ட நாட்களாக இந்தப் பக்கமே காணவில்லையே?" என்று கேட்டு வைத்தாள். வேங்கடாத்திரி போர் முனைக்குப் போயிருந்த செய்தி அவளுக்குத் தெரியாததல்ல.

"நீதான் எங்களைக் கண்டாலே பாயும் வேங்கையாகி விடுகிறாயே. அதனால்தான் இந்தப் பக்கமே தலைகாட்டவில்லை".

"வேங்கடாத்திரி வேங்கைக்குப் பயந்தவரா என்ன?"

"வேங்கைக்குப் பயப்படவில்லை. மங்கையின் வேல் விழிகளைக் கண்டுதான்" என்று குறும்பாகச் சிரித்தவன் தொடர்ந்து, "தனிமையிலே புள்ளி மானாகவும், மாடப் புறாவாகவும் மாறி மந்தகாசமாகச் சிரித்து மகிழும் இந்த ஆயிஷாவாகவே நீ எப்போதும் இருந்தால் எவ்வளவு இன்பமாக இருக்கும் தெரியுமா?" என்றான்.

"இருக்க வேண்டிய இடத்தில் இருந்தால் தான் அப்படித்தான் இருப்பேன்" என்று நெஞ்சு முட்ட மூச்சை இழுத்து அதை நெருப்பாக்கி வெளியே விட்ட ஆயிஷா "ஆனால் என்னை இப்படி இரட்டை வாழ்வு வாழ வைத்து விட்டாரே உங்கள் அண்ணா" என்றபோது அவளிடம் தவழ்ந்த நளினம் மெல்ல விலகலாயிற்று.

"எழில் மங்கையர்களுக்கு இத்தனை கோபமும் வன்மமும் கூடவே கூடாது" என்று தன் இடைக் கச்சையிலே செருகியிருந்த எதையோ வெளியில் எடுத்தான். "இதோ பார் ஆயிஷா! இதை உனக்காகவே கோல்கொண்டாவிலிருந்து கொண்டு வந்தேன். இதைக் கண்டபோது உன் கருங்குழலிலே இதைச் சூட்டினால் எத்தனை அழகாக எடுப்பாக இருக்கும் என்றுதான் என் கற்பனை ஓடியது" என்று கூறியபடியே அதை அவளிடம் நீட்டினான். அது நெற்றிச் சுட்டி போன்றதோர் ஆபரணம். முஸ்லிம் மங்கையர் நெற்றியின் ஓர் ஓரத்தில் வந்து படியுமாறு அதைக் கூந்தலின் ஒரு புறமாக அணிந்து கொள்வார்கள். பிறைச் சந்திரப் பதக்கமும் அதன் கீழே முத்துச் சரமும் மேலே படிப்படியாக வைரங்களைக் கொண்டிழைத்த வேலைப்பாடுமாக வேங்கடாத்திரியின் கரத்தில் அது ஜ்வலித்தது.

அவனது நீண்ட கரத்தில் தெளிந்து கிடந்த அந்த விலைமதிப்பற்ற வைர அணியைப் பார்த்து விரக்தியோடு சிரித்தாள் ஆயிஷா. "ஏனோ தெரியவில்லை. உங்களிடம் மட்டும் என்னால் வெறுப்போடு பேச முடியவில்லை. உதாசீனமாக ஒதுக்க மனமுமில்லை. அப்படி ஏதோ ஒரு பாசம்."

வேங்கடாத்திரியின் உள்ளம் உவகையால் பொங்கிப் பூரித்தது. எதை அவளிடம் எப்படிக் கேட்பது என்று தயங்கிக்கொண்டிருந்தானோ அதையே அவள் வாயால் கூறியபோது அவன் மதுவுண்ட வண்டானான்.

"அன்பே, ஆயிஷா! அந்தப் பாசத்தை நேசமாக்கி வளர்ப்போம். என் இதய ராணியாகிவிடு. உனக்கு ஏற்றமிக்க வாழ்வளிப்பேன்" என்றபோது அவள் உடலைச் சிலிர்த்துக்கொண்டாள். அவள் கண்களில் அனல் வீசியது. அசையாச் சிலையாகி அவனை இமையாத விழிகளால் எரித்துவிடுபவள் போல் பார்த்தாள். ஆயிஷாவின் இ மாற்றத்தைக் கண்டு வேங்கடாத்திரி தட துப்போனான். அதிர்ச்சியிலிருந்து விடுப ஏதோ ஒரு முடிவுக்கு வந்தாள் ஆயி அனல் வீசிய அவள் விழிகளில் அடு விநாடி புனல் பொங்கியது.

"ஐயோ! என் வார்த்தைகளைத் தவறு புரிந்து கொண்டு தப்புக் கணக்குப் போட விட்டீர்களே. நீங்கள் நினைப்பது போ உங்கள் வாழ்க்கைத் துணைவியாக என்று முடியாது. அதற்குத் தகுதி பெற்றவளுமல் நான். இந்த விஜயநகரத்திலே எதைஉ யாரையுமே வெறுக்கும் நான் உங்கள் ஒ வருக்கு மட்டும் என் இதயத்திலே ஓ இடத்தை அளித்திருக்கிறேன் — கணவனு அல்ல — அண்ணனுக" என்றபோது அவ பொங்கி வரும் அழுகையை அடக்க முடிய மல் விம்மினாள். "அது ஏன் என்று எனக் தெரியவில்லை. உங்கள் முன்னிலையில் மட்டு உங்கள் நினைவில் மட்டும் நான் என் வே னையை மறக்கிறேன். பழிவாங்கும் வெறித் தனத்தை எண்ணி வெட்கப்படுகிறேன்.

மலை உச்சியிலிருந்து பாதாளத்துக் உருண்டு போய்க் கொண்டிருந்தான் வே. கடாத்திரி. சற்று முன்பு இன்பச் சிறகடித்து பறந்த அவனது இதயம் இப்போது ரணமா வலித்தது. "கண்ணே என்று அழைக்க, தவித்தேன். அண்ணா என்று அழைத்து என்னை அசக்தனாக்கிவிட்டாயே ஆயிஷா!" என்ற வேங்கடாத்திரியின் குரல் கம்ப விகாரமாக ஒலித்தது.

உணர்ச்சி மேலிட்டால் இறுக்கிக் கோத்த கரங்களைத் துடிக்கும் இதழ்களுக்கு ஆத வாக அழுத்திக் கொண்டு நின்ற ஆயிஷா சட்டென்று வேங்கடாத்திரியின் முன் மண்டி யிட்டு அமர்ந்து, "உங்கள் அன்புச் சகோதரியாக என்னை ஏற்றுக் கொள்ள மாட்டீர்களா அண்ணா?" என்று நீர் மல்க மன்றாடினாள்.

பிரமை பிடித்தவனாக நின்று கொண்டிருந்த அரவீட்டு இளவலின் துவண்ட கரங்கள் ஆயிஷாவைப் பற்றித் தூக்கி நிறுத்தின. தாங்க முடியாத தாபத்தோடு அந்தத் தாமரை முகத்தைத் தன் இரு கரங்களாலும் தாங்கியபடி வெகு நேரம் பார்த்துக் கொண்டிருந்தான். உலர்ந்த அவன் உதடுகள் மெல்லப் பிரிந்தன. "ஆயிஷா! நீ என் அன்புச் சகோதரிதான். இந்த அழகை எந்த விதத்தில் பெற்றால் என்ன?" அதற்கு மேல் அங்கு, அவள் முன் அவனால் நிற்க முடியவில்லை. பெண்ணைப் போல் பெண்ணின் முன்னால் நின்று அழுது கொண்டிருக்க விரும்பாத வேங்கடாத்திரி வேகமாக வெளியேறினான். நிலா முற்றத்திலே விழுந்து கிடந்தது அவன் ஆசையோடு ஆயிஷாவுக்காகக் கொண்டு வந்திருந்த ஆபரணம். அதைக் கையில் எடுத்துக் கொண்ட ஆயிஷா, விஜய நகர சாம்ராஜ்யத்தின் பிரதம தளபதி தனது தமையனாகித் தவிப்போடு வேகமாக வெளியே போய்க் கொண்டிருப்பதையே பார்த்தபடி பதுமையாக நின்றாள். (தொடரும்)



சென்னை துறைமுகத் தலைவர், திரு T. K. பழனியப்பன் I. A. S. அவர்களின் புதல்வன், P. K. பெருமாள் M.A.க்கும், சிவசைலம், திரு அருணாசலம் பிள்ளை அவர்களின் புதல்வி ராஜராஜேஸ்வரிக்கும் சமீபத்தில் திருக்குற்றாலத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.



# சிரிக்கவும் சிந்திக்கவும்



ருஷியாவில் மற்றெந்த விஷயத்தில் பற்றாக்குறை இருந்தாலும், தலைவர்களின் படம் மாட்ட இடம் இல்லாத குறை மட்டும் எப்போதுமே இராது. ஏனென்றால், அங்கே ஓர் அதிபுத்திசாலித்தனமான வழக்கத்தைப் பின்பற்றி வருகிறார்கள்! யாராவது ஒரு பிரதம மந்திரி, கட்சிப் பிரதம காரியதரிசி, அல்லது முக்கியமான பதவியில் உள்ளவர்கள் அந்தப் பதவியிலிருந்து தூக்கியெறியப்பட்டால் அத்துடன் அவர் படத்தையும் தூக்கி எறிந்து விடுகிறார்கள். ஆணிகள் மட்டுமே எஞ்சியிருக்கும். அந்த ஆணிகளுக்குத் திராவகம் போட்டுச் சுத்தப்படுத்தி விட்டு அவற்றில் பதவிக்குப் புதிதாக வருபவர்களின் படங்களை மாட்டுகிறார்கள். பிறகு அவர்கள் பதவியிலிருந்து தூக்கி எறியப்படும்போது வழக்கம் போல் படங்களும் போய் விடும். புதியவர்களின் படங்கள் மாட்டப்படும். பிறகு அவர்கள்.... ஆகவே ருஷியாவில் யார் பதவிக்கு வந்தாலும் போனாலும் நிரந்தரமாயிருப்பது தலைவரின் படம் மாட்டுவதற்காக அடிக்கப்பட்டிருக்கும் ஆணிகள்தான். அவற்றுக்கு உயிர் இருந்தால் அவை எத்தனையோ அரசியல் கதைகளைச் சொல்லும்.

உலக மக்களின் வாழ்க்கைத்தரம் உயர்வதற்காக லெனின் வகுத்த கொள்கைகளினின்றும் பிறழ்ந்ததற்காகக் குருஷேவின் புகைப் படங்களை அகற்றி விட்டதாகச் சொல்கிறார்கள். கூட்டுப் பண்ணைகளில் உற்பத்தி அதிகரிப்பதற்காக லெனின் வகுத்த கொள்கைகளுள் இந்தப் படங்கள் அகற்றும் வீரப் பணியும் ஒன்று போலும்!

அங்கே ருஷியாவில் இப்படி நடக்கிறதா? இங்கே? நமது முதன் மந்திரிகளும், உணவு மந்திரிகளும் கூடிக் கூடி 'அரிசி ரேஷன் ஏற்படுத்த வேண்டுமா, வேண்டாமா? அது சம்பிரதாய ரேஷனாயிருக்கலாமா, அந்த வகை ரேஷன் ஒரு வாரம், இந்த வகை ரேஷன் ஒரு வாரம்' என்று மாற்றி மாற்றி வைத்துக் கொள்ளலாமா என்று பேசுவது சம்பந்தமான புகைப்படங்களை நாம் இன்னும் பத்திரிகைகளில் பார்த்தாக வேண்டியிருக்கிறது.

அவையோ அரிசிப் பஞ்ச சீலம் என்பதைச் செயற்கையாக ஏற்படுத்தி விட்டவர்களின் படங்கள்.

ஃ ஃ ஃ

பத்திரிகைகளில் முக்கியமானவர்கள் நகரத்துக்கு வருவதையும், போவதையும் பற்றிய செய்திகளை ஜனங்கள் ஒரொரு சமயம் படிப்பதுண்டு. இப்போது பொதுமக்கள் இன்னும் கவலையுடன் படிப்பது நபர்களின் வருகை, புறப்பாடு இவற்றைப் பற்றி அல்ல. திருவாளர் அரிசி மூட்டை அவர்களைப் பற்றி. பத்திரிகைகள் அவரைப் பற்றிய செய்திகளைப் பின்வருமாறு போடலாம்:

### வருகை

தஞ்சாவூரிலிருந்து குறுவை அரிசி 10[illegible] மூட்டைகள் சாலை மார்க்கமாக வந்தன.

ஆந்திராவி லிருந்து மூவாயிரம் அ[illegible] மூட்டைகள் ரயில் வண்டியில் வந்திறங்கின

ஒரிஸ்ஸாவிலிருந்து 2000 மூட்டைக[illegible] ரயில் வண்டியில் வந்திறங்கின.

தாய்லாந்திலிருந்து 3000 மூட்டைக[illegible] கப்பலில் வந்திறங்கின.

### புறப்பாடு

மூவாயிரம் அரிசி மூட்டைகள் கோ—ஆ[illegible] ரேட்டிவ் சொஸைட்டிகளுக்கும், நியாயவில[illegible] கடைகளுக்கும் புறப்பட்டுச் சென்றன.

எட்டாயிரம் மூட்டைகள் அரசாங்க[illegible] காரியாலயங்களுக்கும், வியாபார ஸ்தாபன[illegible] களுக்கும் கிளம்பிச் சென்றன.

.......... மூட்டைகள் இடம் தெரியா[illegible] கறுப்பு மார்க்கெட்டுக்குச் சென்றன.

ஃ ஃ ஃ

இப்படிப் பல இடங்களிலிருந்தும் வரு[illegible] அரிசி பலவிதமாகத்தானே இருக்கும்?

ஆந்திர அரிசி அநேகமாக உயர்ந்த ரகத்தைச் சேர்ந்ததாயிருக்கும். தஞ்சாவூர் அரிசி அப்போதுதான் ஐப்பசி மாதத்துக் கடைமுழுக்குப் போட்டு விட்டுத் தண்ணீர் சொட்டச் சொட்ட வந்தது போல் இருக்கிறது. தாய்லந்து அரிசி பர்மா அரிசியைப் போல் சுண்ணாம்பு வாசனை உள்ளதாயிருக்கும். எல்லோருக்குமே நல்ல அரிசி கொடுப்பதென்பது சாத்தியமல்ல. ஆகையால் பல ராஜ்ய அரிசிகளையும் கலந்து கலப்பு அரிசியாகக் கொடுக்கலாமல்லவா?

ஜனதா ரயில், ஜனதா செருப்பு என்று பெயரிட்டிருப்பது போல் இதற்கு ஜனதா அரிசி என்று பெயரிடலாம். ஆனால் தேசிய ஒருமைப்பாட்டு அரிசி என்ற பெயர் அதிகப் பொருத்தமாயிருக்கும். ஏனென்றால் தேசிய ஒருமைப்பாட்டுக்காக நமது கலைஞர்கள் ஒரிஸ்ஸாவுக்குப் போய் ஆடிவருகிறார்கள், ஒரிஸ்ஸா கலைஞர்கள் இங்கே வந்து ஆடுகிறார்கள். அதே போல் அரிசியும், ராஜ்யத்துக்கு ராஜ்யம் விட்டு வந்து கொண்டிருக்கிறதல்லவா?

ஃ ஃ ஃ

'ஒருநாளுணவை ஒழியென்றால் ஒழியாய்
இரு நாளைக்கே லென்றால் ஏலாய்
இடும்பை கூர் என் வயிறே'
...உனக்கு வேளைக்கெத்தனை வேண்டும்
சொல்லித் தொலை

என்று நமது வயிற்றைப் பார்த்துக் கேட்டால் அது கணக்குச் சொல்ல முடியாமல் திண்டாடிப் போகும். நாழி, ஆழாக்கு இந்தக் கணக்கில் சாப்பிட்டு அதற்குப் பழக்கம். இப்போதோ அரிசி.

டன் கணக்கில் வினா
டிது.
ரூ...டைக் கணக்கில் ...ருமதி இறக்குமதி ...கிறது.
குவின்டல் கணக்கில் ...தன் விலை நிர்ணயிக்கப்படுகிறது.
லிட்டர் கணக்கில் ...ந்து போடப்படுகிறது.
அவுன்ஸ் கணக்கில் ...ரஷன் செய்யப்படுகிறது.
காரண்டிக் கணக்கில் ...ஊட்டலில் அளவுச் சாப்பாடுபோடுகிறார்கள்.

௸ ௸ ௸

தங்கள் வயதை யாரும் குறைத்துச் சொல்லிக் கொள்வது சகஜம். ஆனால் சில சந்தர்ப்பங்களில் அதிகமாகவும் சொல்லிக் கொள்வதுண்டு.



“நீங்கள் கருப்பாயிக்காக வாங்கி இருக்கிற புடவைதான் நம்ம உஷாவுக்குப் பிடிச்சிருக்காம்.”
“அதற்காகப் பட்டுப் புடவையைத் தூக்கி வேலைக்காரிக்குக் கொடுத்திட முடியுமா என்ன?”

அடையச் செய்யும் படம் காண்பிக்கப்பட்ட போது பதினொன்று வயதுப் பையன் ஒருவன் மீசையை ஒட்ட வைத்துக் கொண்டு டிக்கெட் வாங்க முயற்சி செய்தானாம்.

தங்கள் குழந்தைகளைச் சீக்கிரமே பள்ளிக்கூடத்தில் சேர்க்க விரும்பும் அவசரக் குடுக்கைகளான பெற்றோர்களும் அவற்றின் வயதை ஒன்றிரண்டு கூடப் போட்டு விடுகிறார்கள்!

௸ ௸ ௸

வயதைக் குறைத்துச் சொல்வதென்பது ஸ்திரீகளின் தனிப்பட்ட உரிமை என்று பரிகசித்து வந்துகொண்டிருந்தோம். ஆண்களும் இப்போது அந்த உரிமையைக் கொண்டாடுகிறார்கள்.

இந்தியாவில் வைஸ்ராயாயிருந்த கர்ஸான் பிரபு இளைஞராயிருந்த சமயம் சீனாவில் சுற்றுப்பிரயாணம் செய்து வந்தார். அங்கே ஒரு நகரத்தில் உள்ள சங்கத்தினர் அவருக்கு மரியாதை செய்ய விரும்பினார்கள். ஆனால் அவர்கள் சங்க விதிப்படி நாற்பது வயதுக்கு மேற்பட்டவர்கள்தான் மரியாதை செய்யப்படுவதற்கு உரியவர்கள். கர்ஸான் தமக்கு நாற்பத்தொரு வயது என்று வாய் கூசாமல் கூறினார். அவருக்கு அப்போது வயது முப்பத்தைந்துகூட ஆகவில்லை. பழைய இந்திய வாதிகள், திமிர் பிடித்த கர்ஸான் பிரபுவைத் தாக்கும்போதெல்லாம் அவர் ஒரு பொய்யர் என்பதற்காக இந்தச் சம்பவத்தை அடிக்கடி எடுத்துக் கூறுவார்கள்.

புகழ்பெற்ற நாவலாசிரியரான ஏ. டபிள்யூ. ஈ. மேஸன் தமக்கு நாற்பத்தொன்பதாவது வயது நிறைந்திருந்தபொழுது முப்பத்தொன்பது என்று சொன்னார்; முதல் யுத்தத்தின் போது, சைனியத்தில் சேர்ந்து யுத்த சேவை செய்வதற்காக.

இப்போது கலியாணம் செய்து கொண்ட பெண்மணிகள் தங்கள் வயதைக் கூடவே சொல்லிக் கொள்கிறார்கள். அவர்கள் கணவன்மார்களுக்கு முப்பத்திரண்டு, முப்பத்து மூன்று வயதிருக்கும். இவர்களுக்கு இருபத்து நான்கு இருபத்தைந்து வயதிருக்கும். ஆனால் இருபத்தொன்பது முப்பது என்று பெருமையாகச் சொல்லிக் கொள்வார்கள். கணவனுக்கும் மனைவிக்குமிடையே மூன்று, நான்கு வயதுக்கு மேல் வித்தியாசம் இருப்பது நாகரிகமானதாகக் கருதப்படுவதில்லை.

'வயது வந்தவர்களே பார்க்கலாம்' என்னும் சினிமாப் படங்களைப் பார்க்க விரும்பும் மாணவப் பையன்கள் தங்கள் வயது பத்தொன்பது, இருபது என்று சொல்லிக் கொள்வதுண்டு. சென்னையில், ஹிட்ச்காக்கின் 'சைக்கோ' என்ற திகிலுணர்ச்சி

இன்ஷ்யூரன்ஸ் பாலிஸி எடுத்துக் கொண்டிருப்பவர்கள், அரசாங்க உத்தியோகங்களில் இருப்பவர்கள் இவர்களுள் சிலர் தாங்கள் பிறந்ததாகச் சொல்லியிருக்கும் தேதியன்று கட்டாயம் பிறந்திருக்க மாட்டார்கள்.

வயதைக் குறைத்தோ கூட்டியோ எழுதி வைக்கும் குற்றவாளிகள் பெரும்பாலும் ஒருவரது தந்தைதான். நாம் சிறுவராயிருக்கும் போது பெரியவர்கள் செய்துவிட்ட காரியத்துக்காக நாம் கஷ்டத்துக்கும் பரிகாசத்துக்கும் ஆளாக வேண்டியிருக்கிறது.

ஆனால் சில சமயம் பிறர் தவறுதல்கள், நமது ஞாபக மறதி இவற்றின் காரணமாகவும் சரியான பிறந்த தேதி பதிவு செய்யப்படாதிருக்கலாம்.

ஸ்ரீ ஜோதி பிரகாஷ் மித்தர் கல்கத்தா ஹைகோர்ட்டில் நீதிபதியாயிருந்தார். திடீரென்று ஒரு நாள் அரசாங்கம் “நீங்கள் 27–12–1901ம் ஆண்டில் பிறந்தீர்கள். வயது அறுபது ஆகி விட்டது. ஆகையினால் பதவியிலிருந்து விலகிக் கொள்ளுங்கள்” என்று கூறினார்கள். இதைக் கேட்டு ஸ்ரீ மித்தர் திடுக்கிட்டுப் போனார். ஆச்சரியமடைந்து, “நான் அந்தத் தேதியில் பிறக்கவில்லையே! சரியாக மூன்று வருஷங்கள் கழித்து 27–12–1904ல் அல்லவா பிறந்தேன்? நான் பிறந்த தேதியைத் தப்பாகப் பதிவு செய்திருக்கிறார்கள்” என்று கூறினார்.

மற்றவர்களுக்கு நியாயம் வழங்குபவர் அல்லவா? தமக்கும் இது விஷயத்தில் நியாயம் வழங்கப்பட வேண்டும் என்பதற்காக வழக்குகள் அதற்கு மேல் அப்பீல் வழக்குகள் தொடுத்துக் கொண்டே வந்திருக்கிறார்.

வயது சம்பந்தமாக ஏற்பட்டுள்ள இந்தக் குழப்பத்தில் ஒருவர் ஏன் இரண்டு வெவ்வேறு தேதிகளில் பிறந்திருக்கக் கூடாது என்று கூடச் சந்தேகப்படத் தோன்றுகிறது.

— என். ஆர்.

அவர்கள் அழகுபற்றி அவனுக்குப் பெருமை.
அவ்வழகின் ரகசியம் அவர்களுக்குப் போது.



தாயும், மகளும்
சேர்ந்து வெளியே செல்லும்
போது அனைவரது கவனமும் அவர்
களிடம் திரும்புகிறது. அவர்களின்
எழிலைப் பாராட்டி, ரகசியமாகப் பேசிக்
கொள்கிறார்கள். 'சகோதரிகளோ?' என்று
கூட ஒருவர் சந்தேகிக்கிறார். ஆம், அந்த அன்னை
'அன்று கண்ட அழகுக்கு' அழிவின்றி விளங்கு
கிறாள். மகளுக்குத் தெரியும் அன்னையின் எழில்
ரகசியம், ஆம், என்றுமே அவர்கள் உபயோகிப்பது
"'ஹேஸலின்' ஸ்னோ"....தனியாகவோ, பவுடர்படியும்
தளமாகவோ எழிலைப் பாதுகாத்து, அதற்கு மெரு
கூட்டுகிறது 'ஹேஸலின்' ஸ்னோ.

**'ஹேஸலின்' ஸ்னோ** உங்களுக்கு எழிலூட்டுகிறது.

'ஹேஸலின்' வரிசையில் கிடைப்பவை: கோல்ட் க்ரீம் மற்றும் டால்கம்.



**பர்ரோஸ் வெல்கம் & கம்பெனி (இந்தியா) ப்ரைவேட் லிட்.,**
**த. பெ. பெ. 290, பம்பாய்-1.**



# அவள் அப்படி என்ன அதிசயப் பெண்...?

தி. எஸ். பாலகிருஷ்ணன்

ராஜகோபாலனுக்கு ஒருநாளும் கல்யாண மாகாது என்று அவன் நண்பர்கள் தீர்மான மாக நம்பினார்கள். அமெரிக்காவிலிருந்து தாய்நாட்டுக்குத் திரும்பின பின்னேயான் டான் குறைந்தது முந்நூறு பெண்களை யாவது பேட்டி கண்டிருப்பான். பத்திரிகைடமும், சொந்தமிடமும் அவனுக்கு ''அலர்ஜி' ஏற்படுவதற்குக் காரணமே இந்த முடிவில் லாத பெண் வேட்டைதான். முழுசாக மூன்று வருஷங்கள் சல்லடை போட்டுச் சலித்தும் அவனுக்குப் பிடித்த பெண் அகப் படவில்லை.

இடையென்று ராஜகோபாலன் திருச்சூருக்குப் போயிருப்பதாக ஆபீசுக்குத் தகவல் வரும். ''சரிதான், மலையாள மங்கை ஒருத்தியைப் பேட்டி காணத்தான் பின்னேயான்டான் போயிருக்கிறான்'' என்று சக ஊழியர்கள் பேசிக் கொள்வார்கள். அழகான பெண் ஒருத்தியைத் தேர்ந்தெடுத்திருப்பதாகச் செய்தி கொண்டு வருவான் என்று ஆவலுடன் எதிர்பார்ப்பார்கள். ஆனால் திரும்பி வந்த ராஜகோபாலனோ மலையாளத்தில் ஏதோ ஓர் ஊரில் சாப்பிட்ட 'இலை அடை'யின் ருசியைப் பறைசாற்றத் தொடங்கி விடுவான்; அல்லது நேந்திரம் பழ வறுவலைப் பற்றிக் கவி பாடத் தொடங்குவான். போன காரியத் தைக் குறித்து வினவினால் கையை அகல மாக விரிப்பான்.

''ஏன், பெண் அழகாக இல்லையா? கேரளப் பெண்கள் எழிலுக்குப் பெயர் போனவர்க ளாச்சே?...'' என்று குத்திக் கேட்டால் அழகின் அநித்தியம் பற்றி ஒரு குட்டிப் பிரசங்கமே செய்து விடுவான்!

இருந்திருந்தாற்போல் டில்லிக்கு விமானத்தில் பறப்பான் ராஜகோபாலன். இந்தத் தடவை நிச்சயம் 'சரி' என்று சொல்லி விருப்பான் என்று எதிர்பார்ப்பார்கள் அவன் நண்பர்கள். பின்னையை விமானத்தில் அழைத்துச் செல்லும் பேர்வழியிடம் நிறையப் பணம் இருக்குமே! செல்வச் செழிப்புடன் விளங்கும் ஆசாமியின் பெண்ணை யாராவது தட்டிக் கழிப்பார்களா என்ன? பணக்கார மாமனார்தானே கலியுகத்தில் காமதேனு? ஆனால் திரும்பி வந்த ராஜகோபாலனோ விமானத்தில் சாப்பிட்ட 'லஞ்சி'ன் ருசியை வாயாரப் புகழ்வானே தவிர, பெண்ணைப் பற்றி ஒரு வார்த்தை கூட மூச்சு விடமாட்டான். வற்புறுத்திக் கேட்டால் 'வேடாம்' என்று சொல்லி விட்டதாகப் பதில் சொல்வான்.

''பெண்ணின் தகப்பனாருக்குத்தான் பணம் கொட்டிக் கிடக்கிறதே! இருந்தும் ஏன் தட்டிக் கழித்தாய்?'' என்று வினவினால் பெரிய வேதாந்தி மாதிரி பதில் சொல்வான் அவன்.

''யாருக்கு வேண்டும் பணம்? அதுவும் 'ஸ்திரீ வித்தம் அதமாதமம்' என்று தெரியாமலா பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள் எனக்குப் பணத்தினிடம் கொஞ்சம் கூட ஆசையில்லை'' என்று மொழிவான்.

கல்கத்தாவில் ராஜகோபாலன் பார்க்கச் சென்றிருக்கும் பெண், எம்.ஏ., எம். லிட். பி. எச்டி. என்று பட்டங்களாக வாங்கித் தள்ளியிருக்கிறாள் என்று கேள்விப்பட்ட அவன் நண்பர்கள் மீண்டும் கல்யாணச் சாப்பாட்டை நினைத்து நாக்கைச் சப்புக் கொட்டிக் கொள்வார்கள். அழகையும் பணத்தையும் வெறுத்த பின்னேயான்டான் படிப்பை நிச்சயம் போற்றுவான் என்று எண்ணுவதில் தவறென்ன? ஆனால் திரும்பி வந்த ராஜகோபாலனோ, கல்கத்தாவிலிருந்து வாங்கி வந்திருந்த ரசகுல்லாவின் ருசியை மெச்சுவானே தவிரக் கல்யாண விஷயம் என்னவாயிற்று என்று சொல்லித் தொலைக்க மாட்டான்.



''101 எங்கே?''
''202ஐ தேடிக்கிட்டுப் போனாரு!''
''202 எங்கே?''
''303ஐ தேடிப் போனாரு.''
''303 எங்கே?''
''எங்கேயாவது என்னைத் தேடிக்கிட்டு இருக்கும்!''

''உன் ரசகுல்லா நாசமாய்ப் போக! பெண்ணைப் பிடித்ததா இல்லையா? நிறையப் பட்டங்கள் வாங்கியிருக்கும் பெண்ணுமா உன் உள்ளத்தைக் கவரவில்லை?'' என்று யாராவது சலிப்புடன் கேட்டால், ''படிப்பைக் கொண்டு போய் உடைப்பில் போடு! நிறைய ஓய்வும், பணமும், ஆரோக்கியமும் இருந்தால் பட்டங்களாக வாங்கித் தள்ளுவதில் என்ன சிரமம்? அது மட்டுமில்லை. குடும்பம் நடத்தப் போகும் பெண் டாக்டர் பட்டத்தை வைத்துக் கொண்டு என்ன செய்வாள்?'' என்பான்.

அதற்குப் பிறகு ராஜகோபாலன் எங்கெங்கோ பெண் பார்க்கப் போனான்.

நண்டுருக்குப் பெண் 'க்கப் போனவனுக் தெருவி ரயிலடியில் ர் . சாதத்துக்குத் ாட்டுக் கொண்ட ங்காய் ஊறுகாய் ன் பிடித்தது. பெங்க ரில் அவன் உள்ளத்தில் டம் பெற்றது ஏதோ தொட்டலில் சுடச் ப் பரிமாறப் பட்ட கி போளாஹூலிதான்! இப்பொழு தெல்லாம் ஜகோபாலன் விஷயத் ் அவன் நண்பர்கள் க்கறை எடுத்துக்கொள் இல்லை. கள்ளிக் கோட் டக்கு அவன் போய் ருப்பதாகக் கேள்விப் ட்டால், 'திரும்பி வந்த டன் மலையாள ஓலனைப் ற்றிமழையாகப் பொழி



'' விலைவாசி உயர்வு, சர்க்கரைப் பஞ்சம் இதனாலே, தீபாவளி ஸ்வீட் தயாரிப்புக்குப் பதில் என்னாலே ஸ்வீட் படக்காட்சிதான் சார், நடத்த முடிஞ்சுது !''

ான் அல்லது காளனுக்குக் கவி பாடுவான்' ன்றுசலிப்புடன்மொழிந்துவிட்டுவேறுபக்கம் கத்தைத் திருப்பிக் கொள்வார்கள். அவன் ல்யாணச் சாப்பாடு போடும் தினம் வராது ன்று அவர்கள் நிச்சயமாகத் தீர்மானித்து ிட்டார்கள்.

அப்பொழுதுதான் ஒரு பெரிய குண்டைத் தூக்கிப் போட்டான் . ராஜகோபாலன். அவனுக்குப் பெண் பிடித்து விட்டதாம்! அது மட்டுமா? கல்யாணத் தேதி கூட நிச்சயமாகி விட்டதாம்! இந்த எதிர்பாராத 'செய்தி யைக் கேள்விப்பட்ட அவன் நண்பன் ஒரு வனுக்கு மூர்ச்சையே போட்டு விட்டது.

கல்யாணத்துக்குப் பிறகு ராஜகோபாலன் வெகு குஷியாகக் காட்சியளிப்பான் என்று எதிர்பார்த்தார்கள் அவன் நண்பர்கள். நேர் மாறாக விளக்கெண்ணெய் வழிந்தது அவன் முகத்தில். இப்பொழுதெல்லாம் அவன் அரட்டை அடிப்பதில்லை. ஏன், புது மனைவி பிரியமாகக் கட்டித் தந்த டிபனைக்கூட அவன் சுவைத்துச் சாப்பிட்டதாகத் தெரியவில்லை.

ஒரு நாள் நாற்காலியின் கையில் வீற் றிருந்தபடி; ''நான் ஒன்று கேட்பேன், பதில் சொல்லுவீர்களா ?'' என்று குழைந்தபடி கேட்டாள் அவன் புது மனைவி மாதுரி.

''தாராளமாகக் கேள்'' என்றான் ராஜ கோபாலன்.

''அழகும், படிப்பும், பணமும் இருக்கும் எத்தனையோ பெண்களைத் தட்டிக் கழித்த நீங்கள் என்னை ஏன் தேர்ந்தெடுத்தீர்கள்?''

ராஜகோபாலன் பதில் சொல்லவில்லை. ஒரு வறட்டுச் சிரிப்புச் சிரித்தான். ஆனால் மாதுரியா விடுவாள்? வற்புறுத்தினாள்.

''இதோ பார், மாதுரி, நான் உண்மை யைச் சொல்லி விடுகிறேன். ஆனால் நீ கோபித்துக் கொள்ளக் கூடாது. உன்னை நான் பெண் பார்க்க வந்தபோது உன் அப்பா உன்னைப் பற்றி என்னென்னமோ சொன்னார். அதில் ஒரு விஷயம் என் மனத்தில்பதிந்தது.''

''என்ன விஷயம் அது?''

''நீ ஆங்கில வாரப் பத்திரிகை ஒன்றில் 'பிரியம்வதா' என்ற புனைபெயரில் கீழ் எழுதுவதாக உன் அப்பா சொன்னார்.''

''அந்தப் போய் ரொம்பப் பிரமாதப் படுத்துகிறீர்களே. பணத்துக்காக ஏதோ கிறுக்கிக் கொண்டிருந்தேன்....''

''மாதுரி... நீ நம்பினால் நம்பு, நம்பா விட்டால் போ! அந்தப் பத்திரிகையில் நான் தவறாது வாசிப்பது உன்னுடைய வாரக் குறிப்புகளைத்தான். அரசியல் செய்திகளைக் கூடப் படிக்காமல் இருந்தாலும் இருந்து விடுவேன். உன்னுடைய சமையற் பகுதி யைப் படிக்கத் தவறவே மாட்டேன். 'கோகர்ஜான் ஸ்வீட்', 'பாவற்காய் பிரி யாணி' என்று புதுக புதிசாக நீ எழுதுகையில் என் நாவில் நீர் சுரக்கும். உன் அப்பா 'பிரி யம்வதா' என்பது உன் புனைபெயர் என்று குறிப்பிட்டவுடன் நான் துள்ளிக் குதித்தேன். பாட்டி செத்த பிறகு சுவையான சாப் பாட்டுக்காக ஏங்கித் தவித்துக் கொண்டிருந்த எனக்கு, சமையற் கலையில் அபாரத் திறமை வாய்ந்த பெண் மனைவியாகக் கிடைக்கிறாள் என்றால் மகிழாமல் இருக்க முடியுமா? ஒவ் வொரு வாரமும், ஏன், ஒவ்வொரு தினமும் புத்தம் புது தின்பண்டங்கள் செய்து என்னைத் திணற அடிப்பாய் என்று எதிர் பார்த்தேன். என் இலட்சியப் பெண்ணிடம் நான் எதிர்பார்த்தது இந்த ஒரே குணம் தான்! ஆனால் நீயோ உப்பில்லாத உப்பு மாவையும், காரமில்லாத காராபூந்தியையும் தந்து என்னைச் சோதிக்கிறாய். இதுமுறையா?''

''அட (சாப்பாட்டு) ராமா! இதை முத லிலேயே சொல்லி யிருக்கக் கூடாதா? நானா வது புதுக புதுசாகச் சமைப்பதாவது? எனக்கு ஒழுங்காகச் சாதம் வடிக்கக் கூடத் தெரியாதே! பணத்துக்காகப் பாட்டி தமிழில் சொல்லுவதை யெல்லாம் ஆங்கிலத்தில் சுவைபட எழுதிக் கொண்டிருந்தேன். பாட்டி போனாலும் போனாள், என் சமையல் கட் டுரைத் தொடர் நின்று போய் விட்டதே!'' என்று அங்கலாய்த்தாள் மனைவி மாதுரி.

# இருமலை நிறுத்த
# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்
சாப்பிடுங்கள் சிவப்பு லேபில்





விடாது தொடர்ந்து தொல்லை கொடுக்கும் இருமலைப் பற்றி அசிரத்தையாக இருக்கக் கூடாது. அது உடலைப் பலவீனப்படுத்தி, நோய்களை எதிர்க்கும் சக்தியைக் குறைத்து, நோய்கள் எளிதில் பீடிக்கும் நிலையை ஏற்படுத்துகிறது. வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் மூன்று விதங்களில் அளிக்கும் பலன் ஒப்பற்றது. அதிலுள்ள கிரியோஸோட் மற்றும் க்வயகால் இருமலை குணப்படுத்துகிறது. இரும்பு சத்து, பலமளிக்கும் சத்துக்கள், மால்ட் மற்றும் ஸ்ப்ரீன் சாரங்கள், பசியைத் தூண்டுகின்றன, இழந்த சக்தியை ஈடு செய்கின்றன, குணமான நோய் மீண்டும் வராமல் தடுக்கும் சக்தியை யூட்டுகின்றன.

எல்லாக் கால நிலைகளிலும் நோய்களை எதிர்க்கும் சக்தி பெற சிவப்பு லேபிலுள்ள வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் சாப்பிடுங்கள்.






வாட்டர்பரீஸ் காம்பவுண்டில் க
துள்ள கிரியோஸோட் மற்றும் க்
வகால், சுவாசக் குழாய்களில் கி
மிகளால் அபாயம் ஏற்படாம
பாதுகாக்கின்றன. கபத்தை 'இ
க்கி வெளியேற்றி சுவாசப்பை
சுத்தமாக வைக்கின்றன. இரும
ஜலதோஷம், சுவாசக்குழாய்களி
கபம் கட்டுதல், காச சம்பந்தமா
உபாதைகள் முதலியவற்றை எதி
க்கவும் மீண்டும் வராமல் தடுக்
கும் உதவுகின்றன.

## வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

**இருமல், ஜலதோஷம், சுவாசக் குழாய்களில் கபம் கட்டுதல், காச சம்பந்தமான உபாதைகள் முதலியவற்றை எதிர்க்கும் சக்தியை உடலுக்கு அளிக்கிறது**

வார்னர் - இந்துஸ்தான் லிமிடெட், பம்பாய்

JWT-WL-[illegible]

# ஒரு மான் + ஒரு வலை

பொன்முடி

இந்த முறை எப்படியும் அந்த அழகிய மானை தன் வலையில் வந்து விழுந்து விடும் என்றே அவன் உறுதியாக நம்பினான். இதற்கு முன்பு எப்போதும் அவனுடைய எந்த ஒரு கடிதத்துக்கும் அவளிடமிருந்து இப்படி ஒரு பதில் கிடைத்ததே இல்லை. அதாவது ஆதரவான பதிலும் கிடைத்ததில்லை. ஆட்சேபணையான பதிலும் கிடைத்ததில்லை. இப்போது தான் முதன் முறையாக அந்தப் பூஞ்சிட்டு தன் பொன்னிறக் கரத்தினால் அவனுக்கு மறுமொழி எழுதியிருக்கிறது.

ஒரே ஒரு வரியில்தான் அந்தப் பதில் அமைந்திருந்தது. அதை ஒரு முழு வாக்கியம் என்றுகூடச் சொல்லிவிட முடியாது. 'உங்கள் விருப்பப்படியே — சாயங்காலம் ஆறு மணிக்கு ஆறுமுகம் பூங்காவில்' மேற்குக் கோடியிலுள்ள புல்வெளியில் சந்திக்கலாம்' என்று தான் அதில் எழுதப்பட்டிருந்தது. ஒரு வாக்கியமானால் என்ன? முக்கால் வாக்கியமானால் என்ன? பதில் ஒன்று வந்திருக்கிறது என்பதே பெரிய காரியம்தான். பதிலே ஒரு நல்ல சூசகம். அந்தச் சிங்கார நளினக் குறுநகைச் செல்வியை எப்படியும் வசப்படுத்திவிட முடியும் என்ற நம்பிக்கை இப்போது அவனுக்கு இருந்தது. தேர்ந்த வேட்டுவனின் சாமர்த்தியத்துடனே இலக்குத் தப்பாமல் இடம் தப்பாமல் இந்த முறை வலையை வீசியிருந்தான் அவன். வீசுவதற்கென்று தனி வலைகள் அவனுக்குத் தேவையில்லை. அவனே ஒரு பெரிய வலைதான். தன்னைப் பற்றிச் சக மாணவர்களும், கல்லூரியின் விரிவுரையாளர்களும், பேராசிரியர்களும் மறைவில் ஒரு தினுசாகப் பேசிச் சிரிப்பதும், தனக்குக் 'கோயில் காளை' என்று பட்டப் பெயர் சூட்டியிருப்பதும் அவனுக்குத் தெரியாத விஷயங்களல்ல. எந்த விஷயமானாலும் 'முயற்சி திருவினை ஆக்கும்' என்பதில் அவனுக்கு அபார நம்பிக்கை. ஹாஸ்டல் செலவுகளுக்கும், பாக்கெட் மணிக்குமாக மாதம் பிறந்தால் ஆயிரம் ரூபாய்க்குச் செக் அனுப்பி வைக்கிற பணக்காரத் தகப்பனுக்கு ஒற்றைக்கொரு மகனாயிருக்கிறவன் கொஞ்சம் தாராளமாகச் செலவு செய்தால் தான் என்ன குடி முழுகிப் போகிறதாம்?

பல வேளைகளில் அவன் தன்னைப் பற்றித் தனக்குத் தானே பின்வருமாறு நினைப்பதுண்டு:

'நான் வாழ்க்கையை அநுபவிக்கப் பிறந்தவன். இந்த மருத்துவக் கல்லூரியின் அதிகாரிகளும், நிர்வாகிகளும் பெண்கள் ஹாஸ்டலுக்கும், ஆண்கள் ஹாஸ்டலுக்கும் நடுவில் இவ்வளவு பெரிய சுவரை எழுப்பி விட்டதற்காகப் பெருமையும் திருப்தியும் பட்டுக் கொள்ளலாம். ஆனால் இந்தச் சிமெண்ட் சுவரையும் கடந்து போய் ஆர். எஸ். ராஜாவின் காரியங்களும், செல்வாக்கும், காதல் கடிதங்களும் பரவ முடியும் என்பதை யாருமே மறுக்க முடியாது.'

அந்த மெடிகல் காலேஜ் எல்லைக்குள் அவன் தான் ராஜா. குறிப்பிட்ட ஏதாவதொரு கோணத்திலிருந்து பார்த்தால் மட்டும் ராஜாவானால் போனால் போகிறதென்று விட்டுவிடலாம். அவனோ எந்தக் கோணத்திலிருந்து பார்த்தாலும் எப்படிப் பார்த்தாலும் எப்போது பார்த்தாலும் ராஜாதான். தோற்றம், சக மாணவர்களுக்காகப் பணத்தைத் தண்ணீராகச் செலவழிப்பது, அழகும் தளுக்கும், மினுக்குமுள்ள பகட்டு நிறைந்த மாணவிகளை 'மாட்னி ஷோ'வுக்கு அழைத்துப் போவது, வருட ஆரம்பத்தில் புதிய மாணவ மாணவிகளை அளவுக்கதிகமாகவே 'ராகிங்' வம்புகளுக்கு ஆளாக்கி மகிழ்வது போன்ற பல காரியங்களில் ஏகசக்ராதிபதி அவன். 'ஒரு கொழுப்பு நிறைந்த கோயில் காளையின் திமிரும், மாதம் ஆயிரம் ரூபாய் செலவழிக்க முடிந்த ஒரு தத்தாரியின் அல்லது ஊதாரியின் சுகாநுபவங்களும் உள்ளவன் எங்காவது ஒரு நல்ல மாணவனாக இருக்க முடியுமா?' என்று நீங்கள் கேட்க விரும்பலாம். நல்லவனாயிருப்பது வேறு. வல்லவனாக இருப்பது வேறு. இந்த இருபதாவது நூற்றாண்டில் பல விதத்திலும் நல்லவனாக இருப்பதைக் காட்டிலும் வல்லவனாக இருப்பதுதான் புத்திசாலித்தனமான காரியம். எனவே நமது திரு ஆர். எஸ். ராஜா நல்லவனாக இல்லாவிடினும் பல விஷயங்களில் வல்லவனாக இருந்தான். சீனியர் மாணவன் என்ற முறையில் மற்றவர்களையும் கட்டி சேர்த்துக்கொண்டு அந்த ஆண்டுக் கல்லூரித் தொடக்கத்தில் புதிதாக வந்த மாணவ மாணவிகளை ஆர். எஸ். ராஜா படுத்திய 'ராகிங்' கொடுமைகளை மாதிரிக்குக் கொஞ்சம் பார்க்கலாம்.

சில மாணவிகளின் இரட்டைப் பின்னல்களில் ஊசிப் பட்டாஸ்கள் சரம் சரமாகக் கட்டி வெடிக்கப்பட்டன. மாணவர்களைப் பனியனோடு நிறுத்தி முதுகு வழியாகப் பனியனுக்குள் ஐஸ் கட்டி போடப்பட்டது. டான்ஸ் தெரிந்த தோஷத்திற்காக ஒரு புதிய மாணவி 'குறத்தி' டான்ஸுக்குரிய குறவஞ்சி வேஷம் போட்டுக் கொண்டு வரச் சொல்லி வற்புறுத்தப்பட்டாள். வேறு வழியின்றி அவளும் அப்படியே செய்ய வேண்டியதாயிற்று. இந்த மாதிரி 'ராகிங்' ஆர். எஸ். ராஜாவின் ஒவ்வொரு நாள் வாழ்விலும் கூட உண்டுதான். ஒரு பெரிய பணக்கார வியாபாரியின் ஏகபுத்திரனாகிய திரு ஆர். எஸ். ராஜாவின் மருத்துவக் கல்லூரி வாழ்க்கையில் விசேஷ அம்சங்கள் இரண்டு. ஒன்று ஹாஸ்டல் முதலிய செலவுகளுக்காகவும் பகட்டுக்காகவும் மாதா மாதம் ஆயிர ஆயிர

ரூபாய்ச் செலவு. இரண்டு நாளைக்கொரு மாணவியும் பொழுதொரு 'கேர்ல் ஃப்ரெண்'டுமாக அவன் சினிமாத் தியேட்டர்களையும் நவநாகரிக ஸில்க் புடைவைக் கடைகளையும் சுற்றிக் கொண்டிருப்பது. இதைத் தவிர கிரிக்கெட் மேட்ச், ஸ்விம்மிங் பூல், பிக்னிக், கல்லூரியின் சக மாணவர்களோடு அரட்டை, எல்லாம் வகைக்குக் கொஞ்சமாக அவனிடம் உண்டு. மாணவிகளை — அதுவும் கொஞ்சம் அழகாக நிறமாக இருக்கிற மாணவிகளைக் கண்டால் ஆர். எஸ். ராஜா வலுவில் போய் எதிர்கொண்டு சிரித்துச் சிரித்துப் பேசுவான். அவ்வளவு சொல்வானேன்? அவன் மற்றவர்களுக்கு விரிக்கிற வலை என்று தனியாக ஏது மில்லை. அவனே ஒரு பெரிய வலைதான்!

''மிஸ் நளினி! யூ ஆர் லுக்கிங் வெரி நைஸ் வித் திஸ் புளூ ஸாரி...'' என்று திடீரென்று அந்த நளினியே வெட்கப்படுமாறு அந்த உடையின் வண்ண வனப்பை அவளிடமே வியப்பான் திரு ஆர். எஸ். ராஜா. வாயரட்டையிலும் தங்கள் அழகோடு சார்த்தப் பட்டு வெளிவரும் புகழிலும் மயங்காத பெண் பிள்ளைகளும் இந்த நவநாகரிக உலகில் உண்டா? எனவே திரு ஆர். எஸ். ராஜாவின் புகழ் வலையில் விழுகிற மாணவி — பலவீனமான மனமுள்ளவளாயிருந்தால் அடுத்த சில நாட்களில் அவனோடு ஏதாவது ஒரு சினிமாத் தியேட்டரில் ஒரு மாட்டினி ஷோவில் அவளையும் சேர்த்துப் பார்க்கலாம்.

திரு ஆர்.எஸ். ராஜாவுக்கு மெடிகல் காலேஜில் பிராக்டிகல்—தியரி என்று மாற்றி மாற்றி உயிரை எடுக்கும் வைத்திய சாஸ்திர வகுப்புக்களிலே சொல்லிக் கொடுக்கப்படுகிற கனமான விஷயங்களைத் தவிர வெளி உலகிலுள்ள மற்ற எல்லா விஷயங்களும்தான் நன்றாகப் பிடிபட்டன. பெர்ரி மாஸன், குவாடிஸ் ஹஸ்ஸிம், புதுப் புதுத் திரைப்படங்கள், அவ்வப்போது அருகில் வந்து நெருங்கிப் பழகியதும் சலித்துப்போகிற 'கேர்ல் ஃப்ரெண்டு'கள் நல்ல கோல்ட் ஃபிளேக் சிகரெட், பாய் மீட்ஸ் கேர்ல் கதைகள் இவற்றில் எல்லாம் சுவை இருந்த மாதிரி மெடிகல் காலேஜின் படிப்பில் அவனுக்குச் சுவை தெரியவில்லை. காரணம் ஒழுக்கமும், உழைப்பின் சிரமமும் தெரியாத ஒரு பணக்கார அப்பாவின் ஒரே ஒரு பணக்காரப் பிள்ளையாகப் பிறந்துவிட்ட அவனை மூப்புப் பிணி சாக்காடு அறியாதபடி ''புத்தரை'' வளர்த்தது போல் — படிப்பு, ஒழுக்கம், உழைப்பின் மகிமை அறியாத கோவில் காளையாக அவன் பெற்றோர் வளர்த்து விட்டதுதான். புத்தி ஒன்றாவது ஏழையின் சொத்தாக இருப்பதற்கும் பணக்காரர்கள் மீதம் விட்டிருக்கிறார்களே என்பது தான் திரு ஆர். எஸ். ராஜாவைப் பார்த்து மற்ற ஏழை மாணவர்கள் பெருமைப்பட மீதமிருந்த ஒரே ஒரு விஷயம்.

பேராசிரியர்கள், விரிவுரையாளர்கள் அவனைக் கடிந்து கொண்டு ஒன்றும் சொல்வதில்லை — சொல்லவும் முடியாது. லைப்ரரி புத்தகத்தில் அல்லது நாவல் புத்தகத்தில் காதல் கடிதம் எழுதி வைத்து மாணவிகளிடம் கொடுப்பது. அதே போல் மடிப்புக் காகிதம் சொருகி வைத்து மாணவிகளைச் சினிமாவுக்கு அழைப்பது போன்ற காரியங்கள் அவனுடைய அன்றாடக் கல்லூரி வாழ்நாளில் சர்வ சகஜமாக நிகழ்பவை. அவன் தன்னைக் கவர்கிற கல்லூரி மான்களுக்கு விரிக்கிற முதல் வலை நேரிடையாகப் புகழ்வது. அல்லது புத்தகங்களில் கடிதம் வைத்துக் கொடுப்பதுதான். பெரும்பாலும் இந்த வலைகளில் மான்கள் விழுவதுண்டு. அபூர்வமாக விழாமல் போவதும் உண்டு. கால் பொறுத்துத் தயங்கித் தயங்கி விலகிப்போய்ப் பின்னும் நிதானமாக வந்து விழுகிற மான்களும் உண்டு. வலையை அறுக்கிற அவ வன்மையான முரட்டு மான்கள் அவனிடம் இதுவரை எதிர்ப்பட்டதே யில்லை.

அந்த வருடம் முதலாண்டு எம். பி. பி. எஸ்.ஸில் சேர்ந்திருக்கிற புள்ளி மான் ஒன்றிற்குக் குறிவைத்து ஆர். எஸ். ராஜா வீசிய வலைகள் எல்லாம் கடந்த ஆறு மாதகாலமாகத் தப்பிக் கொண்டே இருந்தன. அந்தப் புள்ளி மானின் பெயர் மனோரஞ்சிதம். வயது — அதைப் பதினேழு என்றோ பதினெட்டு என்றோ நம்பரில் சொல்வதைவிட — 'இளமை மெருகேறி நகை புரியும் இன்ப வாலிபம்' என்று இப்படிப் பாஷையால் சொல்வதுதான் சாலப் பொருந்தும்.

மனோரஞ்சிதத்தின் நடை, உடை, புன்னகை, பேச்சு, குரல், சரீர வாளிப்பு, எல்லாவற்றையும் பார்த்துப் பார்த்து நமது கதாநாயகனான திரு ஆர். எஸ். ராஜா நாளுக்கு நாள் உருகிக் கொண்டிருந்தான். கடைசியில் அந்த உருக்கத்துக்கும் தவிப்புக்கும் இப்போது வழி பிறந்துவிட்டது.

அவன் புத்தகங்களில் சொருகிச் சொருகி அனுப்பிய காதல் கடிதங்களுக்கும், நேரில் குழைந்து குழைந்து பேச முயன்ற காதல் மொழிகளுக்கும் செவி சாய்க்காமல் மில்லியன் டாலர் பெறுகிற ஒரு மயக்கும் புன்னகையை மட்டும் உதிர்த்துவிட்டு அலட்சியமாகப் போய்க் கொண்டிருந்த மனோரஞ்சிதப் புள்ளிமான் கடைசியில் அவனைச் சந்திப்பதற்கு ஆறுமுகம் பூங்காவைத் தேடி வருவதாக இப்போது இப்படி ஒப்புக்கொண்டு விட்டது. அவன் இந்த மனோரஞ்சித மானுக்கு எழுதிய கடைசிக் கடிதத்தில் அவள் புகைப்படம் ஒன்றைக் கேட்டு வைத்திருந்தான். ஒரு வேளை அவள் புகைப்படத்தோடு வந்தாலும் வரலாம் என்ற எண்ணம் ஞாபகம் வரவே அவளிடம் கொடுப்பதற்குத் தன்னுடைய புகைப்படம் ஒன்றையும் உடனே தயார் செய்து எடுத்து வைத்துக்கொண்டான் திரு ஆர். எஸ். ராஜா. அன்று அவனுடைய நினைவில் ஆறுமுகம் பூங்காவும் சாயங்காலம் ஆறு மணியும் அங்கு தன்னைச் சந்திக்க வரப்போகும் மனோரஞ்சித மானைப் பற்றியுமே எண்ணங்கள் மோதிச் சுழன்று கொண்டிருந்தன.

'ஏ! ஆர். எஸ். ராஜா! உனக்கு மற்றவர்களை வளைக்க வேறு வலை எதற்கடா? நீயே மற்றவர்களை வீசிப் பிடிக்கும் ஒரு பெரிய வலையாயிற்றே!'

இது நிற்க. 'ஆறுமுகம் பூங்கா'வைப் பற்றி இங்கு சில வார்த்தைகள் அவசியம் சொல்லியாக வேண்டும். அந்த மெடிகல்

லேஜ் கட்டிடங்களின் வலது பக்கத்தில் ங்கள் நூறாண்டுக்கும் மாணவர்கள் ாண்டுக்கும் பின்புறமாக உள்ள சந்து ரிவைக் கடந்து பத்தடி நடந்தால் ரே தென்படும் இந்தப் பெரிய பூங்காவின் க்கியத்துவம் அந்தக் கல்லூரியின் ஒவ்வொரு ாணவனுக்கும் தெரியும். அந்தக் காலேஜின் வ் மியூஸியம்' அல்லது 'லவ்வர்ஸ் ர்க்' இதுதான். அந்த நகரில் எந்தக் காலத் லோ முனிசிபல் சேர்மனாக இருந்து றந்துவிட்ட யாரோ ஓர் ஆறுமுகத்தின் யரை இந்தப் பூங்காவுக்கு வைத்திருந் ார்கள். வகுப்புகளுக்கு மட்டம் போடுகிற ாணவர்கள் போய் உட்கார்ந்து மற்ற ாணவ மாணவிகளிடம் அரட்டை அடிக்கிற டமும் இந்த ஆறுமுகம் பூங்காதான். சில ட்களில் வகுப்புகளிலே அட்டெண்டன்ஸ் றையும்படி பிரஸெண்ட் போட வேண்டு ாலும் ரிஜிஸ்தரை இந்தப் பூங்காவுக்கே டுத்து வந்துவிட வேண்டும் போல நிலைமை வ்வளவு மோசமாகிவிடும். சுருக்கமாகச் சால்ல வேண்டுமானால் ஆறுமுகம் பூங்கா ந்த மெடிகல் காலேஜின் பிருந்தாவன ாக இருந்தது. மாணவர்களாகிய கோபா ர்கள் கோபிகைகளே(?) நாடும் கலியுக ருந்தாவனமாக ஆறுமுகம் பூங்கா விளங்கி ந்தது என்று வேண்டுமானாலும் இன்னும் தனிவாக வைத்துக் கொள்ளுங்களேன்.

அன்று ஒரு வெள்ளிக் கிழமை. மேற்படி பயோக கடிகாரத்தில் சரியாகச் சாயங் ாலம் ஆறு மணிக்குப் படிய வாரிவிட்ட லையும் நன்றாக டிரஸ் செய்துகொண் ருந்த தோற்றமுமாக ஒரு காதல் கதாநாயக னுக்குரிய சகல லட்சணங்களுடனும் ஆறு கம் பூங்காவின் தென் திசைக் கோடியில் யமன் திசையில்) பிரவேசித்தான் நமது கதா ாயகனாகிய திரு ஆர். எஸ். ராஜா. மிஸ் னோரஞ்சிதம் அங்கே அவனை எதிர்பார்த்துத் யாராகக் காத்திருந்தாள். மஞ்சள் வாயில் டவையும் நீலப் பட்டு ரவிக்கையும் ரோஸ் ாவணியுமாக மனோரஞ்சிதம் அன்று பிர ாதமாக டிரஸ் செய்துகொண்டு வந்திருந் ாள். அவளுடைய 'மில்லியன் டாலர் ஸ்மை' ாகிய அந்தக் கவர்ச்சிக் குறுநகை அவனை வரவேற்றது. அவளருகே ஒட்டினாற்போல் அமர்ந்துகொண்டு,

''ஓ! யூ ஆர் லுக்கிங் வெரி நைஸ் டுடே... ஸோ ப்யூட்டிஃபுல்...'' என்று வழக்கம் போலவே கம்பீரமாக ஆரம்பித்தான் திரு ஆர். எஸ். ராஜா. அவள் அதை அவ்வளவு சுவாரஸ்யமாகவோ இலட்சியம் செய்தோ கேட்காவிட்டாலும் போலியாக நாணுவது போல நடித்தாள். கையில் கொண்டு வந்திருந்த சிறிய காகித உறையைப் பிரித்துத் தன்னுடைய புகைப்படத்தை அவள் புல் தரையில் மௌனமாகச் சிரித்துக் கொண்டே எதிரே எடுத்து வைத்தவுடன் — தனக்காகத் தான் அவள் அதைக் கொடுக்கிறாள் என்று எண்ணிக் கொண்ட அசட்டு ஆர். எஸ். ராஜா உடனே தன்னுடைய சட்டைப் பையிலிருந்து தனது புகைப்படத்தை எடுத்து அவள் படத்துக்குப் பதிலாக மாற்றிக் கொள்வது போல் புல் தரையில் எதிரே வைத்தான். அவள் தன் படத்தை எடுத்து எதிரே வைத்ததைப் பார்த்ததும் அவள் பொறுக்க முடியாமல் கொல்லென்று சிரித்துவிட்டாள்.

ஆ! அது ஒரு ஐம்பது மில்லியன் டாலர் பெறுகிற சிரிப்பாக இருந்தது.

''என்ன மிஸ்டர் ராஜா விளையாடுகிறீர்களா நீங்கள்? வருகிற மாதம் நம் மாணவர் யூனியனிலிருந்து க்ஷயரோக நிவாரண நிதிக்காக வெளியிடப் போகிற சிறப்பு மலருக்குக் கட்டுரை கொடுப்பவர்களும், புகைப்படம் கொடுப்பவர்களும் உங்களிடமே தரவேண்டுமென்று முந்தாநாள் சர்க்குலர் வந்ததே? நீங்களே அதை மறந்துவிட்டீர்களா? நாங்களெல்லோருமே உங்களிடம் படத்தைக் கொடுக்க வேண்டியிருக்க நீங்கள் உங்களது படத்தை என்னிடம் கொடுத்து என்ன ஆகப்போகிறது? இரண்டு படமும் உங்களிடமே இருக்கட்டும்.''

இதைக் கேட்டதும் ஆர். எஸ். ராஜாவின் முகத்தில் நிச்சயமாக அசடு வழிந்தது. தன்னுடைய நூற்றுக்கு நூறு சத விகித ஏமாற்றத்தை வெளிக்காட்டிக் கொள்ளாமல்,

''மலரில் வெளியிட 'பிளாக்' எடுத்ததும் உங்களது இந்தப் படத்தை நானே வைத்துக் கொள்ளப் போகிறேன், மிஸ் மனோரஞ்சிதம்!'' என்றான் திரு ஆர். எஸ். ராஜா.

''ஓ! பேஷாக வைத்துக் கொள்ளுங்கள் மிஸ்டர் ராஜா! இதோ இப்பொழுதே படத்தின் பின்புறம் உங்களுக்கென்று எழுதிக் கையெழுத்துகூடப் போட்டுத் தந்துவிடுகிறேன்'' என்று கூறியபடியே அந்தப் படத்தை எடுத்து, 'அருமைச் சகோதரர்—மாணவ நண்பர் திரு ஆர். எஸ். ராஜா அவர்களுக்கு என் நினைவாக' என்று எழுதிச் சிரித்துக்கொண்டே அவள் கையெழுத்திட்டபோது ஆர். எஸ். ராஜாவின் முகத்தில் அசடு மாறித் தீர்மானமாக அரை லிட்டர் அளவிலே வழிந்தது.



''பரவாயில்லே மனோரஞ்சிதம்! உங்களது படத்தை நான் உங்கள் ஞாபகமாக வைத்துக் கொள்வது போல் என் ஞாபகமாக நீங்கள் எனது இந்தப் படத்தையாவது வைத்துக் கொள்ளலாம்'' என்று அவன் தன் படத்தை எடுத்து அவளிடம் நீட்டியபோது,

''நோ! நோ! வெறும் படத்தைச் சும்மா கொடுத்தால் எப்படியாம்? ஏதாவது எழுதிக் கையெழுத்துப் போட்டுக் கொடுத்தால்தான் நல்லது. இதோ நானே உங்கள் படத்தின் பின்புறம் எழுதுகிறேன். நீங்கள் கையெழுத்து மட்டுமாவது போட்டுக் கொடுங்கள்'' என்று சொல்லி மூன்றாவது முறையாகவும் ஒரு ''பில்லியன் டாலர் ஸ்மைலை'' உதிர்த்து விட்டு 'என் உடன் பிறவாச் சகோதரி அருமைத் தங்கை மனோரஞ்சிதத்துக்கு என் பாசத்தின் நினைவாக' என்று எழுதி — அப்படி எழுதியதைக் கையால் மறைத்துக் கொண்டு ''ப்ளீஸ்! இங்கே கீழே ஒரு கையெழுத்து மட்டும் போடுங்க'' என்றதும் ஆர். எஸ். ராஜா அவள் காட்டிய இடத்தில் உடனே கையெழுத்துப் போட்டு விட்டான். தேதியும் போடச் சொல்லிவிட்டு மற்றொரு பில்லியன் டாலர் ஸ்மைலை அவள் உதிர்த்தாள். ஆர். எஸ். ராஜா தேதியும் போட்டுக் கொடுத்தபிறகுதான் அவள் மேலே மறைத்திருந்த தன் கையை எடுத்தாள். 'உடன்பிறவாச் சகோதரி மனோரஞ்சிதத்துக்கு என்பது போல அங்கு எழுதியிருந்ததைப் பார்த்தவுடனே ஆர். எஸ். ராஜாவின் முகத்தில் இன்னும் அரை லிட்டர் அசடு அதிகமாக வழிந்தது. ஆர். எஸ். ராஜா முயற்சி திருவினை ஆக்குவதில் இப்போது இறுதியாக நம்பிக்கை இழந்தான். அந்தோ! அவனுக்கு உங்கள் அநுதாபங்கள் தேவை!

இப்போது அவள் தொடங்கினாள். ''பை தி பை...மிஸ்டர் ஆர். எஸ். ராஜா! நான் இன்னிக்கு உங்களை இங்கே சந்திக்க வந்ததே ஒரு முக்கியமான காரியமாகத்தான். அதை மறந்தே போயிட்டேனே.... பேரண்ட்ஸ்...கிட்ட இருந்து மணியார்டர் இன்னும் வரல்லே. ஹாஸ்டல் பீஸ் கட்டணும்.... ஷாப்பிங் வேறே இருக்கு. ஒரு நூறு ரூபாய் பணம் அவசரமா வேணுமே... உங்களுக்கு ரொம்ப இளகின மனசுன்னு எல்லாருமே சொல்லிக் கேள்விப்பட்டிருக்கேன். நீங்க அவசியம் இப்பவே தந்துதான் ஆகணும். ஒன் வீக்கிலே திரும்பத் தந்துடுவேன்.''

உடனே ஆர். எஸ். ராஜா தன் சட்டைப் பையிலிருந்து நல்ல சலவை நோட்டுக்களாகப் பத்துப் பத்து ரூபாய் நோட்டுக்களை எடுத்து எண்ணி அவளிடம் கொடுத்தான். அவள் அதை வாங்கிக் கொண்டு ஒரு பில்லியன் டாலர் ஸ்மைலை நாலாவது தடவையாக உதிர்த்து விட்டு ''அவோ! சுந்தர கேசிப் பதுமையே கேளும்!'' என்கிற விக்கிரமாதித்தன் கதைப் பாணியில் அவனைக் கோபத்தோடு விளித்துப் புகல்வாள்:

''மிஸ்டர் ராஜா...! நன்றாகக் கேட்டுக் கொள்ளும்! இனிமேல் நீர் யாரிடமாவது என்னைக் காதலிப்பதாகப் பேசிக் கொண்டு திரிந்தாலோ, எனக்கே புத்தகத்தில் கடிதம் வைத்துக் கொடுத்தாலோ, இந்தப் போட்டோவில் 'உடன் பிறவாச் சகோதரிக்கு' என்று நீரே எழுதிக் கையெழுத்திட்டிருப்பதைக் காண்பித்து உம்முடைய மானத்தை வாங்கி விடுவேன். அப்புறம் மரியாதை தவறிவிடும். என்ன என்று நினைத்துக் கொண்டிருக்கிறீர் நீர்? கண்ட கண்ட இடத்தில் எதிரே வந்து நின்று பல்லை இளிப்பது குறைவதும் கொஞ்சம் கூட நன்றாயில்லை! நாங்களெல்லாம் படிப்பதற்காக ஆயி- ரொரிக பிடித்து அலைந்து மெடிகல் காலேஜ் அட்மிஷனுக்கு வழி செய்துகொண்டு ப- மிகச் சிரமப்பட்டு இங்கே வந்திருக்கிறோம். உம்மைப் போன்ற சோம்பேறிகளைக் காதல் பதை விட எத்தனையோ முக்கியமான காரியங்களெல்லாம் எங்களுக்கு இருக்கின்றன.

திரு ஆர். எஸ். ராஜாவுக்கு ஒரே அதிர்ச்சி! அவன் வழக்கம் போல் மானுக்கு வலை விரித்தான். வழக்கமில்லாத அபூர்வமாக அதில் ஒரு புலிக்குட்டி வந்து விழுவது போல் விழுந்து அவனையும் அவன் வலையையும் சேர்த்தே கடித்துக் குதறி எறிந்து விட்டது.

''ரெண்டு மூணு தமிழ்ச் சினிமாப் படத்திலே வர்ர காதல் சீனைப் பார்த்துவிட்டு அஞ்சாறு தமிழ்ப் பத்திரிகைகளிலே வர்ர 'பாய் மீட்ஸ் கேர்ல்' கதைகளைப் படிச்சிப்பிட்டு இனிமேலாவது இப்படி அடாகத் திரியாதீங்க மிஸ்டர் ஆர். எஸ். ராஜா!'' என்று கடைசியாக அவள் இரைந்து சாடி விட்டுப் புயலாக எழுந்து விரைந்தபோது நமது கதாநாயகனான ஆர். எஸ். ராஜா ஆறுமுகம் பூங்காவில் புல் தரையில் நிராதரவாகக் கிடந்தான்.

'அவன் விரிப்பதற்குத் தனி வலை தேவையில்லை. அவனே ஒரு பெரிய வலை' என்ற அவனது ஆதிகாலத்து ஒரிஜினல் புகழ் - அன்றுடன் காணாமற் ஆனது போல் பாவித்துக்கொண்டு காதல் போர்க்களத்தில் தோற்ற தோல்வியைக் கொண்டாடு முகத்தான் அன்றிரவே ஒரு முழுப் பெர்ரி மாஸனையும்— இருபது 'பாய் மீட்ஸ் கேர்ல்' கதைகளையும் ஒரே மூச்சில் படித்துவிட்டு அப்புறம் நம் திரு ஆர். எஸ். ராஜா தூங்க முயன்ற சமயத்தில் இந்த உலகத்தில் பொழுது விடிந்திருந்தது! பாவம்! அதனால் என்ன? விடிந்தால் தூங்கக் கூடாதென்று யார் சொன்னது? இரவில் தூங்காமல் இருப்பதற்கு நம் ஆர். எஸ். ராஜாவுக்கு எவ்வளவு உரிமை உண்டோ அவ்வளவுக்குப் பகலில் தூங்குவதற்கும் உரிமை உண்டு. ''காலேஜ்' என்ன ஆகிறது? படிப்பு என்ன ஆகிறது?'' என்று நீங்கள் கேட்கிறீர்களா? அதற்காகவா நம் ராஜா இங்கு வந்திருக்கிறான்? பெர்ரி மாஸன் குவாலிடி ஐஸ் கிரீம், கோல்ட் பிளேக் சிகரெட் 'பாய் மீட்ஸ் கேர்ல் கதைப் புத்தகங்கள், கேர்ல் ஃப்ரண்ட்ஸ், மாட்னி ஷோ — இப்படி எவ்வளவோ இருக்கும்போது படிப்பு ஒன்றை மட்டும் கட்டிக்கொண்டு அழ யாரால் முடியும்? யாரால் முடிந்தாலும் நம் திரு ஆர். எஸ். ராஜாவினால் நிச்சயமாக முடியாது. நம் ஆர். எஸ். ராஜாவுக்கு அந்தத் தாகமெல்லாம் வருவதற்குக் குறைந்த பட்சம் அவன் சோற்றுக்கு லாட்டரி அடிக்கிற ஏதாவதொரு ஏழைக் குடும்பத்திலாவது பிள்ளையாகப் பிறந்திருக்க வேண்டுமோ என்னவோ?



1788
THE E.I.D. PARRY GROUP
1964

# தாமஸ் பாரி கட்டிய வீடு

1788ல் ஒர் சிறிய வர்த்தகக் கம்பெனியாக ஸ்தாபிக்கப்பட்ட பாரீஸ் நம் நாட்டிற்கு 176 ஆண்டுகளாக சீரிய முறையில் நற்பணி புரிந்துள்ளது. கடந்த ஒன்றேமுக்கால் நூற்றாண்டு காலத்தில் அது அடைந்த ஆச்சரியகரமான முன்னேற்றத்தின் பயனாக ஏற்பட்டுள்ளதுதான் இன்றைய இ. ஐ. டி. – பாரி குரூப். தேசத்தின் பொருளாதாரத் துறையில் மிக முக்கியப் பங்குகொண்டுள்ள ஒன்பது கம்பெனிகள் இதில் இணைந்துள்ளன.

சீரிய முறையில் ஸ்திரமான வளர்ச்சியடைந்த நிலையில் தன்னுடன் இணைந்துள்ள இதர கம்பெனிகளுக்கு, தேசத்தின் வளர்ச்சிக்கு மிக்க அத்தியாவசியமான ரசாயன உரங்கள், சர்க்கரை, மிட்டாய் தினுசுகள் ஸானிடரி சாமான்கள், ஆனிட்ஸ், கெமிகல்ஸ், தொழிற்துறைகளுக்கான ஆல்க்கால் போன்றவைகளின் தேவைகளைப் பூர்த்திசெய்வதோடு தனது ஸ்தாபனத்தை அபிவிருத்தி செய்வதில் ஊக்கமும் தன்னம்பிக்கையும் அளிக்கிறது.

## இ. ஐ. டி. – பாரி குரூப், மதராஸ்

**தேசத்தின் பாதுகாப்புப் பணியில் உங்கள் கடமையைச் செய்யுங்கள்**



"**நா**ன் வரேன், மாமி! கட்டாயம் உங்களை எங்கம்மா வரச் சொன்னாள்." கண்டல் பை ஆட, பட்டுப் பாவாடை சலசலக்கக் குதித்தோடினாள் அந்தச் சிறுமி. ராதை வேஷத்துக்காக அவள் அணிந்திருந்த தாவணி நழுவி நழுவிக் கீழே விழுந்தது.

"ஒரு பத்து நிமிஷம் மாமாவைக் காவல் வச்சுட்டு நீங்கள் வந்து வெற்றிலே சீவல் வாங்கிக்கொண்டு விடலாம்..." கிருஷ்ணன் வேஷக்காரி புல்லாங்குழலாக நடித்த கோலாட்டக் குச்சியை இடுப்பில் செருகிக் கொண்டு வழிந்த பின் தலையை ஒதுக்கி விட்டபடி 'ஜல் ஜல்'லென்று கொலுசு நர்த்தனமிட நகர்ந்தாள். தெருக் கோடியில் அவர்கள் மறையும் வரை பார்த்துக் கொண்டு நின்றாள் பார்வதி. கடைசியாக ஒரு முறை திரும்பினார் 'கிருஷ்ணர்'! அருள் வழியும் புன்னகை; உதடு விரிந்து கண்கள் இடுங்கின. மருதாணி பூசிய விரல்கள் 'டாட்டா' என்று அபிநயித்தன. சிறுமிகள் சென்று விட்டனர்.

கூடத்துக்குத் திரும்பினாள் பார்வதி. பொம்மைகளாக நின்ற வளைக் கொலுவும், வாரி இறைந்த சுண்டலும், சூன்யமாக விரிந்து கிடந்த ஜமுக்காளமும் தவிர அந்த இடம் வெறுமையாகவே காட்சி தந்தது. அதன் நடுவே ஒற்றை மரம் போல் நின்றாள் பார்வதி. அவளுக்கே வெட்கமாக இருந்தது. என்ன கொலு வேண்டி கிடக்கிறது! அறியாக் குழந்தை தானே செப்பு வைத்து விளையாடுவது போல் தானே படி கட்டி, பொம்மைகளைப் பரப்பி, ஊர் அழைத்து விநியோகம் செய்து, பின் உள்ளே சுருட்டி எடுத்து வைப்பதுமாக ஒவ்வொரு வருஷமும் இதே காரியம்! பழக்கத்தை நிறுத்தவும் மனமில்லை; தொடர்ந்து நடத்தவும் உற்சாகமில்லை! வீட்டில் ஒரு பெண் குழந்தை மட்டும் இருந்தால்? அதைச் சிங்காரித்து அழகுபடுத்துவதும் திரும்பி வந்ததும் அது தனது சின்ன வாயால் ஊர்க் கதைகள் பேசுவதும், அதன் இஷ்டப்படி கொலுவை அழகு படுத்துவதும்... ...ம் இந்த ஜன்மத்தில் அந்தப் பாக்கியம் உண்டா?

'ஏன், இல்லையா?... அதுவும் இந்த ஜன்மம்தானே!' ஆத்திரத்தை அடக்க முடியாத உள் மனம் சட்டென்று கேட்டது.

பார்வதி ஒரு கணம் திகைத்தாள். உடல் வேர்த்தது. தன்னிடமிருந்து ஏதோ பிரிந்து பறந்து கைக்கெட்டாது போய்விட்டது போலத் திடீரென்று ஒரு சோர்வு பற்றியது. சுருண்டு உட்கார்ந்தாள் அவள். 'இந்த ஜன்மமா? அதுவும் இந்த ஜன்மத்தில் நடந்ததுதானா? பெண்ணென்று பிறந்தது இப் பிறவியில்தான். அதை இழந்ததும் இந்த ஜன்மத்தில்தான். ஆனால் இந்தப் பார்வதிதானா?

பார்வதி புடவைத் தலைப்பால் முகத்தைத் துடைத்துக் கொண்டாள். தலைப்பின் ஜரிகை கன்னத்தை வருடியது. கன்னத்தை வருடிய பிஞ்சுக் கரத்தை ஒதுக்கிப் பிரித்த

போது ஏற்படாத வேதனை நீ
போது குத்தியது.

**ப**தினைந்து வருடங்களும்
முன்பு....

நவராத்திரியின் அழகு தெ
வெல்லாம் ஒளி வீசிக் கொண்
ருந்தது. 'அகிலாசம்' பங்கள
வின் எஜமானி பட்டுப் புடை
பளபளக்க, வைர நெக்லெ
வண்ண ஒளி சிந்த, புன்னகை,
பொன்னகையும் போட்டியிட்
அழகூட்டும் தன் பிம்பத்தை ஒ
முறை கண்ணாடியில் அழ
பார்த்து விட்டு வெளியே பு
படத் தயாரானாள். முன்னை
யைத் தாண்டும் வேளையி
எதிரே ஓடி வந்த அந்தச் சிறு
அவள் மீது மோதாமல் 'சட
பிரேக்' போட்டது போ
திகைத்து நின்றாள்.

"யாரடி.... அது....நீ...?
"மாமி.... எங்க அம்ப
இல்லையா? இங்கேதானே சன
யல்காரியாக.......-" குழந்தை
குழறியது.

எஜமானி அம்மாள் குழந்தை
யையே விழியிமைக்காது நோ
கினாள். சமையல்காரிக்குஇத்த
அழகான குழந்தையா? தேய்த்
வைத்த குத்து விளக்குப்போ
பள பளப்பும் வைஷ்ணமுப
விளக்குக்கு அழகூட்டி எரியு
தீபச் சுடர் போல் குழந்தைக்கு
செல்வத்தின் மெருகு சே
தால்.....அடேயப்பா ராஜாத்
தான் !

"உங்கம்மா உள்ளே இரு
கிறாள். பாப்பா, நீ இங்
வாயேன், ஒரு நிமிஷம்...."
குழந்தையைத் தன் அறைக்கு
பரபரப்புடன் இழுத்துச் செ
றாள் ராதா. அவசரம் அவச
மாகப் பீரோவைத் திறந்
அவள் கரங்கள் என்றோ அவ
கண்ணெடுத்தும் காணச் ச
யாது அடியில் தூக்கிப் போட
டிருந்த—காலம் சென்ற அவ
பெண்ணினுடைய — பட்டு
பாவாடையைத் தேடி எடு
தன. அடுத்த பத்து நிமிஷ
களில் ராதாவின் குழந்தை உ
பெற்று நின்றாள். பட்டு
பாவாடை,காதிலும் கழுத்திலு
நகைகள், தங்கக் குமிழ் வைத்த
குஞ்சலம் தொங்கிய சடையில்
சற்று முன், லக்ஷ்மி படத்தை
அலங்கரித்த மலர்க் கொத்து.
ராதா குழந்தையை வா
எடுத்து அணைத்தாள். "என்
கண்ணே, ராஜாத்தி!" என்
அடி வயிற்றிலிருந்து தாய்மை
பொங்கியது...

எஜமானி வெளியே சென்று விட்டாளா ஏறு பார்க்க முன்புறம் வந்த சமையல்காரி, தா அரவம் கேட்டு, வழக்கம் போல் ரா உள்ள அறை பூட்டாதது கண்டு, க்கத்துடன் அங்கே சென்ற போது..... ந்தக் காட்சி கண்டு ஒரு கணம் திகைத்து ாளுள்! எஜமானியின் அணைப்பில் இருப் ு தன் மகள்தான் என்று உணரவே அவ க்குச் சில விநாடிகள் தேவைப்பட்டன.

''அடடா ! இதென்னம்மா.....''

ராதா தலை நிமிர்ந்தாள். மறுகணம் ஞ்சைக் காக்கும் கோழி போல் அவள் மகள் ராஜியைத் தன்னுடன் இழுத்தணைத் ள. ''மாமி.... இவளை.... மாமி....'' மேல வார்த்தை எழும்பவில்லை. சொல்லின் கத்தை விடச் சில சமயம் கண்ணீருக்குச் க்தி அதிகம்.

அன்று ராஜி 'ஜம்'மென்று ராதா டன் காரில் அமர்ந்து மஞ்சள் ங்குமத்துக்குச் சென்ற போது ந்த ஏழைத் தாய்க்குச் சொல்லத் தரியாத உணர்வொன்று நெஞ்சை டைத்தது. இது எதன் சூசகம்? ல்லதா, கெட்டதா? அன்று இரவு வீட்டுக்குத் திரும்பும்போது, வந்தமேனிக்குத் திரும்பும் தன் மகளை இழுத்து 'மார்போடு அணைத்துத் தூக்கியபடி தான் நடந்தாள் அந்தத் தாய். ''இவள் என் மகள். இது வரை எங்கோ நடமாடச் சென்றுள். எனக்கே சொந்தமவள்......'' பன்முறை அவள் நெஞ்சு புலம்பியது.

ஆனுல் அந்தக் குழந்தை?

விதம் விதமான பட்டாடைகளும், நகைகளும் வாசனைத் திரவியங்களும் பிஞ்சு நெஞ்சில் வித்தை பல புரிந்தன. புது வித அன்பும் அரவணைப்பும் விந்தை பல காட்டின!

அக்கம்பக்கத்துக்காரர்கள் தினம் ராஜி ராதாவுடன் அலங்காரப் பொம்மையாக ஊர்வலம் வருவதையும், ராதா 'என் மகள் பிழைத்து விட்டாள்' என்று கொஞ்சுவதை



யும் பத்திப் பலப் பல வம்புகள் பேசும்போது பெற்றவள் அதை லட்சியம் செய்யவில்லை ! ஆனால் கடைசியில்.....

அந்த நாள்..... ஏழைத் தாயார் எதிர் பார்த்துப் பயந்தும்...., அப்படியிராது என்று தானே சமாதானப்படுத்திக் கொள்வதுமாக இருந்த பிரச்னைக்கு முடிவு கட்டும் அந்தக் கேள்வி, அந்தக் கேலிக்கை நிஜமாகவே ராதா விடமிருந்து வந்துவிட்டது அந்த நாளில் !

''மாமி.... ராஜி.... என் வயிற்றில் பிறந்து, இந்த மண்ணில் புதைந்து போன என் மகளாகவே தோன்றுகிறாள். உங்களுக் கும் இன்னும் பல குழந்தைகள் இருக்கின்றன. அதனால் மாமி.... நான் மடிப் பிச்சை கேட் கிறேன். ராஜியைச் சட்டப்படி, சாஸ்திரப் படி எனக்குப் பிச்சையிடுங்கள், மாமி. அதனால் அவளை அபகரித்து விட மாட்டேன், முழுமையாக. ஆனால்...'' ராதா விம்மினாள்.

ராஜியைப் பெற்றவள் சமையல்காரி தான். ஆனால் அவளும் ஒரு தாய்! ஏழு குழந்தைகள் உள்ள போது எட்டாவது பார மாகி விடுமா? 'அவளுக்குக் குழந்தை பார மல்லதான். ஆனால் அந்தக் குழந்தைக்குச் சுகம் எங்கே?' என்ற உண்மையை உணர்த்தக் கணவனின் அறிவுரைகள் தேவையாக இருந்தன.

''அம்மா, எட்டாவது குழந்தை பாரமல்ல என்பதுபோல பெரியவளான நானும் உனக் குப் பாரமல்லதான்..... ஆனால் கன்னிப் பருவம் எய்தி விட்ட எனக்குச் சுகம் எங்கே? அதற்கு வழி எங்கே?'' என்று கேட்டுத் தன் மனத்துக்குள் ராதாவின் யோசனையால் தனக்கு மோக்ஷம் பிறக்காதா என்பது போல் நோக்கினாள் மூத்த பெண்.

''எத்தனையோ பேர் உறவிலும் வெளியி லும் தம் பெண்களுடன் தவம் கிடக்கும் போது ராதா உன் பெண்ணைத் தேர்ந்தெடுத் தது உனக்குக் கசக்கிறதா?....'' என்று கேட்டன ஊரும் உலகமும்.

எல்லாவற்றையும்விட ராதாவும் ஒரு தாய். ஒன்றைப் பெற்று அதையும் இழந்து விட்டுத் துடிக்கும் வயிற்றுடன், எட்டு பெற்று விட்ட தன்னிடம் தாய்மையைப் பிச்சை கேட்கிறாள் என்ற உள்ளுணர்வு பெண் மனத் துக்கே புரியும் அந்த இரகசிய ஏக்கத்தை உணர்த்தியது.

கடைசியில் எப்படியோ அது நடந்து விட்டது. ராதா — கோபாலன் தம்பதி ராஜி யின் பெற்றோராயினர். ராஜி விவரம் புரியா மலே ராஜாத்தியானாள். விஷயங்களின் உட் கருத்தை, பலாபலன்களை உணரும் பருவம் அல்ல அது. பகட்டுக் கண்ட இடத்தில் பட்டாம்பூச்சியாகப் பறக்கும் பச்சைக் குழந்தை அவள்.'

அதன்பின் சமையல்காரியாக அவள் அன்னை அந்த வீட்டுக்குள் நுழையவில்லை. கொஞ்ச நாட்கள் அது பற்றி ஏதேதோ கேட் டாள் குழந்தை. அதற்கு ராதா, ''உன் அக்காவுக்கு மாப்பிள்ளை தேடப் போயிருக் கிறார்கள் உன் தாய் தந்தையர். வெகு நாட்கள் ஆகும் வர'' என்று கூறிக் கொஞ்சம் கொஞ்சமாகக் குழந்தையின் மனத்தை மாற்றி விட்டாள்.

ஆனால் வறுமையினால், தன் கடமைப் ஆற்றப் பணத்துக்காகவோ....: அல் குழந்தையின் நல்ல வருங்காலத்துக்காகவே அதைச் செய்து விட்டதாக மனம் அமை அடைந்து விடவில்லை. யாக தர்மத்தை காக்க மகனைத் தந்தார் தசரதன். குடும்ப தில் தன் பெரிய கடமை ஒன்றைக் காக் தன் மகளைத் தந்தாள் அந்தத் தாய்! ஆ பெற்ற வயிற்றின் அடியில் அந்தப் பா ஒரு பொறியாக மேலுக்கு நீர்த்து உள்ளே கனன்று கொண்டேதான் இருந்தது. அ அவளைச் சாம்பலாக்கித்தான் அவியுமோ?

''பார்வதி.... பார்வதி..... இதென் ருத்து விளக்கு மலை ஏறப் போகிறது...ஆரத் எடுக்காமல் தூங்குகிறாயா? இதென்ன பு பொம்மை உடைந்து கிடக்கிறது...?'' அ போதுதான் உள்ளே நுழைந்த சுகவரன் த மனைவியின் நிலை கண்டு திடுக்கிட்டார்.

துள்ளி எழுந்தாள் பார்வதி. கன்னம் மேல் புடவையை நனைத்திருப்பதை அறிந் போதுதான், தான் இது வரை அழுதிரு பதை உணர்ந்தாள். அவளையும் அறியா ஒரு பெருமூச்சு வெளிப்பட்டது....

''பார்வதி! அழுதாயா, என்ன? அதற்கு தான் நானும் சொல்கிறேன், வருஷ வருஷம் இந்தப் பொம்மை விளையாட்டு வேண்டாம் என்று!'' சுகவரன் அன்புடன் கடிந்து கொண்டார்.

''அப்படிச் சொல்லினால் அழியும் துயர அது ? பொம்மைக் கொலு இல்லா விட்டால் நினைவு மறக்குமா?....''

''பார்வதீ....!'' முதல் முறையாக மனை வின் இதயத்தையே அளப்பது போல் நோ கினார் அவர். ''மறக்க முடியாது, பார்வதி இயலாதுதான். எப்படி மறப்பது? அதிலுட கன்னிகாதானம் செய்வதற்காகக் குழந்தை யைத் தானம் செய்தோமே...அதிலாவது...' சுகவரன் சட்டென்று கூடாததைச் சொன் னது போல் தயங்கினார்.

''ஆமாம். நானும் பாவிதான். அதனால் தான் பிள்ளை விற்ற பாபப் பணத்தில் எனக் குக் கல்யாணம் வேண்டாம் என்பது போல் ஜுரத்தில் கண்ணை மூடினாள் மூத்தவள். ஆனால், நான் தசரதன் போல், இரண்டாவது குழந்தையைக் காலனுக்கே பலி கொடுத்தும் நான் சாகவில்லையே ! இன்னும் கடைசிக் குழந்தை விற்ற பணத்தில், முதல் குழந்தை மணமாகாது மிஞ்சிய பணத்தில் விருத்தியாகி வாழ்கிறேன் நான். ஊருக்கும் பெரிய மனுஷி யாக வளர்ந்து விட்டேன்.....'' பார்வதி அடிவயிற்றிலிருந்து கதறினாள்.

சுகவரன் அவளைத் தேற்றும் வகையறி யாது தவித்து நின்றார்.

கண்ணை விற்றுச் சித்திரம் வாங்கினது போல் குழந்தை ராஜிக்கு ஈடாக வந்த பணத் தில் பெரிய பெண்ணின் வாழ்வை வளமாக்க முயன்ற சமையல்காரி பார்வதிதான் இவள் என்று அவராலேயே நம்ப முடியவில்லை ! அன்று கையாலாகாது கொம்பித் திரிந்த அவர், இன்று அந்தப் பணத்தால் பெரிய 'பிஸினஸ்' புள்ளி ஆகி விட்டார் என்றாலும்

ச் நம்ப மறுக்கும். ஆனால் அதுதான் ுண்மை! வாழ்க்கையின் விசித்திரம்.

''பிள்ளைகளாகப் பிறந்தவை வேலையென் ு, வேட்டகம் என்றும் தாயைப் பிரிந்து ட்டன. முதல் இரு பெண்களுக்கும் மணம் ுக்க மூன்றும் பெண்ணைக் கொடுக்கத் ண்டிய பாவி நான்தான். ஆனால் மூத்தவள் ''ரத்திலும் அடுத்தவள் விட்டிலும் நம்மை ட்டு விட்டுச் சென்றபின் உன்னையும் தேற்ற ியாது தவிக்கிறேனே நான் பார்வதி. உன் ்களைத் துடைக்கத் தெரியாது நிற்கிறே ன்....'' சுகவரன் புலம்பினார். ''கன்னிகா ''னப் பலனுக்கு ஆசைப்பட்டோம். அது ு வழியிலும் நமக்குக் கிடைக்கவில்லை.'' ்த ஆண் மகனின் குரலும் விம்மியது.

பார்வதி சற்று நிதானித்தாள். ''சே... து என்ன நீங்களும் அழுவதா? நானும் ுணைமயமாக.' நான் ஒரு வைத்தியம்.'' ்வேச் சுதாரித்துக் கொண்ட பார்வதி ணவனைத் தேற்றி ஆகாரத்துக்கு ஏற்பாடு சய்யலானாள்.....

''இந்த வருஷம் எப்படியாவது பெரிய ுவிய வரவழைத்து வியாபாரத்தை ஒப்பு த்து விட்டுப் பார்வதியின் வெகு நாளைய ;சைப்படி க்ஷேத்திராடனம் செல்ல வேண் ம். அப்போதுதான் அவள் மனம் சற்றுச் ாந்தியடையும்.'' தமக்குள் தீர்மானித்துக் காண்டார் சுகவரன்.

கொலு அறையில் சிறிய ஒற்றை விளக்கு ுயிர்த் துடிப்பின் உள் அமைதியுடன் எரிந்து. ுந்த வீட்டின் 'வெறுமை'யை எடுத்துக் ாட்டியது.

ஆவணி மாதம்: இயற்கைக்கு விரோதமாகக் ாவேரி அன்னை பொங்கிப் பிரவகித்துக் ்கொண்டிருந்தாள். திருச்சி பக்கமெல்லாம் ுரே ஜலப் பிரளயம். கொள்ளிடம் உடைத் ுக் கொள்ளாமலிருக்க வேண்டுமே என்று ுனங்கள் கவலைப்பட்டனர். ஆனால் அதை ுயல்லாம் லட்சியம் செய்யாது ஒருநாள் காலை ுநரத்தில் கலாமிடில் ஸ்டேஷனில் வந்திறங் ுனர் ஒரு வயோதிக தம்பதியினர். ஆம், டந்த நான்கைந்து மாதங்களாக வடநாட் டுப் புண்ணிய பூமிகளைச் சுற்றி விட்டுத் தென்னாட்டுக்குத் திரும்பியிருக்கும் பார்வதி யும் சுகவரனும்தான் அவர்கள்.

நல்ல முகூர்த்த மாதம். தொடர்ந்து கோயிலின் சந்நிதிகளில் நடந்த கல்யாண வைபவங்கள் பார்வதியின் ஏக்கத்தை அதி கரிக்கவே செய்தன. தானத்தில் உயர்ந்த 'கன்னிகாதானம்' என்ற பேறு தனக்குக் கிட்டாதபோது, பிறர் அதைச் செயலாக்கும் போது, அடுத்தவன் கைத் தின்பண்டத்தைப் பார்க்கும் அவலக் குழந்தை போல் இருந்தது பார்வதியின் நிலை!

அன்று காலை முதலே வானம் கறுத்திருந் தது. வந்த செய்திகளும் சற்றுக் கிலிஊட்டுவ தாகவே இருந்தன. லால்குடி, ஸ்ரீரங்கம், திருச்சி எல்லாம் வெள்ளக் காடு! போக்கு வரத்து இரவு முதல் தடைப்பட்டு விட்டது. ரயில்கள்கூடச் சுற்றி வளைத்து வருகின்றன!

பார்வதியும் சுகவரனும் ஸ்நானத்துக்குப் புறப்பட்டனர். ''பார்வதி! நாம் இன்றாவது புறப்பட வேண்டும். ஏற்கெனவேயே நம் திட்டங்கள் பின்தங்கி விட்டன.''

''ம்.... பார்க்கலாம்....'' பார்வதி 'ஆன்' கொட்டினாள். ''என் பாவம், ஏதோ நாலு கல்யாணங்களைக் கண்ணாலாவது பார்க்கக் கூடத் தெய்வத்துக்குப் பொறுக்கவில்லை.''

ஸ்நானம் முடித்து மடியுடுத்தி வந்த தம்பதி யினர் யானையை வலம் வந்து கீழ்ப் பிள்ளையார், அம்மன் ஸ்வாமி சன்னதியைத் தரிசித்து விட்டு மலைப்படி ஏறத் தயாராயினர். அதே சமயம் மேலேயிருந்து பரபரப்புடன் கீழே வந்தவர்களுக்கும் ஒதுங்க வேண்டியிருந்தது. இடப்புறம் வழியிருந்தும் அதை முறையாக உபயோகிப்பவர்தான் கிடையாதே!

''வண்டி யெல்லாம் திருவாரூர் மார்க்க மாக விடுகிறார்களாமே! இது நேரம் வந் திருக்கலாம்'' என்று ஒருவர் கூறினார்.

''முகூர்த்தம் தப்பி விடும். பிள்ளை' வீட்டார் சென்னையிலிருந்து வந்தாகி விட் டது. இவர்கள் திருச்சியிலிருந்து வந்து சேரத் தாமதமானால் காரியம் என்னாவது?'' மற்றவர் குரலில் கவலை இழையோடியது.

ஈசுவரன் ஊகித்து விட்டார். மேலே நடக்கவிருக்கும் கல்யாணத்துக்கு, முக்கியமான யாரோ வரவில்லை !

மேல் சன்னதி அடைந்ததுமே விஷயம் தெளிவாகி விட்டது. மணப் பெண் வீட்டார் முன்னதாகவே புறப்பட்டும் அவள் பெற்றோர்கள் இடையில் கிராமத்துக்கு ஏதோ போக நேர்ந்து விட்டது. பெண் உறவினர்களுடன் சுவாமிமலையில் தங்கி விட்டாள். எப்படியோ காமா சோமா வென்று மாப்பிள்ளை அழைத்தாயிற்று..... ஆனால் பெண்ணின் பெற்றோர் வராமல் முகூர்த்தம் நடப்பதெப்படி? பிரார்த்தனை என்று திருமணத்தை இங்கு வைத்தாகி விட்டது. பிள்ளை வீட்டார் திகைத்து நின்றனர்!

"வெள்ளம் வந்தால்தான் என்ன? ரயில் சரியில்லா விட்டால் செலவைப் பாராது, 'டாக்ஸி' வைத்துக் கொண்டு வருவது..... சே... சே.... குருட்டு நம்பிக்கையும் மூடபக்தியும் கொண்டவர்களை நம்பிக் குக்கிராமத்தில் செய்ய ஒப்புக் கொண்டதே பிசகு."— இடையே தலை நீட்டித் தூபம் போட்டார் ஒருவர் பிள்ளை வீட்டாருக்கு !

"வேறு யாரையாவது வைத்து நடத்தலாமா? இத்தனை ஏற்பாடு செய்து காரியம் நின்று போவதா?" யாரோ ஒருவர் சற்றுக் கருணை வேண்டினார்.

தகப்பன்சாமி உபதேசக் கோலம் போட ஆரம்பித்திருந்தார்.

பார்வதி அந்தப் பக்கம் திரும்பினாள். ஒரு மூலையில் அந்தப் பெண் சோர்ந்து உட்கார்ந்திருந்தாள். தலை நிறையப் பூ; உடல் முழுதும் வைரமும் தங்கமுமாக ஆபரணங்கள். அழுதழுது சிவந்த முகத்தில் மையின் கருமை படர்ந்திருந்தது. கண்களில் ஏக்கம் பயம். கவலை இராதா ? கல்யாணம் நின்றால் அதிக அவதிக்கு ஆளாவது இவள்தானே ! பார்வதி அவளை நெருங்கினாள். அவளைக் காணுந்தோறும் அந்த அடக்கமான முகமும், கூப்பிய கரங்களும், அவள் கண் மூடி அடிக்கடி பிரார்த்தித்த விதமும் பார்வதியை நெகிழச் செய்தன. பார்வதி மேலும் நெருங்கினாள். 'இவள்தான் மணப் பெண்....' இது விடையறியக் கேட்ட கேள்வியல்ல. ஓர் அறிமுகம். பேச்சைத் தொடங்கத்தான்! "ஆனால் கல்யாணம்தான் சந்தேகம்." — துடுக்குக்காரி ஒருத்தி வெடுக்கென்று பதிலளித்தாள்.

பெண் தலை நிமிர்ந்தாள். அந்தப் பிஞ்சு மனத்தின் வேதனையைப் பிரதிபலித்தன அந்தக் கண்கள்! அவற்றில் திரைவிட்ட நீரில் தன் பிம்பத்தைக் கண்டாள் பார்வதி. மறு கணம் உள்ளே நோக்கினாள். ஆண்டவனுக்குக் குளிரப் பால் அபிஷேகம் நடந்து கொண்டிருந்தது. குத்து விளக்குச் சுடரொளி வீசியது !

பார்வதிக்கு மயிர்க்கூச்செறிந்தது. இல்லை. இனி அவளால் தாங்க முடியாது. 'கிடைத்த வாய்ப்பை நழுவ விடாதே' என்கிறான் முருகன். பஞ்சாமிர்த அபிஷேகம் நடந்தது. பார்வதி முடிவு செய்து விட்டாள்.

"நேரமாகி விட்டது: இனியும் காத்திருக்க நாம் முட்டாள்களல்ல. ஏய், புறப்படுங்களடா. இந்த முகூர்த்தம் இல்லை." யாரோ ஓலமிட்டார்.

"ஏன், இல்லை.... நில்லுங்கள்...." பார்வதி தன்னை மறந்து அலறினாள். "சாஸ்திரிகளே..... மேற்கொண்டு நடக்கட்டும். நான் பொறுப்பேற்றுத் தாரை வார்க்கிறேன். சீக்கிரம்..... என்ன, நீங்களும் தயாராகுங்கள்" என்று பார்வதி ஆவேசம் வந்தது போல கணவனையும் துரிதப்படுத்தி விட்டு அந்தப் பெண்ணின் முகத்தை நிமிர்த்தித் துடைத்து விட்டுப் பொட்டைச் சரி செய்தாள்.

பழுத்த சுமங்கலி; மஞ்சள் பசியும் முகம் உலகத்து அன்னையே தன்னைக் கரையேற்ற வந்து விட்டாளோ? அந்தப் பெண்ணின் கண்களில் ஆனந்தம் மின்னியது.

கெட்டி மேளம் முழங்கியது. பார்வதியின் உடலில் புதுத் தெம்பு பிறந்தது. இயந்திரகதியில் செயலில் ஈடுபட்ட ஈசுவரனுக்கும் கூட அந்தப் பெண் மடியில் அமர்ந்தபோது புல்லரித்தது. 'இவள் என் மகள். என் ஈசுவர சிருஷ்டியில் எல்லோரும் சொந்தக் குழந்தைகள்தாம்...' பார்வதி பூரித்து நின்றாள். அவள் பிரார்த்தனை வீணாகவில்லை. அவளுக்கும் கன்னிகாதானம் செய்யப் பிராப்தம் இருக்கிறது..! கன்னிகாதான மந்திரோச்சாடனத்தின்போது ஒரு கணம் திகைத்து ஈசுவரன் பார்வதியை நோக்கினார். ஆனால் அவள் தான் தன் நிலை மறந்து நின்றாளே! கோயில் மணியும் மேளமும் முழங்கத் தாலி ஏறி விட்டது!

"முதலில் அவர்களை நமஸ்காரம் பண்ணம்மா!" ஏதோ ஒரு குரல் ஒலித்தது.

அந்தப் பெண் விழுந்து வணங்கினாள். அவளை அள்ளி அணைத்து உச்சி மோந்த போது பார்வதிக்கு மெய் சிலிர்த்தது. தன் கழுத்திலிருந்து இரட்டை வடச் சங்கிலி ஒன்றை அவள் உடனே தன் பரிசாக மணப் பெண்ணுக்குச் சூட்டியபோது உண்மையிலேயே அந்த மனத்தின் தூய்மையை எண்ணிச் சுற்றி நின்றோர் வியந்தனர்.

அதே சமயம் வாசலில் ஏதோ பரபரப்பு இதோ வந்து விட்டார்கள் பெண்ணைப் பெற்றவர்கள்....

"...வெள்ளத்தில் அகப்பட்டுத் திண்டாடி.... கார் வைத்துக் கொண்டு வந்து அது பாதியில் நின்றுபோக.... ஏதோ வந்துவிட்டோம்..." படபடப்பு அடங்கவில்லை அவர்களுக்கு. அத்தனை வேகமாக ஓடிவந்திருந்தார்கள்... "முகூர்த்தம் தவறிவிட்டதா?"

"சே, முகூர்த்தம் தவறவில்லை. நீங்கள் தான் வரத் தவறிவிட்டீர்கள். அம்மா குழந்தே. அப்பா அம்மாவுக்கு நமஸ்காரம் செய்யம்மா!" என்று ஒரு பெரியவர் ஆறுதலளிக்க முன்வந்தார்.

தூரத்திலேயே உருவத்தைக் கண்டு திகைத்த பார்வதி குரலையும் கேட்டுப் பெரும் அதிர்ச்சி அடைந்தது போல் தயங்கியபோது கரகரவென்று அவள் கைகளைப் பற்றிக் கொண்டு படி இறங்கினார் ஈசுவரன்.

''தாரை வார்த்தது யார்?... எப்படி நடந்து?'' பெற்றவள் பதறினாள்.

''கவலைப்படாதே! மகாலட்சுமி மாதிரி ந அம்மாள்....இதோ...எங்கே அவர்கள்?'' ஸ்திரிகள் சுற்று முற்றும் நோக்கினர்.

அதேசமயம் வறுமையில் பெண்ணை விற்ற வட்டமோ, அல்லது மணப் பெண்ணின் திர்காலம் பற்றிய கவலையோ ஈசுவரனை த்தனை வேகமாகப் புறப்படச் செய்ய ல்லை. அவரது ஆசை, பார்வதியின் பிரார்த்னை நிறைவேறிவிட்டது. இனி அங்கு அவக்கு என்ன வேலை?

''அவர்கள் அத்தனை சீக்கிரம் எங்கே பாவார்கள்?'' என்று பல குரல்கள் எதிராலித்தன.

''சரி, ராதா... குழந்தைகளை ஆசீர்வாதம் சய். நமக்குக் கொடுத்து வைத்தது அவ்வளவுதான். சீராட்டிப் பாராட்டி வளர்த்த பெண்ணைக் கன்னிகாதானம் செய்யும் கொடுப்பினை நமக்கில்லை. யாரோ ஒருவருக்கு அது!....'' கோபாலன் மனைவியின் திகைப்பை நீக்கினார்.

''ஆம் — பெறாத எனக்குத், தாமட்டும் எப்படிப் பாக்கியம் இருக்கும்?'' ராதாவின் உதடுகள் முனகின.

''பார்வதியும் வெறும்தான் வந்து மறைந்தனரோ?'' யாரோ ஏதேதோ பேசினர்: ஆனால் மணப் பெண் கழுத்தில் கிடந்த சங்கிலி தவிர அவர்களைப் பற்றி யறிய வேறு தடையமே இல்லையே!....

திருவலஞ்சுழியைத் தாண்டிவிட்ட பார்வதியின் நெஞ்சு நிறைந்திருந்தது. பதினைந்து வருஷங்களுக்கு முன் தூக்கிக் கொடுத்துவிட்ட பெண்ணுக்குத் தன் கடமையை ஆற்றி விட்ட திருப்தி அந்த முகத்தில் ஒளி வீசியது.

## வந்தது விபரீதம்!



# பாவம் எங்கே?

குடிசையில் தங்கியிருந்தார் அந்தச் ரியாசி. அவர் குடிசைக்கு எதிர்த் ந்போல் தாசி வீடு ஒன்று இருந்தது. ரது குடிசை எளிமைக்கு இருப்பிட க இருந்தது. தூய்மைக்கு உறைவிட கத் திகழ்ந்தது. தாசியின் வீடோ ட மாளிகையாகக் காட்சி தந்தது. பொழுது பார்த்தாலும் ஆட்டமும் ட்டமும்தான் அங்கே. எத்தனையோ ல்வச் சீமான்களும் இளமை முறுக் றிய வாலிபர்களும் வந்து போன ிணம் இருந்தனர்.

'அப்பப்பா! இத்தனை கூட்டமா ஒரு சி வீட்டுக்கு? நம் குடிசையை நோக்கி ருமே வரக் காணுமே!' — ஜபதபங் ிலும் அனுஷ்டானங்களிலும் மனத் நச் செலவிடவேண்டிய துறவியின் ஈத்திலே இந்தக் கேள்வி எழுந்தது. ஈவே, அருள் நெறியில் இருந்த அவர், ் ஜப தபங்களை மறந்தார். தாசி ட்டுக்கு வரும் ஆசாமிகளை எண்ணும் 'வலையில் தமக்கெதிரே ஒரு சிறு மலைப் போட்டு வரலானார். ஓர் ஆள் ந்து போனால் அவரெதிரே ஒரு கல் ழும்.

தாசியோ தன் வயிற்றுப் பிழைப் க்காக எத்தகைய பாவங்களைச் செய்து ருகிறோம் என்று எண்ணி மனம் நாந்து போயிருந்தாள். எதிர்த்த குடி சயிலிருக்கும் சந்நியாசி எப்படித் ூய்மையாகத் துறவியாக இருக்கிறார் ன்று நினைத்துப் பார்த்தாள். அவரை ணுகி வணங்கிவிட்டு அவர் அருளை ம் ஆசியையும் பெற்று வர வேண்டும் ன்று முடிவு செய்தாள்.

சந்நியாசியோ தன் முன் குவிந் திருந்த கற்களை எண்ணிப் பார்த்து விட்டு ஆச்சரியப்பட்டு, மனம் பேத லித்துப் போனார். தானும் ஒரு நாள் அந்தத் தாசி வீட்டுக்குப் போய் வந்தால் என்ன என்று புத்தி தடுமாறும் சம யத்தில்தான் தாசி அவர் குடிசைக்கு வந்து காலில் விழுந்து வணங்கினாள்.

''சுவாமி! என் பாவத்துக்கெல்லாம் விமோசனம் கிடையாதா? உங்கள் தூய்மையான உள்ளத்தையும், இறைவ னிடம் தாங்கள் கொண்டுள்ள பக்தியை யும் பார்த்த பின் எனக்கு என் வாழ்க் கையும், என் தொழிலும் வெறுத்து விட்டன. இன்று முதலாவது நான் தூய் மையாக இருக்கத் தீர்மானித்து விட் டேன். என் குற்றங்களையும், பாவங் களையும் மன்னித்து என்னை ஆசீர்வதித்து அருள்பாலிக்க வேண்டும்.''

தடுமாற நினைத்த சந்நியாசி தப்பித் துக்கொண்டார். கற்களின் குவியலைக் காட்டி, அவளிடம் சொன்னார், அந்தக் கற்களின் குவியலின் அளவு பாவம் அவள் செய்தாள் என்று. அவள் அதை உணர்ந்து வருந்தித் திருந்திவிட்டாள். ஆனால் அவரோ அவற்றை எண்ணிப் பாவத்தையும் அதைவிடப் பெரியதொரு பாதகத்தையும் செய்ய இருந்தார்.

''நான் பெருந் தவறு செய்ய இருந் தேன். சமயத்தில் விழித்துக்கொண்டு விட்டேன்.... ஆண்டவனும் சமயத்தில் என்னை மீட்டுவிட்டார். ஆண்டவன் உனக்கருள்வாராக...'' என்று தாசியை வழி யனுப்பிவிட்டு, தேசாந்திரம் போனார் சந்நியாசி.

— கலாபாரதி






# படித்துப் பாருங்கள்

## மோகன வாணி

கண்ணன் அருளிய பகவத்கீதை பாரத மக்களுக்கு வாழ்க்கையில் வழி தடுமாறித் திகைக்கும்போது உதவும் அரிய கைவிளக்காகவும், கலங்கரைவிளக்காகவும் விளங்கி வந்திருக்கிறது. காந்தி மகான் தமது அற்புத வாழ்க்கையைப் பகவத்கீதையின் உதவி கொண்டே நடத்தி வந்திருக்கிறார். இத்தகைய அரிய அறநூலுக்கு எத்தனையோ விளக்கங்களும், மொழிபெயர்ப்புக்களும் தமிழில் வெளிவந்திருக்கின்றன. இப்போது வெளிவந்துள்ள ஸ்ரீமதி வாலம்பாளின் செய்யுள் நடை மொழிபெயர்ப்பு தனிச் சுவையும் விறுவிறுப்பும் கொண்டதாக இருக்கிறது. மொழிபெயர்ப்பு என்ற உணர்ச்சியையே தோற்றுவிக்காமல் தமிழில் செய்யப்பட்ட முதல் நூல் என்ற எண்ணத்தையே ஏற்படுத்துகிறது. பகவான் கீதையில் ''ஸம்பவாமி யுகே யுகே!'' என்று சொல்லும் இடத்தை எவ்வளவு அழகாகத் தமிழில் மொழிபெயர்த்திருக்கிறார் பாருங்கள்:

''எவ்வெப்பொழுது இந்தப் புவியில்
செவ்விய அறநெறி நிலைதடுமாறிக்
கவ்வப்பட்டு மறைந்தால் வாடுமோ
அவ்வப்போது பிறவி எடுப்பேன்
ஆன்றோர் சான்றோர் அவர்களைக் காக்கவும்
தான்தோன்றிகளாம் தீயரை நீக்கவும்
தோன்றுவேன் யுகந்தோறும் யுகந்தோறும்
கண்டாய்!''

இவ்விதம் கீதையின் பதினெட்டு அத்தியாயங்களையும் எளிய தமிழில் அகவற்பாவில் மொழிபெயர்க்கப்பட்ட இந்நூல் தமிழன்னைக்கு இடப்பட்ட மணங் கமழும் மலராகும்.

பிரசுரம்: ஸ்ரீமதி ஹரா. இ. வாலம், 11, கொலாபா சாம்பர்ஸ், கொலாபா, பம்பாய்-5
விலை: ரூ. 3.25.

## The Avadi Socialists

உங்களுக்கு வைரச் சுரங்கம் வேண்டுமா? அப்படியானால் இதோ இந்தப் புத்தகத்தை வாங்கிப் படியுங்கள். வைரத்தை விட மதிக்கவொண்ணாத கருத்துக்கள் நன்கு பட்டை தீட்டப்பட்டுப் 'பளீர் பளீர்' என ஒளிவிடுவதைக் காண்பீர்கள்.

ஸ்ரீமான் ரகுநாதய்யர் அவர்கள், 'வேகவரா' என்ற புனைபெயரில் 1[illegible] லிருந்து 1956 வரை ஏறத்தாழ வா[illegible] தோறும் அந்தந்த வார முக்கிய நிகழ்[illegible] களை ஆதாரமாகக் கொண்டு, தமது க[illegible] துக்களைக் கட்டுரைகளாக எழுதி வந்தா[illegible] அவற்றின் தொகுப்பே இந்த நூலாகும்.

நிகழ்ச்சிகள் என்னும்போது உலக முக்கி[illegible] துவம் வாய்ந்த நிகழ்ச்சியும் அவர் [illegible] டுரைக்கு விஷயமாகும். தமிழ் நாட்டு ஏ[illegible] ஒரு குக்கிராமத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சி[illegible] கட்டுரைக்குக் கருவாக அமையும். அ[illegible] விலிருந்து உருவாகும் கட்டுரையைப் படிக்[illegible] போது ஆங்கிலம் வடமொழி ஆகிய இ[illegible] மொழிகளில் ஆசிரியருக்குள்ள ஆழ்ந்த வி[illegible] ஞானத்தையும், கற்பனை வளத்தை[illegible] கண்டு வியக்காமல் இருக்க முடியாது. அ[illegible] இதயம் நமது பண்பாட்டில் ஊறித் தி[illegible] பதை இத் தொகுப்பில் காண முடிகிற[illegible] தர்மத்துக்குப் புறம்பான நிகழ்ச்சியை[illegible] காணும்போது அவர் பேனா கொடுக்[illegible] சாட்டையடி உள்ளத்தை உருக்குவதாக[illegible] இருக்கிறது.

இப் புத்தகத்தின் முன்னுரையில், கா[illegible] ரெஸ்காரர்கள் ஆவடி சோஷலிஸ்ட்களா[illegible] மாறிய வரலாற்றை மிகச் சாங்கோபாங்[illegible] மாக விளக்கி யிருக்கிறார் இந்நூல் ஆசிரிய[illegible]

சில கட்டுரைகளில் ஆசிரியர் வெளியிடு[illegible] கருத்துக்களுடன் ஒருவேளை வாசகர்க[illegible] உடன்படாமலிருக்கலாம். எனினும் அ[illegible] சொல்லப்படும் முறை வாசகர்களைக் கவர[illegible] மல் இராது!

ஆங்கிலம் அறிந்தவர்களுக்கு இந்த புத்தகம் அரிய விருந்தாக அமையும். ப[illegible] நாட்கள் பக்கத்தில் வைத்திருந்து படித்து படித்து இன்புறலாம்.

பிரசுரம்: பி. ஜி. பால் அண்டு கம்பெனி[illegible] 4, பிரான்ஸிஸ் ஜோஸப் தெரு, சென்னை-1[illegible]
விலை: ரூ. 5.00.



# இரக்கம் ஒரு விலங்கு!

சுகி சுப்பிரமணியன்

''இது முதல் வகுப்பு.... ஏறாதே. மூன்றாம் வகுப்பு பின்னால் இருக்கிறது. போ....''

இந்தோ – சிலோன் எக்ஸ்பிரஸ் புறப்பட இன்னும் இரண்டே நிமிஷம் இருக்கிறது. முதல் வகுப்புக்குள் ஏற வந்த நபருக்கு எச்சரிக்கை விடுத்தார், பிளாட்பாரத்தில் நின்றவர். இந்த எச்சரிக்கையைச் செவிமடுக்காமல் படியில் கால் வைத்ததும், ''சே! இறங்கய்யா.... இது முதல் வகுப்பு'' என்று முழங்கையில் குத்தினார். குத்துப்பட்டவர், ''என்ன மிஸ்டர் சாம்பசிவம்! என்னைத் தெரியவில்லையா? உங்கள் நண்பன் நான்...'' என்று பல்லைக் காட்டினார்.

இதுவரை புகை மண்டலத்தில் அழுந்திக் கிடந்த சாம்பசிவம் பிளாட்பாரத்தில் நின்ற பஞ்சையை நோட்டம் விட்டார். கிழிசல் சட்டை. அழுக்குத் துணி. தலையும் பரட்டை. அநாகரிகமான தோற்றம்.

''யார் நீ?''

''என்னைத் தெரியவில்லையா சாம்பசிவம்?''

''தெரியவில்லையே.....''

''நாம் ஒரே ஊர்க்காரர்கள். பார்த்து இருபது வருடங்கள் ஆச்சே...உன் நண்பனை உனக்கு அடையாளம் தெரியவில்லையா?''

சாம்பசிவத்தை வழி அனுப்ப வந்தவர் பிளாட்பாரத்தில் நின்றார். வண்டி நகரத் தொடங்கிற்று.

''யார் இந்தக் கிறுக்கு! சாம்பசிவம் மிகவும் ஜாக்கிரதையாக இருங்கள்'' என்று தடுத்தார்.

''வரட்டும் உள்ளே வா....'' என அனுமதித்தார் சாம்பசிவம். படபடவென உள்ளே போய்ச் சாம்பசிவத்துக்கு எதிராக அமர்ந்து கொண்டான் அந்த ஆசாமி.



வண்டி நகர்ந்து ஓடத் தொடங்கியது. ஒயிலாகவும் சொகுசாகவும் உயர்தர ஆடைகளுடன் சாய்ந்திருந்த சாம்பசிவம் எதிரே கூனிக் குறுகி அமர்ந்திருந்த ஆசாமியைக் கண்ணோட்டம் விட்டார்.

''உங்கள் பெயரென்ன?''

''என் பெயர் ரங்கதுரை.''

''ரங்கதுரையா...? உங்கள் பெயரை நான் கேட்டதே இல்லையே..... என்னுடன் இந்தப் பெயருடையவர்கள் எவரும் படித்ததே இல்லை.''

மன்னிப்புக் கேட்கும் பாணியில், ''மன்னிக்கணும் சார். உங்களை நான் முன்பின் பார்த்ததே இல்லை. உண்மையைச் சொன்னால்..... நான்.... ஒரு திருடன்... மாஜித் திருடன்'' என்று சொன்னான் எதிரே இருந்த நபர். சாம்பசிவத்துக்குப் பயம் இல்லை. ஆயினும் தன் எதிரில் தன் பெயரை உச்சரித்துப் பால்ய நண்பன் என்று பொய் பேசி, உள்ளே வந்த நபரை வெளியே தள்ளிவிடுபவர் போன்று உறுத்துப் பார்த்தார்: ''என்னை வெளியே தள்ளி விடாதீர்கள்'' எனக் கெஞ்சும் பார்வையில் ரங்கதுரை பார்த்தான்.

''சா...ர்! நான் பொய்தான் சொன்னேன். ரிசர்வேஷன் கார்டில் உங்கள் பெயரைப் பார்த்தேன். படித்தேன். பொய் சொன்னேன். உங்களை என் நண்பர் என்று பொய் உறவு கொண்டாடினேன்....''

''அயோக்கியன்... போக்கிரி....திருடன்'' என்று சாம்பசிவம் கத்தித் தீர்த்தார்.

''சார்...... நீங்கள் என்னை மன்னிக்க வேண்டும். சென்னை சென்ட்ரல் ஜெயிலிலிருந்து போன வாரம் தான் என்னை விடுதலை செய்தார்கள். நான் சாப்பிட்டுப் பல நாட்கள் ஆகி விட்டன.''

சாம்பசிவத்தின் முரட்டு முகத்திலும் இரக்கம் பிரதிபலித்தது. அவர் வாங்கி வைத்திருந்த ஆரஞ்சு இரண்டை எதிர் மெத்தையில் எறிந்தார்.

''வேண்டாம், சார்! எனக்காக நீங்கள் டிக்கெட் மட்டும் எடுத்துக் கொடுத்து விடுங்கள்.''

''நீ கேட்ட கேட்டுக்கு முதல் வகுப்பு டிக்கெட்டு வேறேயா?''

''என் பரிதாபக் கதையை நீங்கள் கேட்க வேண்டும் சார். நான் நன்றாக வாழ்ந்தவன். பணத்தாசையினால் திருடிச் சிறை புகுந்தேன். இந்த ஒரு முறை நீங்கள் என்னைக் காப்பாற்ற வேண்டும்.....''

''திருடன் என்று உண்மையைச் சொன்னாய்? எங்கே திருடினாய்? என்ன திருடினாய்?''

''நாலு ஆண்டுகளுக்கு முன்பு சௌகார்ப்பேட்டையில் உள்ள சேட்ஜி கம்பெனியில் எனக்குக் கணக்கெழுதும் வேலை. மூந்நூறு ரூபாய் சம்பளம் தந்தார் சேட்ஜி. நான் பத்தாயிரம் ரூபாய் ரொக்கத்தையும் என் பைக்குள் எடுத்து வைத்துக் கொண்டு....''

''ஓடப் பார்த்தாய்....''

''ஓடியே விட்டேன். பாங்கிலிருந்து கம்பெனிக்குப் போகாமல் மறைந்து விட்டேன். அத்துடன் வைர நகைகளையும் பதுக்கினேன். மாட்டிக் கொண்டேன்.''

''அதுதானே நீ செய்த முதல் திருட்டு?''

''இல்லை, சார். சொல்லப் போனால் நான் அகப்பட்டுக் கொண்ட முதல் திருட்டு.''

"மூஞ்சியும் முகரையும் பார். ஹாஸ்யம் வேறு கேடா? நீ செய்தது எத்தனாவது திருட்டு?"

"ஏழாவது திருட்டிலே நான் மாட்டிக் கொண்டு சிறை சென்றேன்....."

"இப்போது எங்கே ஓடுகிறாய்....?"

"தஞ்சாவூருக்கு!"

"அங்கே யார் இருக்கிறார்கள்?"

"என் தாயார் இருக்கிறாள். வயதானவள். அவளைக் காப்பாற்றப் போகிறேன்...."

"நாசமாகப் போகும்.... நீயா காப்பாற்றுவாய்?"

"என் மனைவியும் மக்களும் என்னை மறந்து விட்டு....."

"உனக்கு மனைவியும் மக்களும் இருக்கிறார்களா?"

"இதே சென்னையில், குடிசையில் இருக்கிறார்கள்."

"நீ அங்கு போகலையா?"

"போனேன். என் மனைவி விறகுக் கட்டையை எடுத்துக் கொண்டு அடிக்க வந்தாள். என் பையன் அரிவாளை எடுத்துக் கொண்டு வெட்ட வந்தான்....."

இதுவாறும் பற்றும் பாசமும் வைக்காமல் ரங்கதுரையை அலட்சியம் செய்த சாம்பசிவம், திரும்பி அவன் முகத்தைப் பார்த்து உட்கார்ந்தார்.

"உயிருக்குப் பயந்து ஓடிவந்துவிட்டேன்."

"நீ கோழை."

"நான் அங்கே யிருந்தால் அவர்களுக்குக் கேவலமாம்..... என் தாயிடம் போய்க் கதறி அழுது மானமாய் வாழப் போகிறேன். இனி எங்கும் திருடப் போவதில்லை. ஏன் சார், ஒரு முறை திருடி அகப்பட்டவனுக்கு வேலை கிடைக்காதா?"

"கிடைக்கும்..... நீ உண்மையைச் சொன்னால் எவரும் வேலை தர மாட்டார்கள்..."

"இனி பொய் சொல்லப் போவதில்லை சார்........"

ரங்கதுரையின் மீது சாம்பசிவத்துக்கு உண்மையிலேயே இரக்கம் ஏற்பட்டு விட்டது. ரங்கதுரையின் கொடிய செயலைவிட, உண்மை மனத்தையே அவர் பாராட்டிப் பேசினார்.

"எனக்காக நீங்கள் டிக்கெட் எடுத்துக் கொடுத்தால் போதும். உங்களுக்குச் செலவு வைத்து விட்டேன்....."

"இருந்து தொலை. செங்கல்பட்டில் வேறு யாரோ ஏறப் போகிறார்கள் போல் இருக்கிறது. அவர்கள் ஆட்சேபனை செய்யாமல் இருந்தால் சரி....."

"ஏன் சார், ஆட்சேபிக்க வேண்டும்? நீங்கள்தான் எனக்கு டிக்கெட் எடுத்துத் தருவீர்களே...."

"தருகிறேன். அவரிடம் நீ உளறி வைக்காதே....."

"நான் உண்மையைச் சொல்லுவேன்... நான் மாஜித் திருடன் என்பதைச் சொன்னால் அவராவது இரக்கப்பட்டு வேலை தர மாட்டாரா?"

"எக்கேடும் கெட்டுப் போ...."

வண்டி செங்கல்பட்டில் நின்றது. முதல் வகுப்பின் அருகாக, பெரிய மனிதர் ஒருவர் விரைந்து வந்தார்.

"யார் சார், அது? உங்கள் சர்வண்டா?" என்று சாம்பசிவத்தைக் கேட்டார். ரங்கதுரை 'ஆமாம்' என்று தலையை அசைத்து வைத்தான்.

"அவரும் பிரயாணி..... கொஞ்சம் மனநோய் உண்டு...." என்று சமத்காரமாகச் சமாளித்தார் சாம்பசிவம். புதிய பிரயாணிக்கு இரக்கம் வர வேண்டும் என்பதற்காக மன நோய் எனச் சொல்லி வைத்தார்.

வந்தவர் உள்ளே ஏறி மேல் மெத்தையில் விரிப்பை விரித்தார். பெட்டிகளை அடுக்கினார். அவரை வழியனுப்ப வந்தவர் இறங்கி விட்டார். ஆனால் அவர் இறங்கும்போது ரங்கதுரையைக் கண்ணோட்டம் விட்டபடியே, "பெட்டி, வெள்ளிக் கூஜா ஜாக்கிரதை...: தூங்கிப் போய் விடாதீர்கள்......" என்று எச்சரிக்கை செய்தார். எச்சரிக்கை செய்ததோடு நில்லாமல் டி. டி. ஆர். நிற்கும் திசை நோக்கிக் கைதட்டிச் சமிக்ஞை செய்தார்: டி. டி. ஆர். வண்டிக்குள் வந்தார்.

"யார் இவன்?" என்றார் ரங்கதுரையைச் சுட்டிக் காட்டி.

"அவர் என் நண்பர். அவருக்கு முதல் வகுப்பு டிக்கெட் ஒன்று கொடுங்கள்...." என்று சாம்பசிவம் பண நோட்டுக்களை எடுத்து அலட்சியமாகக் கொடுத்தார்.

"மூன்றாம் வகுப்பில் இடமிருக்கிறதே..."

"இல்லை.... அவர் மன நோயால் வருந்துகிறவர். பரவாயில்லை. கொடுங்கள்" என்று தஞ்சாவூருக்கு டிக்கெட் பெற்றும் பாக்கிப் பணத்தையும் வாங்கிக் கொண்டார்;

"யார் சார், இவன்?"

"நான்....." என்று ரங்கதுரை ஆரம்பித்த போது சாம்பசிவம் கண்ணைக் காட்டினார்.

டி. டி. ஆர். இறங்கி அடுத்த வண்டிக்குள் போனதும் சாம்பசிவம் எழுந்து போய், "இனி யாரும் இங்கு வர மாட்டார்கள்" என்று கதவை உட்பக்கமாகத் தாளிட்டார்.

வண்டி செங்கல்பட்டைத் தாண்டி ஓட்டம் எடுத்தது.

"ஆசாமியைப் பார்த்தால் எனக்குத் தூக்கம் வராது போல் இருக்கிறதே....." என்றார் கும்பகோணத்தார்.

"நான் உள்ளதைச் சொல்லுகிறேன் சார்: நான் திருடி ஜெயிலுக்குப் போனவன். போன வாரம் விடுதலையானவன்..... என் தாயார் தஞ்சாவூரில் இருக்கிறாள். அவளைப் பார்க்கப் போகிறேன். இதோ எதிர் வீட்டில் இருக்கிறாரே. இவரிடம் கெஞ்சினேன். அனுமதித்து அழைத்து வந்தார்....."

இதைக் கேட்ட கும்பகோணத்தார், "நீங்கள் எது வரை?" என்று கேட்டார்.

"நான் ராமநாதபுரம் போகிறேன்."

"உங்கள் பெயர்?"

"சாம்பசிவம்."

"உங்களுக்கும் இந்த ஆசாமிக்கும் உறவு உண்டா?"

"கிடையாது. எழும்பூரில் ரயில் கிளம்பும் சமயம் மின்னல் போல் உள்ளே வந்தார்; உங்களிடம் இப்போது சொன்னாரே, நான் திருடன் என்று. அதையே கூறினார்...."

"அவர் பெயர் என்ன?"



''ஏதோ ரங்கதுரையாம்......'' என்றார் சாம்பசிவம்.

''நீங்களும் நானும் விழித்துக் கொண்டிருக்க வேண்டும்—ஆசாமி எதையாவது தூக்கிக் கொண்டு இறங்கி விடுவான்......''

''சார்...! நான் இனி திருடப் போவதில்லை... ஆறு ஏழு தடவை திருடி விருக்கிறேன். அகப்பட வில்லை. சௌகார்ப்பேட்டையில் பத்தாயிரம் ரூபாயும் நாலு வைர மோதிரமும் திருடி அகப்பட்டு நாலு வருஷங்கள் ஜெயில் தண்டனை பெற்றேனே.... நாலு வருஷ நரக வேதனை. போதும், போதும் ..... அதைவிட....'' என்று மேலே பேச முடியாமல் கண்ணீர் மாலையை உகுத்தான்.

''ஆசாமிக்கு மூளை பிசகி யிருக்குமோ?'' என்று கும்பகோணத்தார் சாம்பசிவத்தைக் கேட்டார்.

''இருக்காது..... மன வேதனை தான்'' என்று பதிலுரைத்தார் சாம்பசிவம்.

''எனக்குச் சிறைவாசம் பெரிசில்லே சார். என் மனைவியும் மகனும் என்னை அடிக்கவும் வெட்டவும் வந்தார்களே....''

''ஏன்.... ஏன்? உனக்கு மனைவி இருக்கிறாளா.......? மகன் இருக்கிறானா ?''

''சூளை வெங்கட்ராம முதலித் தெருவில் இருக்கிறார்கள். விறகுக் கட்டையால் அடிக்க வந்தானே, அவனுக்கும் என்னைப் பார்த்தால் திருடன் என்றே படுகிறது. இந்தத் தமிழ் நாட்டில் கல் என்றாலும் கணவன், புல் என்றாலும் புருஷன் என்பதெல்லாம் பொய் சார்.... வீண் பிரமை.''

''பாவம்.... பரிதாபம்.... தூங்குங்கள்'' என்றார் சாம்பசிவம்.

''திருடினேன்; அகப்பட்டேன்; மனைவி மக்கள் அடிக்க வந்தார்கள் என்று இவனைப் போல் உண்மையைச் சொல்வது அபூர்வம்.''

''ஆமாம்; அபூர்வம்.''

''நேற்று முதல் உண்மையைச் சொல்லியே வேலை கேட்பது என்றும் முடிவு செய்தேன் சார். இவரிடம் வேலை கேட்டேன்....'' என்று ரங்கதுரை சொன்னதும் கும்பகோணத்தார் சாம்பசிவத்தைப் பார்த்தார்.

''உங்கள் கம்பெனி அல்லது ஆபீஸில் ஏதாவது வேலை கொடுங்கள் சார்.....''

''அவன் கை திருட்டுக் கை. நிற்காது.''

''மிஸ்டர் சாம்பசிவம்! உங்களைக் கையெடுத்துக் கும்பிடுகிறேன். எனக்கு நீங்கள் முதல் வகுப்பு டிக்கெட் வாங்கித் தந்ததே பெரிய உதவி. என் விலாசத்தைத் தருகிறேன். பாலாமணி அம்மாள், 202, பூக்காரத் தெரு, தஞ்சாவூர் என்ற விலாசத்துக்கு எழுதுங்கள். உங்களுக்கு என்மேல் நம்பிக்கை ஏற்பட்டால் கடிதம் எழுதுங்கள்.''

''நான் நம்பினாலும் என் கம்பெனி ஆட்கள் நம்ப மாட்டார்கள்.''

''உங்கள் கம்பெனி எங்கே இருக்கிறது?'' என்று கேட்டார் கும்பகோணத்தார்.

''பம்பாயில் இருக்கிறது. என்னைத் தூங்க விடுங்கள். நீங்கள் எங்கே இறங்கவேண்டும்?''

''நான் கும்பகோணம். இவர் தஞ்சாவூர். நீங்கள்தான் கடைசி..... ராமநாதபுரம்.''

சாம்பசிவம் தமது பட்டுச் சட்டை, தங்கக் கடிகாரம், கொத்துச்சாவி அனைத்தையும் தலையணைக்கடியில் திணித்து விட்டுப் படுத்து விட்டார். கும்பகோணத்தாரும் ரங்கதுரையும் எதிரும் புதிருமாக இருந்தார்கள்.

''தம்பீ.....'' என்று குரலில் அன்பு ததும்பக் கூப்பிட்டார்.

''என்னையா கூப்பிட்டீர்கள்?''

''ஆமாம். உன் கதையைக் கேட்டால் கல்லும் கரையும். ஆனாலும் என்னிடமும் இவரிடமும் சொன்னது போல், பிறரிடம் நீ உண்மையைச் சொல்லாதே.....''

''சொல்லாவிட்டால் எனக்கு உதவி செய்ய மாட்டார்களே சார்....; என்றைக் காவது உண்மை தெரிய வந்தால் என்னை வதைத்து விடுவார்கள். நான் பட்டினி கிடந்தாலும் மாஜித் திருடன் என்றே சொல்லப் போகிறேன்.''

"சௌகார்ப்பேட்டை சேட்ஜி கம்பெனிக்குப் போனாயா? அவரிடம் உதவி கேட்டாயா?"

"போனேன். சேட் என்னைப் பார்த்துக் கண்ணீர் உகுத்தார் சார். 'இனி இங்கு வராதே...... ஆனால் இன்று மட்டும் ஒரு ரூபாய் இதோ வாங்கிப் போ' என்று அனுதாபத்துடன் சொன்னார். ரூபாய் வரும் என நான் நின்றேன். ஆனால் வேலையாள் கொதிக்கக் கொதிக்க வெந்நீரைக் கொண்டு வந்து 'போடா திருட்டுப் பயலே' என்று கொட்டி விட்டான். நல்ல வேளை! எச்சரிக்கையுடன் நான் தவ்விக் குதித்தேன். இல்லா விட்டால் ஜெனரல் ஆஸ்பத்திரியில் கிடக்க வேண்டும் நான்..... எனக்குச் சென்னை வாழ்வு வேண்டாம். என் தாய் இருக்கிறாள். வயோதிகத் தாயிடம் போய்க் கதறிக் கதறி அழுவேன்."

"அவளும் உன்னைத் திருடன் என்று திட்டினால் ?"

"வெள்ளாற்றில் கல்லைக் கட்டிக் கொண்டு மூழ்கி விடுவேன்."

"சாகவா போகிறாய்......?"

"ஆமாம்...."

"வேண்டாம் தம்பி!"

இருவரும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். என்ன சொல்லுவாரோ என்று மாஜித் திருடன் கும்பகோணத்தார் கண்ணைப் பார்த்தான்.

"உனக்காக ஓர் இடத்தில் சிபாரிசு செய்கிறேன்."

"எந்த ஊரில் சார்?.... யாரிடத்தில் சிபாரிசு செய்கிறீர்கள்?"

"கும்பகோணத்தில் ஒரு வியாபாரி இருக்கிறார். என் நண்பர். நான் சொன்னால் சரியென்று வேலை தருவார்....."

"நான் மாஜித் திருடன் என்பதைச் சொல்லி விடுங்கள்."

"அதுதான் கூடாது."

"நானே சொல்லுவேன். அதன் பின்னர் வேலைக்கு வைத்துக் கொண்டாலும் சரி. வேண்டாமென்றாலும் சரி....."

"சொல்லித் தொலை. உன் மூளை பிரண்டு போய் விட்டது. உனக்குக் கணக்கு எழுதத் தெரியுமா?"

"தெரியும். சேட்ஜி கம்பெனியில் அதைத் தான் எழுதினேன்...."

"சர்க்காருக்கு ஒரு கணக்கு.... சொந்தத்துக்கு ஒரு கணக்கு!"

"சார், திருத்துங்கள். நான் செத்தாலும் சாவேன். கள்ளத்தனம், திருட்டுத்தனம் எதுவும் வேண்டாம்."

"நீ மானமாகப் பிழைக்க வேண்டுமானால் திருட்டுக் கணக்கு எழுத வேண்டும். உனக்கொன்றும் நஷ்டமில்லை. மாதம் இருநூறு ரூபாய் சம்பளம் தரச் சொல்கிறேன்.."

ரங்கதுரை, "சார் உங்களுடைய சிபாரிசே தேவையில்லை..." என்று மறுத்தான்.

கும்பகோணத்தாரும் சாம்பசிவமும் சிரித்தார்கள். ரயில் ஓடிக் கொண்டிருந்தது.

"அவன் யாரோ நீங்கள் யாரோ? விட்டு விடுங்கள்" என்று சாம்பசிவம் பேசினார்.

தூக்கத்தில் ஆழ்ந்திருந்த ரங்கதுரையைச் சீண்டி, "என்னை வந்து நீ பார்க்கிறாயா?" என்று கேட்டார் கும்பகோணத்தார்.

"முடியாது. கள்ளக் கணக்கு எழுதுவதை விட என்னூர் வெள்ளாற்றில் சாவது மேல்."

"உன் தாயைப் போய்ப் பார். ஒரு வாரம் பத்து நாள் வரை தஞ்சாவூரில் இரு. அப்புறம் உன் மனம் மாறி, கணக்கு வேலை வேண்டுமென்று தோன்றினால் வந்து பார்" என்று தமது கோட்டுப் பையைத் தடவி சீட்டு ஒன்றை எடுத்துக் கொடுத்தார்.

ரங்கதுரை வாங்க மறுத்தான். அவன் சட்டைப் பைக்குள் போட்டார் கும்பகோணத்தார்.

வண்டி ஓடிக் கொண்டிருந்தது. சாம்பசிவம் படுத்துக் குறட்டை விட்டு விட்டார். கும்பகோணத்தாரும் நன்றாகத் தூங்கிவிட்டார். ரங்கதுரை மட்டும் மெத்தையிலே குந்தியிருந்தான்.

விழுப்புரம் சந்திப்பில் வண்டி நின்றது; ரயில் நிலையச் சந்தடிகள்... கூச்சல்கள் எழுந்து ஓய்ந்து ஆங்காங்கு மறைந்தன.

கார்டும் இரண்டொரு போலீஸ் ஜவான்களும் முதல் வகுப்பு வண்டியை அடைந்து கதவைத் தட்டினார்கள்.

"யாரது?" என்று ரங்கதுரை கேட்டான். கதவை இடிக்கும் ஓசை வலுத்தது.

"இந்த வண்டியில் தப்பி வந்த கைதி ஒருவன் மதராஸிலிருந்து பிரயாணம் செய்கிறான்..." என்ற போலீஸ் குரல் கேட்டது.

கும்பகோணத்தார் எழுந்து கதவைத் திறந்ததும், "ரங்கதுரை இவன் பெயர். இவன் தான் மாஜித்திருடன்" என்று காட்டிக்காட்டினார். திமுதிமுவெனப் போலீசார் கூடி விட்டார்கள். ரயில்வே சிப்பந்திகள் நுழைந்தனர்.

ரங்கதுரை, "நான் மாஜித் திருடன். உண்மைதான். இதோ மெத்தையில் உறங்குபவர் நிஜத் திருடர்! நீங்கள் தேடி வந்த ஆள் அவர்தான். இதுவரை பத்துப் பதினைந்து முறை பம்பாய் வழியே தங்கம் கடத்தும் தங்கமான மனிதர் இந்தச் சாம்பசிவம்" என்று சொன்னான்.

"அடப் பாவி..., நீ...நீ.. போலீசா?" என எழுந்த சாம்பசிவம் தமது பெட்டியைத் திறக்க முயன்றார்.

"நண்பரே! என் கையிலும் ரிவால்வர் இருக்கிறது. நான் சி. ஐ. டி. போலீஸ்" என்று தம்மிடம் ஒளித்து வைத்திருந்த ரிவால்வரை வெளியே எடுத்தார் ரங்கதுரை. வண்டியில் அமளி எழுந்து அடங்கிற்று; கூச்சலும், எதிர் நீச்சலும் ஓய்ந்து முதல் வகுப்புப் பிரயாணி சாம்பசிவத்தின் பெட்டியைச் சோதித்தபோது தங்கக் கட்டி அகப்பட்டது.

"நண்பர்களே! நான் எதிர்பார்த்த வேட்டை வெற்றியுடன் முடிந்தது. எதிர்பாராத வேட்டை ஒன்றும் மிஞ்சியிருக்கிறது. கள்ளமார்க்கெட்டு ஆசாமி கும்பகோணத்தில் ஒருவர் இருக்கிறார் என்று இவரே விலாசம் தந்தார். கறுப்புச் சந்தைப் பதுக்கல் பணக்காரரையும் தரிசனம் செய்துவிட்டு வருகிறேன். கும்பகோணத்தில் போலீஸ் உதவிக்குப் போன் பேசுங்கள்" என்றபடியே கும்பகோணத்தார் அருகில் சி. ஐ. டி. ரங்கதுரை வந்து அமர்ந்தார்.

சாம்பசிவம் அவரது உடைமைகள் யாவும் இறக்கப்பட்ட பின்னர் இந்தோ சிலோன் எக்ஸ்பிரஸ் கும்பகோணத்தை நோக்கி ஓடத் தொடங்கியது.



# பிரிட்டானியா கோல்டன் பஃப்

பிரிட்டானியாவினால் பிரத்தியேகமாகத் தயாரிக்கப்பட்ட கோல்டன் பஃப் பிஸ்கட்டுகள், புத்தம் புதியவை, முறுகலானவை, புஷ்டிச் சத்தும் உள்ளவை. டீ அல்லது காபி அருந்தும்போது, ஜாம், வெண்ணெ, அல்லது பாற் கட்டியுடனோ தின்பதற்கு மிகச்சிறந்தவை. அவற்றை பரீட்சை செய்து பாருங்கள்—வாயில் போட்டதும் கரைந்து போகின்றன. இன்றே கொஞ்சம் வாங்கி, பிரிட்டானியா கோல்டன் பஃப் பிஸ்கட்டுகளின் புத்தம் புதிய சுவையின்பத்தை அனுபவியுங்கள்.

## பிரிட்டானியா பிஸ்கட்டுகள்





# பேஷான திட்டம்!

## தோட்டக்கார விசுவநாதன்

பக்கத்து வீட்டுப் பெரியவர் ஒரு கையால் குண்டுவின் காதைப் பிடித்துத் திருகி மற்றொரு கையால் அவன் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு கோபமாக உள்ளே வந்தார். அவன் ஓலமிட்டுக் கிமிறியபடியே வந்தான்.

அழுகைச் சத்தத்தைக் கேட்ட அவன் தாயார் கமலம் சமையலறையிலிருந்து அவசரமாக வெளியே வந்தாள். பெரியவர் குண்டுவை அவள் முன் தள்ளினார். விழப் போகும் குண்டுவைச் சட்டென்று ஓடி வந்து விழவிடாமல் பிடித்துக் கொண்டாள். கமலத்தைப் பார்த்த குண்டு இன்னும் உரக்க அழத் தொடங்கினான்.

"ஏன் மாமா, உங்களுக்குக் குழந்தை குட்டி இல்லையா? குழந்தையை இப்படித் தானா தள்ளுவது?" என்று பெரியவரைப் பார்த்துக் கோபமாகக் கேட்டாள் கமலம். "உன் பிள்ளையை வளர்த்த அழகுக்கு உனக்கு வாய் வேறா?" என்று சீறினார் பெரியவர். "என்ன நடந்தது மாமா?" என்று கேட்டாள் கமலம். "என்ன நடந்ததா? உன் அருமைப் பிள்ளை வேண்டும் என்றே என் காலைப் பார்த்துக் குறி வைத்து நாலைந்து முறை கோலியால் அடித்தான். முதல் முறையானதால் போனாலும் போகிறது என்று கொண்டு வந்து விட்டேன். இனியும் ஒரு தடவை இப்படிச் செய்தால் என்ன செய்வேன் என்று எனக்கே தெரியாது" என்று கோபமாகச் சொல்லி விட்டு அவ்விடத்தை விட்டு நகர்ந்தார்.



"ரேஷன் வந்தால் அரிசிப் பஞ்சம் குறையுமா அவா?"
"அட! அரிசிப் பஞ்சம் வந்து தான் ரேஷன் வரது!"

கமலம் அலறியிடும் குண்டுவைச் சமாதானம் செய்து, "அவர் ஜோலிக்கு ஏன்டா போனாய்?" என்று கேட்டாள்.

"நான் எங்கே அவர் ஜோலிக்குப் போனேன்? நான் எங்கே குறி வைக்கிறேனோ, அங்கேயெல்லாம் அவர் காலை வைத்து விட்டு அநியாயமாக என்னிடம் சண்டைக்கு வருகிறாரம்மா" என்று தேம்பியழுதபடி பதில் கூறினான் குண்டு.

குண்டு இப்படிச் செய்வது கமலத்துக்கு முதல் அநுபவம் அல்ல. தினம் தவறாமல் இப்படித்தான் ஏதாவது ஒரு வம்புச் சண்டையை அவன் விலைக்கு வாங்கி வருவான். கோலிச் சம்பவத்துக்கு முதல் நாள் இப்படித்தான் ஒரு பழக்காரன் வீடு இடிந்து விழுந்து விடும் போல் கத்திக் கொண்டு அவன் காதை முறுக்கியபடி உள்ளே அழைத்து வந்தான். ஏனோ குண்டுவின் காது மற்றவர்களின் கவனத்தைக் காந்தம் போல் இழுத்தது! அவன் தப்பி ஓட நினைத்தாலும் அவன் காது மட்டும் இப்படி எதிராளியிடம் சிக்கிக் கொள்ளும். இப்படி அடிக்கடி பலர் திருகும் அவன் காதைத் திருகியதாலோ என்னவோ, அவன் காதுகள் முயலின் காதுகள் போல் நீண்டிருந்தன.

பழக்காரனைப் பார்த்த கமலம் குண்டுவின் காதை அவன் கையிலிருந்து விடுவித்தபடி, "என்னப்பா, விஷயம்?" என்று கேட்டாள். "பழம் வாங்கிக் கொண்டு பணம் தராமல் ஓடுகிறானம்மா" என்றான் அவன்.

கமலம் குண்டுவை விசாரித்தாள்.

"பச்சைப் பழம் வேண்டுமென்று கேட்டேன். ஆறு காசு கேட்டான். 'சரி, கொடு' என்றேன். கொடுத்தான். அந்தப் பழம் நன்றாக இல்லை. அதைத் திருப்பிக் கொடுத்து விட்டு அதற்குப் பதிலாக மஞ்சள் பழம் கேட்டேன். கொடுத்தான். வாங்கிக் கொண்டு நடந்தேன். காசு கேட்கிறான். பாரம்மா" என்றான்.

"பின்னே காசு தர வேண்டாமா?" என்று கேட்டாள் கமலம்.

"எதற்கம்மா? நீயும் அவனைப் போல் பேசுகிறாயே! பச்சை பழம் வேண்டாம் என்று கொடுத்து விட்டு அதற்குப் பதிலாகத்தானே மஞ்சள் பழம் வாங்கிக் கொண்டேன்?" என்றான் குண்டு.

"பச்சை பழத்துக்குப் பணம் தர வேண்டாமா?" என்றாள் கமலம்.

"எதற்கம்மா? அதைத்தான் வேண்டாம்' என்று திருப்பிக் கொடுத்துவிட்டேனே!" என்றான் குண்டு.

"மஞ்சள் பழத்தை வாங்கிக் கொள்ளவில்லையா?" என்றான் அவன்.

"பச்சைப் பழத்துக்குப் பதிலாகத்தானே வாங்கினேன்" என்றான் குண்டு.

எவ்வளவு சொன்னாலும் குண்டுவுக்குப் புரியாது என்று தெரிந்த கமலம் பழக்காரனுக்குப் பணம் கொடுத்து அனுப்பினாள்.

"மணி! பண்டிகைக்கு வரும்படி உன் மாமனார் கடிதம் எழுதியிருக்கிறார். குண்டுவையும் அழைத்துக் கொண்டு நாளை ரெயிலில் ஏறிப் போய் விடுவா" என்றார் சாம்பசிவம். தனியாகத் தன் மனைவி சரசுவுடன் பேசிப் பழகுவதற்கு அந்தப் பண்டிகையை எதிர்நோக்கியிருந்த மணிக்கு இந்தச் செய்தி



"இந்த அரசாங்கம் நம்ம வரி யைத் தின்று வாழுது. நம்ப அப் படி வாழ முடிகிறதா? அரிசி யல்லவா தின்ன வேண்டியிருக்கு!"

சற்று அதிர்ச்சியைத் தந்தாலும், தாய் தந்தையர் விருப்பத்துக்கு மாறாக நடந்து அறியாத மணி குண்டுவுடன் மாமனார் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தான்.

மாமனார் வீட்டில் மணியை ஒரு நிமிஷம் கூடக் குண்டு தனித்து இருக்க விடவில்லை. இதைப் பார்த்த சரசுவுக்குப் பெரிய ஏமாற்ற மாய் இருந்தது. குண்டுவின் மீது கோபமும் வந்தது. எனினும் சமாளித்துக் கொண்டு தந்திரமாகக் குண்டுவைத் தன் தம்பி ராமு வுடன் விளையாட அனுப்பி விட்டுக் காப்பியை எடுத்துக் கொண்டு மணியிடம் சென்று நாணத்துடன் அவன் பக்கத்தில் நின்றாள்.

"சரசு! நீ மிகவும் கெட்டிக்காரி. எப்படியோ குண்டுவை அனுப்பி விட்டாயே?" என்று அவள் கையிலிருந்து காப்பியைப் பெற்றுக் கொண்டு, "இப்படி உட்கார் சரசு" என்றான்: அவளும் மிகவும் வெட்கத்துடன் அவன் பக்கத்தில் உட்காரப் போனாள்.

அப்போது குண்டுவைத் தூக்கிக்கொண்டு ராமு வந்தான். உட்காரப் போன சரசு சட்டென்று விலகி நின்று, "என்னடா ராமு! விளையாடச் சொன்னேனே. இங்கே ஏன் வந்தீர்கள்?" என்று கோபத்துடன் கேட்டாள்.

"இந்த அறைதான் விசாலமாக இருக்கிறது. நாங்கள் இங்கேயே விளையாடிக் கொள்கிறோம்" என்று சொல்லிய குண்டு ராமுவைத் தூக்க ஆரம்பித்தான். "அப்படியானால் இந்த அறையிலேயே விளையாடிக் கொண்டிருங்கள்" என்று சொல்லிய சரசு தன் கணவனைப் பார்த்து, "உங்களை அப்பா அழைத்தார்கள். அவர் அறையில் காத்திருக்கிறார். இப்போதே வரச் சொன்னார்" என்று சொல்லி உள்ளே சென்று விட்டாள்.

அவள் போன சிறிது நேரத்துக்கெல்லாம் மணி அவளைத் தேடித் தன் மாமனார் அறைக்குச் சென்றான். அவளும் அவன் வருகையை ஆவலுடன் எதிர்பார்த்தபடி நின்று கொண்டிருந்தாள், ஏதோ வேலை செய்பவள் போல் பாசாங்கு செய்தபடி. உள்ளே வந்த மணி அவளை அன்புடன் அழைத்துச் சோபாவில் தனது பக்கத்தில் உட்கார வைத்து ஒரு நிமிஷங்கூட ஆகி இருக்காது. குண்டு கனை விட்டபடி உள்ளே வரச் சரேல் என்று எழுந்து நின்றாள் சரசு. "என்னடா ஆயிற்று? ஏன் கனை இடுகிறாய்?" என்று எரிச்சலுடன் கேட்டான் மணி.

"டாக்டர் விளையாட்டு விளையாடுகிறோம் அல்லவா. டாக்டர் என்றால் இன்ஜெக்ஷன் செய்ய வேண்டாமா? அதனால் ஒரு ஊசியா ராமுவின் தோளில் குத்தினேன். அவன் அடிக்கிறான்" என்றான் குண்டு. "ஊசியால் குத்தினால் அடிக்காமல் சும்மா இருப்பார்களா?" என்றான் மணி.

"டாக்டர் எத்தனை பேருக்கு ஊசி குத்துகிறார். அவர்களெல்லாம் டாக்டரை அடிக்கிறார்களா? பணமல்லவா கொடுக்கிறார்கள்?" என்றான் குண்டு.

அவனோடு பேசிப் புண்ணியம் இல்லை என்று புரிந்து கொண்ட மணி அவனைச் சமாதானப்படுத்தி, விளையாடப் போகச் சொன்னான். ஆனால் அவன் போக மறுத்து அவனோடு அட்டை போல் ஒட்டிக் கொண்டான்.

மறு நாள் அவன் ஊர் திரும்பும் போது சரசு அவனிடம் ஒரு சீட்டு எழுதிக் கொடுத்தாள். அதில் வரப்போகிற தலை தீபாவளிக்காவது அவன் தனியாக வரவேண்டும் என்று கேட்டுக் கொண்டிருந்தாள்.

தீபாவளிக்கு இரண்டு தினங்களுக்குமுன் சாம்பசிவம் மணியை அழைத்து, "நாளைக்கு நீ மாமனார் வீட்டுக்குப் புறப்பட வேண்டும் நினைவிருக்கிறதா?" என்றார்.

"இருக்கிறதப்பா!" என்றான் மணி.

"குண்டுவும் உன்னோடு வரவேண்டும் என்று ஆசைப்படுகிறான். அதனால்...." என்று அவர் சொல்லி முடிக்குமுன் மணி, "நான் இன்றைக்கே மதராஸ் போய் என் நண்பனைப் பார்க்க வேண்டுமப்பா. வேலை விஷயம். நூறு ரூபாய் சம்பளத்தில் வேலையாம். அதிர்ஷ்டம் இருந்தால் கிடைக்கலாமாம்" என்றான்.

"அப்படியானால் உடனே புறப்படு" என்று அவனிடம் நூறு ரூபாய் கொடுத்து அனுப்பினார் சாம்பசிவம்.

மணியின் சந்தோஷத்துக்கு எல்லையில்லை: "இன்று இரவே சேலம் சென்று விடலாம். மதராஸ் போய்ச் சேலம் திரும்பிவரும் டிக்கட் பணத்தை உத்தேசித்துத்தான் அப்பா நூறு ரூபாய் கொடுத்திருக்கிறார். அந்தப் பணத்துக்கு ஒரு நல்ல ஜாக்கெட் துணியைச் சரசுவுக்கு வாங்கிச் செல்லலாம்" என்று திட்டம் போட்டுப் புறப்பட்டான் மணி.

அன்றிரவு 11–30 மணிக்குத் தன் மாமனார் வீடு சேர்ந்தான். ஒரு நாள் முன்னதாக அவன் வந்ததைக் குறித்துச் சரசுவுக்கு அளவு கடந்த மகிழ்ச்சி. அவன் வாங்கி வந்த ஜாக்கெட் துணியைப் பார்த்ததும் அவள் மகிழ்ச்சி இரட்டித்தது. தம்மை மறந்து தம்பதிகள் அளவளாவிக் கொண்டிருந்தனர்.

தங்கள் வீட்டு வாசல் முன் ஒரு கார் வந்து நிற்பதை மாடி மீதிருந்து இருவரும் பார்த்தனர். அதிலிருந்து குண்டுவும் சாம்பசிவமும் இறங்குவதைக் கண்ட மணிக்குத் தலை சுற்ற ஆரம்பித்தது.

"மணி ப்ளூ மவுண்டனில் புறப்பட்ட கையோடு குண்டு அடம் பிடித்துப் பெரிய ரகளை செய்து விட்டான். அதனால் அவனை நான் கோச்சின் எக்ஸ்பிரஸில் அழைத்துக் கொண்டு வந்து விட்டேன். மணி நாளைக்கு வருவான்........"

அதற்கு மேல் சாம்பசிவம் என்ன சொன்னார் என்பது மணிக்குத் தெரியாது. அதற்குள்தான் அவன் தலை பலமாகச் சுற்றத் தொடங்கி விட்டதே!

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

# மக்ளீன்ஸ்

## உபயோகித்து அந்த அதிகமான வெண்மையைப் பாருங்கள்!

### இவ்விதம் சோதியுங்கள்



1. உங்கள் நாக்கினால் பற்களைத் தடவுங்கள். அவற்றின் மேலுள்ள பாசியை உணர்கிறீர்களா?
2. இப்போது, மக்ளீன்ஸ் பற்பசைகொண்டு பற்களைத் தேயுங்கள். அது பற்களைச் சுத்தம் செய்து, வெண்மையாக்கிக் காப்பதுடன் உங்களுக்குப் புதுமையான உணர்ச்சியை அளிப்பதை உணர்வீர்கள்.
3. அந்த அதிகமான சுத்தத்தை உணருங்கள்... அந்த அதிகமான வெண்மையைப் பாருங்கள்.




**மக்ளீன்ஸ் பழுப்பு நிறமடைந்த பற்களை வெண்மையாக்குகிறது!**

